


## எவ்வளவு நிர்மல மானது பாருங்கள்

வெளிச்சத்துக்கு எதிரே பிடித்தால் பியர்ஸ் சோப்புக் கட்டியின் மூலமாக நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும்! பியர்ஸ் நிர்மலம் என்றால் அது தான்! க்ளிஸரின் கலந்த பியர்ஸ் சோப் பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பூரணமான பாதுகாப்புத் தருகிறது.



## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்

பியர்ஸ், சருமத்துக்குப் புது மெருகும் போஷாக்கும் அளித்துப் பல்லாண்டுகள் மிருதுவாகவும் எழிலோடும் வைத்திருக்கிறது. அந்தக் காரணத்துக்காகவே, உலகெங்கும் உள்ள அழகிகள் பியர்ஸ் சோப்பைப் பிரதிதினமும் உபயோகித்து தமது மேனியின் நவ யௌவனக் களையைப் பாதுகாத்து வருகிறார்கள்.

பியர்ஸ் சோப்பை வழக்கமாக உபயோகப் படுத்தத் தொடங்குங்கள். அது எவ்வளவு நல்லதென நீங்களும் உணர்ந்து கொள்வீர்கள்




# பியர்ஸ் சோப்

**அசல் க்ளிஸரின் கலந்த அழகு தரும் சோப்**

லண்டனிலுள்ள ஏ & எப். பியர்ஸ் லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது TG. 84-50 TM

மலர் 16
இதழ் 11

# கல்கி

## பொருளடக்கம்

புட்டம் 20!

அக்டோபர் 14, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



# நம்பிக்கை !

நாளை வரப்போகும்

**பின்னியின்**

நவீன ரகங்களையும்

மோஸ்தர்களையும்

இன்றே எங்கள்

ஷோரூம்களிலிருந்து

வாங்குங்கள்






1. இங்கே பெங்களூர் வுல்லன் காட்டன் அண்டு சில்க் மில்லில் தயாரித்த துணி ரகங்கள் மட்டுமே விற்கப்படும்
   ஷோரூம் — ஹைகோர்ட்டுக்கு எதிரில்

2. இங்கே பக்கிங் ஹாம் அண்டு கர்னாடிக் மில்லில் தயாராகும் துணி ரகங்கள் மட்டுமே விற்கப்படும்
   ஷோரூம் — ஹைகோர்ட்டுக்கு எதிரில்

3. இங்கே பின்னி மில்லில் தயாராகும் துணி ரகங்களும் மற்றும் உயர்தர ஜவுளிகளும் விற்கப்படும்
   ஷோரூம் — 2, தம்பு செட்டித் தெரு.



**வெங்கடேஷ் வஸ்திராலயா, சென்னை - 1**



மலர் 16
இதழ் 11

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ஆண்டு
புரட்டாசி 29

# பயிர்த் தொழிலைக் கெடுக்க வேண்டாம்

பயிர்த் தொழிலில் பாடுபட்டு வரும் ஏழை விவசாயிகளுக்குச் சலுகை காட்டிச் சட்டங்கள் செய்வதை யாரும் ஆட்சேபிக்க முடியாது.

தீர ஆலோசித்து மற்றவர்களின் வாழ்க்கைத் தரத்துக்குச் சமமாக அவர்களுடைய வாழ்க்கை நிலையைச் சீர்ப்படுத்தி உயர்த்துவது முற்றிலும் நியாயமும் அவசியமுமாகும். பெருவாரியான மக்கள் வாழ்க்கையோடு போராடிக் கொண்டிருக்கும்போது சிலர் மட்டும் மிகச் சௌகரியமாக வாழ்க்கை நடத்தி வந்தால், அதை இந்தக் காலத்தில் ஒப்புக் கொள்ள முடியாது. எனவே, இதற்குத் தேவையான சட்டங்களை ஆராய்ந்து முடிவு செய்து அமுலுக்குக் கொண்டு வருவது சர்க்காருடைய கடமை யாகும்.

தாற்காலிகச் சட்டங்களினால் பயனில்லை. விவசாயத் தொழிலில் வாழ்க்கை நடத்தும் ஏழைகளுக்கு நல்லது செய்யப் போய் விவசாயத்தைக் கெடுத்துவிடக் கூடாது. பயிர்த் தொழிலுக்குப் பாட்டாளிகளின் மெய் வருத்தம் மட்டும் போதாது. பொருளை உண்டாக்கும் எந்தத் தொழிலுக்கும் மூலதனம் வேண்டும். அது போலவே, விவசாயத்துக்கும் மூலதனமும் மேற்பார்வையும் அவசியம் என்பது விவசாயத்தில் அனுபவப்பட்ட அனைவருக்கும் தெரிந்த விஷயம்.

இதைச் சென்னை சர்க்கார் கவனித்ததாகத் தெரியவில்லை. அவர்கள் அறிந்திருந்தாலும் நினைவில் வைக்கவில்லை என்றே தோன்றுகிறது. பயிர் செய்யும் நிலமானது, மனைவியைப் போல், தன்னைக் கவனிக்காதவனை விரும்பாது என்று வள்ளுவர் மிக அழகாகவும் அழுத்தமாகவும் சொல்லி யிருக்கிறார்.

"செல்லான் கிழவன் இருப்பின், நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்"

நிலத்துக்குக் கிழவனும் வேண்டும்; (கிழவன் என்றால உரிமையாளன்) கிழவனுடைய கவனிப்பும் வேண்டும்.

'இது என் உரிமை' என்ற உணர்ச்சி சொந்தக்காரனுக்கு இருக்கவேண்டும். அதற்கு வேண்டிய பணச் செலவை அப்போதுதான் அவன் தாராளமாகச் செய்வான். 'இது என்னுடையதல்ல; இந்தப் பாழும் சர்க்கார் என்னுடைய சொத்தைப் பறித்துக் குடியானவனுக்குக் கொடுத்து விட்டார்கள்' என்று நிலத்தில் தனக்குள்ள அக்கறையை இழந்து விடும்படி செய்து விட்டால், நிலத்துக்கு முதல் போட்டுச் செய்ய வேண்டிய காரியங்கள் கவனிக்கப்படாமற் போகும்; நாட்டுக்கு நஷ்டம் ஏற்படுவது நிச்சயம். பயிர் செய்யும் தொழிலாளிகளிடத்தில் போதிய மூலதனம் கிடையாது. அவர்களுக்குக் கடன் வாங்கும் சக்தியும் கிடையாது. நிலம் அவர்களுடையது அல்ல. ஆனபடியால யாரும் அவர்களுக்குப் பண உதவி செய்ய முன் வரமாட்டார்கள். நிலத்தின் உரிமையாளனுக்கோ அக்கறை இல்லை. இந்த நிலைமையில் "வந்தது போதும்" என்றுதான் பயிர்த் தொழில் நடத்தப்படும்.

பயிர் செய்யும் குடியானவர்களும் பணம் வைத்திருக்கிறார்கள்; எருவுக்கும் மற்றச் செலவுக்கும் பணம் போட அவர்களுக்குச் சக்தியுண்டு என்று வாதாடலாம். அப்படியாயின் பணம் போட்டு நிலத்தை விலைக்கு வாங்கினவனுக்கு நஷ்டமுண்டாக்கிவிட்டு, அவனுடைய நிலத்தில் விவசாயம் செய்யும் பணக்காரக் குடியானவனுக்கு அந்த நிலத்தில் பெரும்பாலான லாபத்தை ஏற்படுத்தப் பார்ப்பது என்ன நியாயம்? அதற்கு என்ன காரணம்? ஒருவனை அமுக்குவானேன்? மற்றொருவனைத் தூக்குவானேன்? குடியானவன் ஏழை என்றல்லவோ சமாதானம் சொல்லப்படுகிறது!

போதிய அளவு மூலதனம் இல்லாதவர்களிடம் நாட்டின் பயிர் நிலங்களை எல்லாம் ஒப்படைத்து விடுவது புத்திசாலித்தனமான காரியம் ஆகாது. சமுதாயத்தில் மிராசுதார்களும் இருக்க வேண்டியது அவசியம். பண்ணைக்கு வேண்டிய தொழிலாளிகளும் இருக்க வேண்டியது அவசியம். மாடும் வேண்டும்; ஏருவும் வேண்டும்; விதையும் வேண்டும்; எல்லாவற்றிற்கும் மேலாகப் பணமும் வேண்டும். ஒன்றிருந்தால் போதும், மற்றொன்று வேண்டியதில்லை என்று பிடிவாதம் பிடித்துச் சட்டங்கள் செய்வது பயிர்த் தொழிலுக்கு நன்மை செய்வது ஆகாது. வரும் பொதுத் தேர்தலில் வோட்டுக்கள் பெறுவதற்கு அது உபயோகமாகலாம்.

எந்த வரம்புக்குப் பயிர் செய்யும் தொழிலாளியின் வருமானத்தை ஏற்றலாம், எந்த வரம்புக்கு நிலத்தின் சொந்தக்காரனுடைய வருமானத்தைக் குறைக்கலாம் என்று நிர்மாணிக்கும் வேலை மிக நுட்பமான வேலை. விவசாயிகளை, அதாவது பயிர்த் தொழிலில் ஈடுபட்ட மிராசுதார்களையும் குத்தகைதாரர்களையும் பண்ணையாட்களையும் அனைவரையும் கூட்டி யோசித்து நியாயமாகத் தீர்மானிக்க வேண்டிய காரியம். தேர்தல் காலத்தில் முறைப்படியும் போதிய அளவிலும் யோசிக்காமல் அவசரமாகச் சட்டங்கள்செய்து தீர்ப்பது நியாயமாகாது.

உணவு உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும் என்று ஓயாமல் பேசப்படுகிற இந்த நாளில் இப்படிச் செய்வது மிகவும் தவறாகும்.

நம்முடைய மாகாணத்தில் பயிர் செய்யப்படும் பூமியெல்லாம் ஒரே விதமானதல்ல. வெகு காலமாகச் சில பிரதேசங்களில் நிலத்தின் சொந்தக்காரர்களுக்கு உரிய பங்கு குறைவாகவே இருந்து வருகிறது. அதிலும் நன்செய்க்கும் புன்செய்க்கும் மிக்க வேறுபாடு உண்டு. புன்செய்ச் சாகுபடி முறையே வேறு. நன்செய்ப் பயிர்த் தொழிலே வேறு. இதையெல்லாம் சட்ட சபை அங்கத்தினர்கள் அறிந்திருப்பார்களா என்பது சந்தேகம். அதிலும் தேர்தல் சமயத்தில் அறிந்திருந்ததையும் மறந்தே போயிருப்பார்கள்! நாடு முழுவதற்கும் ஒரே விதி என்று சொல்லி விடுவது மிகத் தவறாகும்.

நியாயம், நீதி என்கிற கேள்வி ஒன்றையே வைத்துக் கொண்டு வாதம் செய்து வருகிறார்கள். உணவு உற்பத்தியில் அக்கறை குறையாமலிருக்க வேண்டும் என்பதை மறந்துவிட்டு, நிலச் சட்டங்கள் வருஷத்துக்கு ஒன்றாகச் செய்து கொண்டு போவது நாட்டுக்கு நன்மை பயக்காது.

நிலச் சொந்தக்காரனும், குடியானவனும் இரு தரப்பினரும் பேசித் தமக்குள் ஒப்பந்தம் செய்து கொள்வதே எல்லா விதத்திலும் மேலான முறை. அவர்கள் இஷ்டத்துக்கு விடக்கூடாது என்று சட்டம் செய்ய ஆரம்பித்திருப்பது இந்நாட்களில் புகுத்தப்பட்ட புதிய முறை. ஒப்பந்த சுதந்திரத்தில் பிரவேசிக்கச் சட்ட பூர்வமாக ஒருவருக்கு என்ன பங்கு உண்டு? மற்றவருக்கு என்ன பங்கு? மாகாணம் முழுதும் அமுலுக்கு வரக்கூடிய விகிதாசாரம் என்ன? இவற்றையெல்லாம் ஆராய்ந்து தீர்ப்பதற்கு மிக நுட்பமான அறிவுடன் நல்ல அநுபவமும் வேண்டும்.

ஒரு தோட்டத்தைப் பயிர் செய்து வெள்ளாமை உண்டாக்க எந்த விகிதத்தில் பங்கு செய்து கொள்வோம் என்று அந்தத் தோட்டத்துச் சொந்தக்காரனும் அந்தத் தோட்டத்தைப் பயிர் செய்ய விரும்பும் குத்தகைதாரனும் எளிதில் பேசி முடித்துக் கொள்வார்கள். இதை அவர்களிடம் விட்டு விடுவதே நல்ல முறை. இந்தக் காலத்தில் பயிர் செய்யும் தொழிலாளிகள் ஏமாந்துபோகக்கூடியவர்கள் அல்ல. ஒப்பந்தம் இல்லாத விவகாரங்களில் வேண்டுமானால் சர்க்கார் நியாய வார விகிதங்களை விதிக்கலாம். அதற்கு மேல் செய்வது பலாத்காரமாகும். பயிர்த்தொழில் கெட்டுப் போகும். 'எனக்கு அக்கறை இல்லை' என்று ஒரு புறம் நிலச் சொந்தக்காரனும், 'எனக்கு என்ன கவலை?' என்று மற்றொருபுறம் பயிர் செய்பவனும் அசிரத்தையாயிருந்து விடுவார்கள்; பிறகு நிலம் கவனிக்கப்படாமற் போய் விடும்.

# நியாயம் வழங்குங்கள்!

பாரத சர்க்கார் தாங்கள் எடுத்துக் கொண்ட இன்ஷ்யூரன்ஸ் இலாக்கா சிப்பந்திகளின் சம்பள விகிதாசாரங்களைப் பார்த்துவிட்டு, ''ஒன்றரை லட்ச ரூபாய் அதிகமாகச் செலவழிக்க வேண்டியிருக்கிறதே'' என்று ஓலமிடுகிறார்கள்.

ஆனால் மேற்படி இலாக்கா சிப்பந்திகளோவெனில், ''எங்களில் எண்பது சத விகிதம் பேர் இந்தப் புதுமுறை சம்பள விகிதாசாரத்தினால் பாதிக்கப்படுகிறோமே'' என்று அங்கலாய்க்கிறார்கள். கூட்டம் போட்டுக் கிளர்ச்சி செய்கிறார்கள்; வேலை நிறுத்தம் செய்யப் போவதாகவும் கூறுகிறார்கள்.

இத்தகைய நிலைமை எப்படி ஏற்பட்டது?

இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளைத் தேச உடைமை யாக்கியபோது, மக்கள் மனத்தில் சில கேள்விகள் எழுந்தன. ''சர்க்கார் செய்த இந்தக் காரியம் நல்ல காரியம்தானா? சர்க்காரினால் இன்ஷ்யூரன்ஸ் இலாக்காவைத் திறம்பட நடத்த முடியுமா? அல்லது சென்னை சர்க்காரின் பஸ் நிர்வாகத்தைப் போல்தான் முடியுமா?'' என்று பலரும் சந்தேகப்பட்டார்கள். அப்போது கொஞ்சமும் சந்தேகமோ மனக் கிலேசமோ அடையாமல், சர்க்கார் செய்த காரியத்தைப் பரிபூரணமாக வரவேற்றவர்கள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் வேலை செய்து வந்த சிப்பந்திகள்தான்.

சில இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி சிப்பந்திகள் நல்ல சம்பளமே வாங்கி வந்தனர். ஆயினும் முதலாளிகளின் அக்கிரமத்தை அவ்வப்போது கண்டித்து வந்தனர். குறைந்த சம்பளம் வாங்கி வந்தவர்களுக்காக அநுதாபப்பட்டு, அவர்கள் கிளர்ச்சியில் பங்கெடுத்துக்கொண்டு போராடி வந்தனர்.

# அபாயம் விலகுமா ?




**கைத்தறி நெசவுத் தொழிலுக்கு நாற்புறத்திலும் அபாயம் சூழ்ந்துகொண்டு வருகிறது.**

இத்தகைய சமயத்தில் சர்க்கார் திடீரென்று 'இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் தேசத்தின் பொதுச் சொத்து' என்று அறிவித்தவுடன் இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகளில் பெரும்பான்மையோர் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தனர்.

பொது மக்களின் பணம் வீண் விரயமாவது இனி தடுக்கப்படும் என்று அவர்கள் சந்தோஷப்பட்டனர். தங்கள் சம்பள விகிதங்கள் உயர்த்தப்படும் என்றும், குறைந்த பட்சம் ரிஸர்வ் பாங்கி சிப்பந்திகளின் சம்பளமாகிலும் தங்களுக்குக் கிடைக்கும் என்றும் நினைத்து ஆனந்தப்பட்டனர் !

தனி முதலாளிகளின் உடைமையாக இருந்தபோது, ஒவ்வொரு கம்பெனியிலும் ஒவ்வொரு மாதிரி சம்பள விகிதாசாரங்கள் இருந்து வந்தன. இப்போது தேச உடைமையாக்கப்பட்ட பின் சம்பள விகிதாசாரம் ஒரே மாதிரி இருக்க வேண்டும் என்று தீர்மானித்து ஒரு பட்டியல் வெளியிட் டிருக்கிறார்கள். அதன்படி எண்பது சதவிகித இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிச் சிப்பந்திகளின் சம்பளங்கள் குறைக்கப்படுகின்றன !

அடிப்படைச் சம்பளம் குறைந்தாலும், மற்ற 'அலவன்ஸ்'கள் பல சேர்த்து இப்பொழுது அவர்கள் பெற்றுவரும் சம்பளத்தொகைக்குக் குறைந்து போகாமல் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள் !

ஆனால் இருபது சதவிகிதம் பேர்கள் இது வரை பெற்று வந்த சம்பளத்தை விட இனி அதிகமாகப் பெற்று வருவார்கள். இவ் வகையில்தான் ஒன்றரை லட்சம் ரூபாய் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனுக்கு அதிகச் செலவாகிறது ! அவ்வளவுதான் !

பெரும்பாலான சிப்பந்திகள் இதுவரை என்ன சம்பளம் வாங்கி வருகிறார்களோ அதே தொகைதான் இனியும் வாங்குவார்கள்; இன்னும் சிலர் அதிகமாகக் கூடப் பெறுவார்கள் என்றால் அதற்கு இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகள் ''சம்பளம் குறைந்து விட்டது!'' என்று ஏன் கூறுகிறார்கள் ?

பெரும்பாலான கம்பெனிகள் சிப்பந்திகளுக்கு இதுவரை போனஸ் வழங்கி வந்தது. இனி கார்ப்பரேஷன் போனஸ் கொடுக்கும் வழக்கத்தை முற்றிலும் நிறுத்திவிடப் போகிறது. ஊழியர்களுக்கு இது நஷ்டமாயினும் தேச நலனைக் கருதி இந்த நஷ்டத்தை அவர்கள் ஏற்கத் தயாரா யிருக்கிறார்கள்.

ஆனால் அடிப்படைச் சம்பளத்தில் பெரும் பகுதி குறைந்து விடுவதைப் பற்றித்தான் அவர்கள் கிளர்ச்சி செய்கிறார்கள்.

அடிப்படைச் சம்பளத் தொகையின் ஆதாரத்தின் பேரில்தான் பிராவிடண்ட் நிதி சேர்க்கிறார்கள். நூறு ரூபாய் சம்பளம் என்றால் அதில் பத்து ரூபாய் பிராவிடண்ட் நிதிக்கு உத்தியோகஸ்தர் செலுத்தினால், கம்பெனி

பத்து ரூபாய் செலுத்தும். இப்போது அடிப்படைச் சம்பளத்தை ரூபாய் ஐம்பத்தைந்தாகக் குறைத்து விட்டால் பிராவிடண்ட் நிதியில் சேரும் தொகையும் குறைந்து போய் விடும் அல்லவா? ஆகவேதான், 'அடிப்படைச் சம்பளத்தைக் குறைக்காதீர்கள்' என்று இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகள் சொல்லுகிறார்கள்.

இன்ஷ்யூரன்ஸ் என்பதே மக்களின் எதிர்கால க்ஷேமத்தை வைத்து நிர்மாணிக்கப்படும் ஸ்தாபனம். ஆனால் அந்த ஸ்தாபனத்தில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்கள் மட்டும் தங்கள் எதிர்கால நலனை அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டாமா? அவர்களைப் பார்த்து, ''தியாகம் செய்யுங்கள், அதைப் பற்றி நினைக்காதீர்கள்'' என்று சொல்லுவது என்ன நியாயம்?

இதற்காகவேதான் இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகள், குமாஸ்தாக்கள், புதுச் சம்பள விகிதத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறார்கள்.

இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனில் வந்து சேரும் தொகை மக்களின் வரிப்பணமல்ல; மக்களின் சேமிப்புப் பணம். அதிலிருந்து ஊழியர்களின் நியாயமான கோரிக்கைக்குச் சர்க்கார் செவிசாய்த்து அவர்கள் சம்பள விகிதத்தை உயர்த்துவதே நியாயமாகும்.

தேச உடைமையாகியுள்ள இன்ஷ்யூரன்ஸ் க்ஷேம நிதி ஸ்தாபனத்துக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. முன்பு இருந்ததை விட இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தை விரிவாக்க நல்ல வாய்ப்பிருக்கிறது. ஏராளமான மக்கள் மனம் உவந்து, தேசப்பணியாகவும் கடமையாகவும் கருதி இன்ஷ்யூர் செய்து கொள்ள முன் வருவார்கள். இப்படிப் பல துறையிலும் விரிவு படுத்த வேண்டிய ஒரு ஸ்தாபனத்தைச் சேர்ந்த சிப்பந்திகளுக்கு நல்ல உற்சாகமூட்டி வேலை வாங்கவேண்டியது அவசியம் அல்லவா?

இந்தச் சமயத்தில் இன்ஷ்யூரன்ஸ் ஊழியர்களின் உற்சாகத்தைக் கெடுத்து, அதிருப்தியை உண்டாக்கி வருவது நல்லதல்ல. அன்றாடம் பொது மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டிய ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் அதிருப்தியோடிருந்தால் நிர்வாகம் ஊழல் மயமாகி விடும். இன்ஷ்யூரன்ஸைச் சர்க்கார் எடுத்துக் கொண்டதால் ஊழல் தான் மலிந்தது என்ற அவப்பெயர் பொதுமக்களிடம் ஏற்பட்டு விட்டால் இன்ஷ்யூரன்ஸ் விஸ்தரிப்பு பாதிக்கப்படும்.

ஆகவே, பொது மக்களிடையே நல்ல பெயர் வாங்குவதற்காவது சர்க்கார் தங்களுடைய சிப்பந்திகளின் சம்பள விகிதங்களை மாற்றியாக வேண்டும்.

# தொத்து நோயா?

நமது மதிப்பிற்குரிய நண்பரும், தமிழரசுக் கட்சியின் தலைவருமான திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் வடக்கெல்லை சம்பந்தமாகப் பெரும் கிளர்ச்சி செய்து வருகிறார்.

ஆந்திர மாகாணம் ஏற்பட்டு மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. எனினும் தமிழ் நாட்டின் வடக்கெல்லையில் இருப்பவர்கள் தாங்கள் தமிழ் நாட்டில் சேரப் போகிறவர்களா, அல்லது ஆந்திர நாட்டில் சேரப் போகிறவர்களா என்று புரியாமல் இருக்கின்றனர். இந்தச் சந்தேகாஸ்பதமான நிலையை ஒரு வரம்பின்றி நீடித்துக் கொண்டிருக்கச் செய்வது தவறு என்று திரு ம. பொ. சி. சொல்லுகிறார். இரு ராஜ்ய சர்க்கார் அதிகாரிகளும் எல்லைப் பிரச்னை சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வர முடியாமல் கலைந்து விட்டனர். ஆகவே, மத்திய சர்க்காரின் முழு ஆதரவு பெற்ற ஒரு எல்லைக் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்பதே திரு ம. பொ. சி. அவர்களின் கோரிக்கை.

இந்த எல்லைக் கமிஷனை ஏற்படுத்தும்படி வற்புறுத்தும் காரியம் சென்னை சர்க்காருடையது. சென்னை சர்க்கார் ஒருவிதச் சுறுசுறுப்புமின்றி இருக்கிறார்களே என்று பொறுக்க முடியாமல், திரு ம. பொ. சி. வடக்கெல்லைத் தமிழர்களின் சார்பில் கிளர்ச்சி செய்கிறார்.

இப்போதெல்லாம் கிளர்ச்சி யென்றால் சிறை செல்லுவது என்று ஏற்பட்டு விட்டது. அந்த முறையில் இந்தக் கிளர்ச்சியும் நடைபெறுகிறது. சத்தியாக்கிரக முறை நண்பர்களை ஊக்கப்படுத்தும். அந்த நோக்கத்துடன் திரு ம. பொ. சி. சத்தியாக்கிரகம் செய்கிறார்.

ஆனால் சென்னை சர்க்காரின் மேல் தாம் கொண்டுள்ள குறையைத் திரு ம. பொ. சி. நேருஜியின் மேல் காட்டுவதில் பயனில்லை.

'நேருஜியின் கடிதத்தைத் தீக்கு இரையாக்கப் போகிறேன்' என்று அவர் கூறியதாகத் தெரிய வருகிறது. இது பொது மக்களுக்குப் பிடிக்காது. கசப்பை உண்டாக்கியிருக்கிறது. தமிழ்ப் பண்பைப் பற்றியே பேசி வரும் திரு ம. பொ. சி. இந்த எரிப்புக் கொள்கையைப் பிடித்துக் கொண்டது திராவிடக் கழகத்தின் தொத்து வேகம். திரு ம. பொ. சி.க்குத் தமிழ்நாட்டிலே இன்று

செப்டம்பர் மாதச் சிறுகதைப் போட்டி

நூறு ரூபாய் பரிசு பெற்ற

**முத்தாலம்மனின் கண்ணீர்**

என்னும் கதை அடுத்த இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: **திரு கே. பி. நாராயணன், 95, வக்கீல் புதுத் தெரு, மதுரை.**




சூயஸ் கால்வாய் உபயோகிப்போர் சங்கத்தைச் சக்தி வாய்ந்ததாகச் செய்து எகிப்தை மிரட்ட வேண்டுமென்ற திட்டத்தை டல்லஸ் ஆதரிக்கவில்லை. — செய்தி.

---

செல்வாக்கு இருக்கிறது என்றால் அதற்குக் காரணம் அவர் தமது கொள்கைகள் எதையும் பண்பட்ட முறையில் பேசுகிறார் என்பதற்குத் தான். அந்த நல்ல பெயரை அவர் கெடுத்துக் கொள்வது நமக்கு வருத்தம் தருகிறது. பண்புக்குட்பட்ட கிளர்ச்சியே சாலச் சிறந்தது என்பதை, காந்தி மகான் தலைமையில் சுதந்திரப் போராட்டத்தில் இறங்கிய திரு ம. பொ. சி. அவர்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை யல்லவா?

# காமராஜர் ஏமாறவில்லை!

ஆந்திர ராஜ்ய ஜயந்தியைச் சென்ற அக்டோபர் மாதம் முதல் தேதி ஆந்திர சர்க்கார் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள்.

இந்த ஆண்டு விழாவுக்கு நமது சென்னை ராஜ்ய முதன் மந்திரி திரு காமராஜரும் விஜயம் செய்து விழாவைச் சிறப்பித்திருக்கிறார். அத்துடன் அவர் அங்கே மிகப் பிரமாதமாகப் பேசி எல்லோருடைய உள்ளங்களையும் குளிரவும் செய்து விட்டார் என்று பத்திரிகைச் செய்திகள் மூலம் தெரிய வருகிறது.

"தமிழ்நாடு ஆந்திராவுடன் இணைந்து விடுவதை நான் ஆதரிப்பேன்" என்று திரு காமராஜர் கூறிவிட்டார்!

இந்தச் செய்தியைப் படித்ததும், "என்ன? என்ன? காமராஜர்கூட தட்சிணப் பிரதேசத் திட்டத்தை ஆதரித்துப் பேசிவிட்டாரே!" என்று வியப்படையலாம்.

தமிழ் நாட்டில் காங்கிரஸ்காரர்களுக்குத் திரு காமராஜர் வாய்ப் பூட்டுப் போட்டார். "பன்மொழிராஜ்யத்தைப்பற்றிப்பேசாதே!" என்றார். "'தமிழ்நாடும் கேரளமும் இணைவது நலம்!' என்று காரண காரியங்களை எடுத்துக் கூறி விளக்காதே" என்று கூறினார். இந்தத் தமது கொள்கையைப் புனித விஜயா அடிகளையும் ஆதரிக்கும்படி கேட்டுக் கொண்டு, "தட்சிணப் பிரதேசத்தைப் பற்றிப் பேசாதே!" என்று தமிழ் நாட்டு மந்திரிகளுக்கு அறவுரை போதிக்கச் செய்தார். இப்படி யெல்லாம் வெற்றிகரமாகச் செய்த திரு காமராஜர், கடைசியில் ஏமாந்து போய் விட்டாரே! அவரே பன்மொழி ராஜ்ய இணைப்புப் பேச்சுக்கு ஆதரவு அளித்து விட்டாரே என்று எண்ணலாம்!

திரு காமராஜர் அப்படியெல்லாம் ஏமாந்து போகிறவர் அல்ல. தமிழ்நாட்டின் எல்லைக்

# களைப்புற்ற
# தந்தையர்களுக்குத்
# தேநீர்



தந்தையர்களே — நீங்கள் நாள் முழுதும் வேலை செய்து களைப்புற்று வீடு திரும்பிய பொழுது, புத்துணர்ச்சியூட்டும் ஒரு கோப்பை தேநீர் கொண்டு தெளிவடையுங்கள் அது வெகு விரைவில் உங்கள் சோர்வையகற்றி, குழந்தைகளின் சிரிப்பொலி, நண்பர்களின் அரட்டை இவை நிறைந்த ரம்மியமான மாலை நேரத்தை எதிர்பார்க்கச் செய்கிறது. ஆம், தேநீர் உங்களுக்கு மலர்ச்சியளிக்கிறது. அத்துடன் உங்கள் வீட்டையும் மலரச் செய்கிறது.



**நான்தான் டீ** — நான் குடும்பத்தை ஒன்று சேர்க்கிறேன்



ருன்தான் தட்சிணப் பிரதேசத்தைப் பற்றியோ, பன்மொழி ராஜ்யப் பிரேரபணையைப் பற்றியோ பேச வேண்டாம் என்றார். அந்த விதியை அப்படியே கடைப்பிடித்துத் தமிழ்நாட்டு எல்லையைத் தாண்டிய பிறகு தான் ஆந்திர நாட்டின் தலைநகரான கர்நூலில் பன்மொழி ராஜ்யத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்திருக்கிறார் நமது முதன் மந்திரி!

# புது வாழ்வு

சென்ற வாரம், தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் நவராத்திரித் திருவிழா வெகு கோலாகலமாகக் கொண்டாடப்பட்டிருக்கும். இந்தக் கலைவிழாவுக்குச் சிகரமாக ஒன்பதாம் நாள் அமைகிறது. அன்று கலைத் தேவியையே போற்றி வணங்குகிறோம்; சரஸ்வதி பூஜை யென்று கொண்டாடுகிறோம்.

ஆனால் நாம் கலைமகளைச் சித்திரத்திலும் சிற்பத்திலும் ஏட்டிலும் பாட்டிலும் இருப்பதாக மட்டும் கருதுவதில்லை. தொழிற்கலைக்கும் அவளே தெய்வம். ஆகவே தான் பண்டிதன் ஏட்டிலே கலைமகளைக் கண்டால் தொழிலாளி ஆயுதத்திலே அத் தெய்வத்தைக் காண்கிறான். தொழிலுக்குரிய கருவிகளையெல்லாம் வைத்துக் கும்பிடுகிறான். ஆயுத பூஜை செய்கிறான்.

தொழில்களுக்கெல்லாம் முதல் தொழில் உழவுத் தொழில். ஒரு மணி விதையை விதைத்து நூறு மணியை விளையச் செய்யும் அற்புதக் கலைத் திறமையைக் கையில் பெற்றவன் உழவன். அதனால்தான் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்,

"நாடிப் புலங்கள் உழுவார் கரமும்......
... ... ... ... ... ... ... ...
... ... ... ... உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலேஉன்
பாதம் அடைக்கலமே!"

என்று பாடி உழவுத் தொழிலுக்கு ஏற்றம் அளித்தார்கள். பாரதம் சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து பாரதத்தின் கண்கள் எல்லாம் உழவுத் தொழில் புரியும் உழவுக் குடும்பத்தையே நோக்கியிருக்கின்றன. புனித வினோபா அடிகள் நிலமில்லாத உழவனுக்கு நிலத்தை வாங்கித் தருவதற்குப் பாத யாத்திரை செய்து வருகிறார்கள்.

ஒரு விவசாயக் குடும்பத்தை இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்குகிறார் ஓவியர் கனுதேசாய். விவசாயிகளுடைய ஆனந்தமே சமுதாயத்தின் ஆனந்தம் அல்லவா?

# பனித்துளி

"வரும் பொதுத் தேர்தலில் இப்போதுள்ள பழைய காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களில் மூன்றில் ஒரு பங்கு பேரை மாற்றிப் புதிய ஆசாமிகளுக்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படும்." —செய்தி

**ஏன்? அந்த மூன்றில் ஒரு பங்கு அங்கத்தினர்கள் இப்போதைய ஆட்சியினருக்கு எதிரிடையாகி விட்டார்களோ?**

★

"பிரிட்டிஷ் மாஜி பிரதமர் அட்லியும் அவர் மனைவியாரும் அக்டோபரில் சென்னைக்கு விஜயம் செய்து தமிழகத்தின் பெருமைகளைக் காண்பார்கள்."
—செய்தி



**அட்லியும் அவர் மனைவியாரும் வரும் போது தமிழகத்தின் பெருமையான இட்லியும் சாம்பாரும் சாப்பிட்டுப் பார்ப்பார்களா என்று கேட்கப்படுகிறது!**

"பெண் டாக்டர்கள் பூ வைத்துக் கொள்ளக் கூடாது. அவ்வாறு செய்தால் மற்ற வாசனையைத் தெரிந்து



கொண்டு வியாதியைக் கண்டு பிடிக்க இடையூறு யிருக்கும்."
**—டாக்டர் லட்சுமணசாமி முதலியார்**

**இப்போதெல்லாம் பெண்கள் வைத்துக் கொள்ளும் பூக்களில் வாசனையே கிடையாது என்பதை டாக்டர் முதலியார் அறியார் போலும்!**

★

"சங்கு குளிப்போரின் சங்கத்தார் வேண்டுகோளுக்கு இணங்கிச் சர்க்கார் அவர்களுடைய ஊதியத்தைச் சங்கு ஒன்றுக்கு ஏழு அணாவாக உயர்த்தியிருக்கிறார்கள்." —செய்தி

**இந்த வெற்றியை மேற்படி சங்கத்தார் "சங்கு கொண்டே வெற்றி ஊதுவோமே!" என்று பாடிக் கொண்டாடலாமே!**

# சம உரிமைப் போராட்டம்

மொழி விஷயத்தில் யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் எவ்வளவு தூரம் மனக்கசப்பு அடைந்திருக்கிறார்கள் என்பதற்கு அடையாளமாக இவ்வாரம் உள்நாட்டு மந்திரி ஸ்ரீ ஏ. பி. ஜயசூரியா முதல் முறையாக வட இலங்கைக்கு விஜயம் செய்தபொழுது ஆயிரக்கணக்கானவர்கள் கறுப்புக் கொடிகளைக் காட்டி ஆர்ப்பாட்டம் நடத்தினர். "மந்திரியே திரும்பிப் போ! சிங்களத்துடன் தமிழ் மொழிக்குச் சம அந்தஸ்து அளித்துவிட்டு இங்கே வா!" என்று எழுதிய அட்டைகளுடன் அவர்கள் கோஷம் செய்துகொண்டு தெருத் தெருவாக அணிவகுத்துச் சென்றார்கள். இந்த ஆர்ப்பாட்டங்களின் பயனாக, மந்திரி ஸ்ரீ ஜயசூரியா வட இலங்கை பள்ளிக்கூடங்களுக்கு விஜயம் செய்ய இருந்ததைக் கைவிட்டார்.

அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலத்தின் ஆதரவிலேயே இந்தக் கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. தமிழ் அரசுக் கட்சியோ கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டங்களில் கலந்து கொள்ளவில்லை. மந்திரியின் விஜயம் சம்பந்தமான விருந்து வைபவங்களையெல்லாம் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் பகிஷ்கரித்தார்கள். அதே சமயம் தங்களுடைய தொகுதிகளின் தேவைகளை மந்திரிக்கு எடுத்துரைப்பதற்காக அவரை வரவேற்பதற்கு நடந்த பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டார்கள். இந்தக் கூட்டங்களில் மந்திரி பேசியபொழுது தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு அரசாங்கம் ஒருபோதும் பாதகம் செய்யாதென்றார். தமிழர்களின் உரிமைகள் புறக்கணிக்கப்பட மாட்டாதென்றும் மந்திரி ஸ்ரீ ஜயசூரியா கூறினார். தனிச் சிங்கள மசோதா சட்டமாகிய பின்னர் ஒரு மந்திரி துணிந்து யாழ்ப்பாணத்துக்கு விஜயம் செய்தது இதுவே முதல் முறையாகும்.

* * *

இலங்கை முற்போக்கு எழுத்தாளர்கள் சங்கமும் வேறு சில சங்கங்களுமாகச் சேர்ந்து இவ்வாரம் கொழும்பில் பாரதி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடின. இதற்காக இந்தியாவிலிருந்து விஜயம் செய்துள்ள இலக்கிய விமரிசகர் ஸ்ரீ சிதம்பர ரகுநாதன் இந்தக் கூட்டத்திலும் வேறு பல கூட்டங்களிலும் பாரதியின் கவி நயத்தைப் பற்றி அழகாகப் பேசினார். கவியரசர் பாரதியாரின் கவிதைகளைச் சிங்கள பாஷையில் மொழிபெயர்த்துச் சிங்கள மக்களும் அவற்றை ரஸிக்க வசதி செய்ய வேண்டுமென இலங்கை அரசாங்கக் கலாசார இலாகாவைக் கேட்டுக் கொள்ளும் ஒரு தீர்மானம் ஒரு கூட்டத்தில் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

* * *

இந்தியாவிலிருந்து சட்ட விரோதமாகக் குடியேறியதாய்க் குற்றஞ்சாட்டப்படுவோர் களை விசாரணை முடியும் வரையில் பாதுகாப்பில் வைக்கும் தலைமன்னார் குவாரன்டைன் முகாமில் சில இலங்கை அதிகாரிகள் ஒரு இந்திய இளம் பெண்ணைப் பலாத்காரம் செய்ததாக வெளிவந்த செய்தி இந்தியச் சமூகத்துக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. இந்தப் புகாரைப் பற்றி இந்திய ஹைகமிஷன் அதிகாரிகள் தலைமன்னாருக்குச் சென்று விசாரணை நடத்தினார்கள். இப்பொழுது இவ்விஷயம் நீதிமன்றத்துக்குப் போயிருக்கிறது.

—ரஜனி

## பட உலக ஜாம்பவான்



தமிழ்ப்பட உலகில் தனிப் பெரும் புகழுடன் விளங்கி வந்த டைரக்டர் ஸ்ரீ கே. ராமநாத் தமது 43 வயதில் அகால மரணமடைந்தார் என்னும் செய்தி கேட்டுப் பெருந் துயர் அடைகின்றோம். சிகந்தராபாத் இயற்கை வைத்தியசாலையில் ஜீரணக் கோளாறுக்குச் சிகிச்சை பெற்று வந்த போது சென்ற 3-ம் தேதி காலமாகி விட்டார். ஸ்ரீ ராமநாத் கலைத் திறனும் தொழில் நுட்ப அறிவும் ஒருங்கே வாய்ந்த டைரக்டர். தமிழில் சினிமாப் படம் எடுக்கத் தொடங்கிய காலத்திலேயே மேற்படி தொழிலில் ஈடுபட்டு உழைத்து. "ஏழை படும்பாடு" போன்ற உன்னத படங்களைத் தயாரித்தவர். காமிராக் கலை, டைரக்ஷன் கலை இரண்டிலும் இணையற்ற திறமையுடன் தமிழ்ப்படவானில் சுடர்விட்டு மின்னும் நட்சத்திரமாகத் திகழ்ந்தார். சினிமாப் படத்தில் ஒளிப்பதிவு செய்யும் அபூர்வக் கலையிலும் சிறந்து விளங்கினார். தற்போது சினிமா உலகில் பிரபலமாயுள்ள டைரக்டர்களும் படாதிபதிகளும் ஸ்ரீ ராமநாத்திடம் சிட்சை பெற்றவர்கள்தான். திரைப்பட உலகம் ஓர் ஈடு இணையற்ற கலைஞரை இழந்து நிற்கிறது.

இலக்கியச் செல்வம்-2

# பிப்பா செல்கின்றாள்

பேராசிரியர்
அ.சீநிவாசராகவன்



ஆங்கில நாடகம் ஒன்றில் உருவாகும் உலகத்துக்கு, - ஆம், ஆங்கிலக் கவிஞன் ராபர்ட் பிரௌனிங் காட்டுகின்ற 'பிப்பா செல்கின்றாள்' என்ற நாடக உலகத்துக்கு, இன்று போகிறோம்.

யாரடா, தேர்ப்பாகன்! கொண்டுவா ஞான ரதத்தை...

இதோ இத்தாலியா நாட்டிலே உள்ள அஸாலோ என்ற நகரம். நகர்ப்புறத்திலே உள்ள பட்டு நூல் ஆலைகள். அருகே, நெசவாளர் காலந்தள்ளும் சிறு குடில்கள்.

காலைப் பொழுது, தன் தங்க முகத்தை மேகக் கொப்பரைக் குள்ளிருந்து மெல்லத் தூக்கி, உலகத்தை எட்டிப் பார்க்கிறது. நாமும் நம் ரதத்தில் இருந்தபடியே எட்டிப் பார்க்கிறோம், பக்கத்தில் உள்ள ஒரு வீட்டுக்குள்ளே.

காற்றோட்டமுள்ள அறை; எங்கு பார்த்தாலும் வறுமையின் ஓட்டமும் தென்படுகிறது.

பிப்பா என்ற பெண்-அவள் ஓர் ஆலைத் தொழிலாளி - படுக்கையிலிருந்து துள்ளி எழுகிறாள். அவள் முகத்திலே மாசற்ற யௌவனத்தின் சோபை.

இன்று வருடப் பிறப்பு. ஆலையில் விடுமுறை. பிப்பாவின் மனத்திலே — அவள் மனத்திலே என்ன என்பதை அவளே பேசுகிறாள், கேட்போம்:

**பகல்!**
**மேகக் கிண்ணியில் ஒடுங்கிக் குமுறிய பகல்**
**இதோ வேகத்துடன், படு வேகத்துடன்,**
**இரவின் விளிம்பின் மேல்**
**பொங்கி வழிகிறது. சொக்கத் தங்கமாய்,**
**என்ன வேடிக்கை? ஒரு நாழிகைக்கு முன்,**
**கிழக்கே, ஒரே மேகம், சாம்பர்மதில்**
**அவ்வளவுதான்.**
**மதிலின் விரிசலில் ஒளிநுரை ஒன்றும் இல்லை.**
**இப்போதோ?**
**முதலில் ஓர் ஒளி அலை, அதன் பின் ஒன்று,**
**அலை அலையாகத் திரண்டது உதயம்.**
**திரண்டது, எழுந்தது, சிவந்தது;**
**அதன் கொந்தளிக்கும் இதயம் அங்கும்,**
**இங்கும் மின்னியது;**
**தங்க வெள்ளமாய்ப் பொங்கி,**
**உலகம் எங்கணும் பெருகியது.**
**பகல்!**

உதயத்தின் சௌந்தர்ய வெள்ளம் பொங்கித் ததும்புவதைக் கண்டு பூரித்த பிப்பா, எப்படி இந்த நாள் முழுவதையும், அதன் நீண்ட நீல வெய்யிற்பொழுதின் ஒவ்வொரு நிமிஷத்தையும், தன்னுடையதாக்கிக் கொள்வது என்று எண்ணுகிறாள். அவளோ ஏழை. பணக்காரர்களுக்கு நாளைப் பற்றியோ பொழுதைப் பற்றியோ கவலை இல்லை. அவர்களுக்கு இந்தப் பகலின் வெய்யிலும், அதன் வண்ணமுந்தானா இன்பசாதனம்? பொழுதை இன்பகரமாகப் போக்குவதற்கு அவர்களுக்கு எத்தனையோ வழிகள். அதோடு, இந்த நாள் இல்லாவிட்டால் இன்னொரு நாள்; வருஷம் முழுவதையும் எப்படி வேண்டுமானாலும் அவர்கள் போக்கலாம். ஆனால் ஏழைப் பிப்பாவிற்கோ? 'இரவியின் ஒளியிடைக் குளிக்கும்' இன்பந்தான் உண்டு. அதுவும் இந்த ஒரே நாளில் தான், வருஷத்துக்கு ஒரு முறை வருகிற இந்த ஒரே விடுமுறை நாளில் தான். இதுவும் ஏமாற்றி விட்டால்? இதனுடைய ஒளி, திடீரென்று, மழையிலும் பனியிலும் அணைந்து விட்டால்? வறுமைச் சிறு கொட்டிலில் நான் முழுதும் முடங்கிக் கிடக்க வேண்டியது தான்.

பகலே, என்னை ஏமாற்றி விடாதே.
ஒன்றுமற்ற வெறும் பிப்பாவாக உள்ள என்னைச்
சோதனை செய்து விடாதே.
அப்படிச் செய்து விட்டாயோ,
நேற்றிரவு கழற்றி வைத்தேனே,
போன வருஷத்துத் துயரம்,—
அது நாளைக்காலையில் வந்து விடும்.
நீ மாத்திரம் தயவு வைத்தால்,
புது வருஷத் துயரத்தைத் தாங்கப்
போதுமான வலிமையை உன்னிடம் பெற்று விடுவேன்.
இந்த மண்ணுக்குத் தெய்வ நாட்டின் உணர்ச்சியைத்தர,
இதன் வேதனையைத் தணிக்கக்
கடவுள் அனுப்பும் பகலே,
நீ என் ஒரு நாள். என்னை ஏமாற்றி விடாதே.

இப்படியாக, காலை வடிவில் அரும்பி நிற்கும் பகலை வேண்டுகிறாள் பிப்பா. அப்போது, அவள் மனத்தில், அஸாலோ நகரத்தில் உள்ள சிலரைப் பற்றிய எண்ணம் வருகிறது. முதலில், ஆதிமா என்ற பணக்காரி; தன் அழகிலும், பணத்திலும் செருக்குடையவள்; பிப்பா வேலை செய்யும் ஆலை முதலாளியின் மனைவி. அவளுக்கென்ன குறை? அவளுடைய கணவன் லூக்கா என்பவன் கிழவன், என்றாலும் என்ன? அவளுக்குத் தான் ஸிபால்ட் என்ற காதலன் இருக்கிறானே? மழை வந்தால், இந்த விடுமுறை நாளின் இன்பம் அவளைப் பொறுத்த மட்டில் சிதைந்து விடாது. ஸிபால்ட் பேசும் காதல் வார்த்தையை மழை குறைத்து விடவா போகிறது? மழை பெய்யட்டுமே, ஆதிமா வசிக்கும் மலர் வீட்டு ஜன்னல் மேல் அது வீசி அடிக்கட்டுமே, அதுவும் அவளுக்கு நல்லதுதான். ஸிபால்ட் இன்னும் அவளை நெருங்கி அணைத்துக் கொள்வான்; இன்னும் கனிவாகப் பேசுவான். மழையா, புயலே வரட்டுமே, ஆதிமாவுக்கு என்ன கவலை? அவள் பாக்கியவதி.



அவளைப் போலவே, அஸாலோ நகரத்தில் உள்ள ஜூல்ஸ் என்பவனும் பீனி என்பவளும் பாக்கியசாலிகள். அவர்களுக்கு இன்று கலியாணம். திருமணம் ஆனவுடன், கை கோத்துக் கொண்டு அவர்கள் வீட்டுக்குப் போகும் போது, பகல் இருண்டால் என்ன, ஈர வாடை இரைந்து ஒலி செய்தால் என்ன, அவர்கள் உள்ளத்தில்தான் இன்ப ஒளி அலை மோதுமே? மழையைப் பற்றியோ, இடியைப் பற்றியோ எண்ண, புதுமண மக்களுக்கு நேரம் ஏது, தேவை ஏது?

இதோ வேறு இருவர். லூகியும் அவன் தாயும். உண்மையான நிறைவுக்கு, போதுமென்ற மனத்திற்கு, அவர்கள் சாட்சியாக நிற்கிறார்கள். தாயின் பேரன்பு இளைஞன் லூகியை அரவணைக்கிறது. அவனுக்கு வேறென்ன வேண்டும்? மகனுடைய நன்றியும், பற்றும், லூகியின் தாய்க்கு, இந்தத் தள்ளாத வயதில் புதிய வலிமையைத் தருகின்றன. மழை வந்தால், அஸாலோ நகரம் அவர்களைக் கல கல வென்று வரவேற்கும், நகரத்திலே அவர்களுக்கு அவ்வளவு மதிப்பு.

வரவேற்பு என்றதும் ஞாபகம் வருகிறது. இன்று ரோம் நகரத்திலிருந்து பிஷப் - மேற்றிராணியார் - வருவாராமே? அவரை வரவேற்க, இந்த நகரம் அமளி துமளிப் படுகிறது. நியாயந்தானே, எவ்வளவு நல்லவர், எவ்வளவு பெரியவர்! அவருடைய தம்பி இறந்து விட்டார் அல்லவா? தம்பியின் ஆத்மா சாந்தி அடைவதற்கு, அவருடைய வீட்டுக்கு வந்து பிரார்த்தனை நடத்த வருகிறாராம். அவரையும் மழை ஒன்றும் செய்து விடாது. என்ன இடி இடித்தாலும், அவருடைய மனத்தில் பெருகும் சாந்தி குலையப் போகிறதா, இல்லை.

இப்படி ஓடுகிறது பிப்பாவின் சிந்தை; இன்னும் ஓடுகிறது:

'இவர்கள் எல்லோரும் பணமும், பெருமையும், இன்பமும், நிறைவும் பெற்றவர்கள். நானோ? இந்த ஏழைப் பிப்பாவோ? இந்த ஒரு நாள் இவளுக்கு வீணாகிப் போனால், இன்னும் பன்னிரண்டு மாசத்துக்கு, ஓய்வு ஒழிவு இல்லாமல் பட்டு நூல் சுற்றும் இருள்

தான். அடேயப்பா, நினைத்தாலே பயமாய் இருக்கிறது.

'சே, சே, இதையெல்லாம் நினைத்துக் கொண்டு இந்தப் பகல் என்ற அற்புதத்தை வீணாக்குகிறேனே, என்ன அசட்டுத்தனம்! இரு, நினைவினாலேயே நான் ஏன் ஒரு சொர்க்கத்தை நிர்மாணித்துக் கொண்டு, அதன் மத்தியில், என் நினைவு உலகத்தின் ராணியாக வீற்றிருக்கப் படாது? என்னுடைய பாவனையினால், யாராக வேண்டுமானாலும் என்னைப் பாவித்துக் கொண்டு, அவர்கள், பெறும் இன்பத்தை யெல்லாம் ஏன் பெறக் கூடாது? ஓ, செய்யலாம்.

'முதலில், ஆதிமாவாக இருந்து பார்க்கிறேன். சிங்காரத் தோட்டம், அதன் நடுவே பெரிய கல் மாளிகை, கண்ணாடி முகப்புடைய மலர் வீடு-இவை எல்லாம் எனக்குச் சொந்தம். இப்போது நான் ஆதிமா. மலர் வீட்டினில் இருக்கிறேன். என் காதலன் ஸிபால்ட் வருகிறான், ஒருவருக்கும் தெரியாமல், திருட்டுத்தனமாய். ஒருவருக்கும் தெரியாமலா? அதுதான் ஊர் முழுதும் சிரிப்பாய்ச் சிரிக்கிறதே! நான்...,நான்... ஆதிமாவாக இருக்கும் நான், எவ்வளவு இறுமாப்பாக இருந்தென்ன, சள சள வென்று ஊரார் பேசுவதை லட்சியம் செய்யாமல் இருப்பது போல் நடந்துமென்ன? காதல், காதல், காதல்—சீச்சீ, யாருக்கு வேண்டும், கள்ளத்திலே அழுகிய இந்தப் பண்டம்?

''கள்ள மற்ற உயர்ந்த காதல் உலகத்தில் இல்லையா? அதைப் பெறவேண்டுமானால், ஆதிமாவாக இருப்பதை விட, பீனியாக இருப்பது, இன்று ஜூல்ஸை மணம்புரியும் பீனியாக இருப்பது... இருந்து பார்க்கிறேனே! பனிக் கட்டியைப் போல் பரிசுத்தமான முகம், தந்தம் போன்ற உடல், சுருண்ட கருங் கூந்தல், இருண்ட புருவம்—இவள்தான் பீனி. ஆனால் இன்றுதானே அவளுடைய அன்பு புதிதாக மலரப் போகிறது? இது எனக்கு வேண்டாம். இளமையின் போதையில் என்னைத் தள்ளி மயக்கி, என்னை அடிமையாக்கும், இந்தப் புது மனைவியின் வெறி எனக்கு வேண்டவே வேண்டாம். பிறந்த நாள் முதல் என்னை அணைத்துக் கொண்டு நின்று, என்னோடு வளர்ந்து வரும் அன்பானால் — ஆம், அதுவே எனக்குப் பிடித்தமானது.

'ஆகவே, லூகியாக என்னை நினைத்துக் கொண்டு, அவன் பெறுகின்ற தாயன்பைப் பெற முடியுமா, பார்க்கிறேன். எப்படி முடியும்? என் தாயின் முகமே எனக்கு ஞாபகமில்லையே! என் தகப்பன்—அவர் யாரென்பதும் எனக்குத் தெரியாது. இந்த நிலையில் தாயன்பைப் பெறுவதாக எப்படிப் பாவனை செய்ய முடியும்? வாழ்க்கையில் துளியாவது அனுபவித்திருந்தால், பாவனையினால் அதைக் கடலாகப் பெருக்கலாம். இப்போது என்ன செய்வது?

'உலகத்து உறவுகளில் விளையும் அன்பையெல்லாம் ஒதுக்கி விட்டு, கடவுளுடைய அன்பை - அதைவிடச் சிறந்த அன்பு எது? — அவன்



அருளைப் பெற முயன்று பார்க்கட்டுமா? அப்படியானால், கோயில் அருகே உள்ள அரண்மனையில், இறைவனைத் தொழும் மேற்றிராணியாராக நான் ஆகவேண்டும். அவர் இன்றிரவு தம்முடைய தம்பியின் வீட்டில் தங்கிப் பிரார்த்தனை புரிவார், ஆசி கூறுவார். எல்லா மனிதர்களிடமும் அவருக்கு உள்ள அன்பு, அவர் விழியிலே ஒளி வீசும். அவருடைய கனிந்த இதயத்தில் இறைவனுடைய அன்பு வெள்ளமாகப் பொங்கித்திரளும். இரு. இரு........



'ஏன், இப்போதே, நான் நானாக இருக்கும் போதே, ஏழைப் பிப்பாவாக இருக்கும் இந்த நிலையிலேயே, கடவுளுடைய அன்பில் எனக்குப் பங்கு இல்லையா? ஏன் இல்லை? அவனுடைய அருளுக்கு ஏழை, பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பேதமெல்லாம் ஏது?

புது வருஷப் பாட்டு ஒன்று உண்டே, அது இதைத்தான் சொல்லுகிறது. எங்கே, எப்படி அந்தப் பாட்டு....?

**எந்தப் பணியும் இறைவனுக்கு ஒன்றே**
**முன் அவன் விண்ணிலே நடந்தனன்: இன்றே**
**மண்ணிலே எங்கும் நிறைந்தனன். அவனது**
**எண்ணப் படிதான் இங்கு எவர் செயலும்.**
**நல்லார் பொல்லார் அனைவரும், இங்கே**
**எல்லா உயிரும் அவன்கைப் பாவைகள்.**
**முன் எது, பின் எது, முதல் எது, ஈறு எது?**
**சின்னதென்று ஒரு செயல் உண்டா? ஒகோ,**
**சின்னதா? எதைவிட? செய்வது நீயா?**
**பெரிதென நீ சொலும் அதனைச் செய்வது**
**அருமையா? யாருக்கு? ஐயன் தனக்கா?**
**என் செயல், என் செயல் என்று எனைச் சூழும்**
**பின்னலைப் பிய்த்தெறி. பிறகு பார். தெரியும்:**
**சின்னதும் இல்லை, பெரியதும் இல்லை,**
**எந்தப் பணியும் இறைவனுக்கு ஒன்றே.'**

* * *

இந்தப் பாட்டில் உள்ள கருத்துக்கள் எங்கேயோ கேட்டவை போலல்லவா தோன்றுகின்றன!

**'முன் அவன் விண்ணிலே நடந்தனன்: இன்றே**
**மண்ணிலே எங்கும் நிறைந்தனன்'**

என்ற சொற்கள் காதில் விழும் போது, நாம் ஏறி உள்ள தமிழ் ரதத்தின் கொடுங்கையிலிருந்து மாணிக்க வாசகர் குரல் கணீரென்று கேட்கிறது:

**தில்லை மூதூர் ஆடிய சேவடி**
**பல்லுயிர் தோறும் பயின்றனன் ஆகி**

பாட்டு மேலே என்ன சொல்லுகிறது?

**'அவனது**
**எண்ணப்படிதான் இங்கு**
**எவர் செயலும்.'**

அப்படியா? கொடுங்கையிலிருந்து இன்னொரு இனிய தமிழ்க் குரல்:

**'என் செயலால் ஆவது**
**இங்கொன்றும் இல்லை**
**இனித் தெய்வமே**
**உன் செயலென்றே**
**உணரப் பெற்றேன்....'**

என் செயல், என் செயல் என்று எண்ணும் பேதைமையிலிருந்து விலகினால், சிறியது, பெரியது என்ற வேற்றுமையெல்லாம் விலகிவிடும். அப்போது இறைவன் அருள் நம்மை அணைத்துக் கொள்ளும். இதைச் சைவ சித்தாந்தச் சாத்திர நூலாகிய 'திருவுந்தியார்' எவ்வளவு அருமையாகப் பேசுகிறது:

**'நம் செயல் அற்று இந்த நாம் அற்றபின் நாதன்**
**தன் செயல் தானே என்று உந்தீ பற.**
**தன்னையே தந்தான் என்று உந்தீ பற.'**

அஸாலோ நகரத்துக்குத் திரும்புவோம். புது வருஷப் பாடல், பிப்பாவுக்கு நம்பிக்கை தருகிறது. மற்றவர்களாகத் தன்னைப் பாவித்துக் கொள்வானேன்? பிப்பாவாகவே இருக்கலாம். வெய்யில் ஒளி அழைக்கிறது. மூலையிலே எதற்காகக் குந்திக் குமைய வேண்டும்? புறப்படு, பிப்பா, பனித்துளி படர்ந்த புல் வெளிப் பாதையில், இலைகள் ஒன்றோடொன்று பின்னி இருள் சமைத்த பைன்மரச் சோலையில்—சிட்டுக் குருவியும் இங்கே வராதே, தும்பியும் மது உண்டு மயங்கிக் கூத்தாடாதே,—இங்கே கூட நீ போகலாம், எங்கும் போகலாம், புறப்படு.

இப்படியாக, அவளுடைய விடுமுறை நாளின் ஒவ்வொரு நீல நிமிஷத்தையும் பருகிக் களிகூரப் புறப்பட்டுவிடுகிறாள் ஏழைப் பிப்பா. ஏழையா? நம்பிக்கை நிறைந்த அவளுடைய கள்ளமற்ற உள்ளத்தை விட உயர்ந்த செல்வம் உலகத்தில் ஏது? (தொடரும்)

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்





















**நீடித்து உழைக்கும் டூத் ப்ரஷ்**

தேவியின் கடிதம்

# காய்கறித் தோட்டம்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

புது வீடு கட்டி முடிந்து விட்டது. ஆனால் இன்னும் அழகான தோட்டம் அமைப்பது சுலபமாக இல்லை யென எழுதியிருக்கிறாய்.

ஒரு வீட்டைச் சுற்றி அழகான தோட்டம் இருந்தால்தான் வீட்டின் அழகு பூர்த்தி ஆகுமென்பதில் சந்தேகமில்லை. முன்னோர்கள் அழகான கோவில்களை மட்டும் எழுப்பவில்லை. அதை ஒட்டி அழகான நந்த வனமும் அமைத்திருந்தார்கள்.

தோட்டம் போடுவதில் இரண்டு வகை உண்டு. முன் காலத்தில் ஒரு குடும்பம் வசதியாக வாழ ஒரு வீடு, மாடு, நான்கைந்து தென்னைமரங்கள், பத்து வாழை மரங்கள் என்று கணக்கிடுவார்கள். சுற்றுப் புறம் தோட்டம் இல்லாவிட்டால் பின்புறமாவது செடிகள், மரங்கள் இருக்கும். வீட்டில் செலவாகும் தண்ணீர், எரு இவைகளைச் சுலபமாக உபயோகித்து விடுவார்கள். இம்மாதிரி வாழை, தென்னை, காய்கறி இவைகளைப் போடுவது ஒருவகை.

வாசனை இல்லாவிட்டாலும் அழகுக்காகச் செடிகளைத் தேவையானபடி வெட்டி அழகுபடுத்துகிறோம். இலைகளாலேயே வீடுகள் அமைக்கிறோம். கண்ணுக்கு அழகும், மனசுக்கு ரம்மியமாக இருப்பதும் வாழ்க்கையில் முக்கியத்துவம் பெற்றவையல்லவா? இம்மாதிரி தோட்டம் வசதியுள்ளவர்களால் தான் அமைக்க முடியும்.

காய்கறித் தோட்டத்தில் நம் வருவாயை அதிகரிக்கச் செய்வது மிகவும் சிரமம். நான் தோட்டம் போடுவதில் அநேகவித அநுபவங்கள் பெற்றிருக்கிறேன். ஒரு சிறு அநுபவத்தை உனக்கு எழுதுகிறேன். ஒரு சமயம் கத்திரி விதையும், மிளகாய் விதையும் விதைத்திருந்தேன். சில நாட்களுக்குப் பிறகு கத்திரி அங்கொன்று, இங்கொன்றாக முளைத்திருந்தது. மிளகாய் விதை முழுவதையும் எறும்பு தின்றுவிட்டது. கத்திரி நாற்றுகளைக் கஷ்டப்பட்டு நட்டு வைத்தேன். கால்கள் சுருட்டிக் கொண்டு அரை வீசை காய்த்தது. இலைகளைப் பூச்சி அரித்திருந்தது. அந்த அரை வீசைக் காயின் விலை ஐந்து ரூபாயெனச் சொல்லலாம். நான் அதற்காக அவ்வளவு செலவு செய்தேன். ருசி இல்லாவிட்டாலும் நம்முடைய தோட்டத்தில் காய்த்தது என்ற அபிமானம் இருந்தது. வளர்த்த பாசமல்லவா?



இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் என் சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தேன். வீட்டிலுள்ள தூக்குப் பாத்திரங்கள் அவ்வளவும் அந்தரத்தில் தொங்கின. அது எனக்கு வியப்பை யளித்தது. எல்லாவற்றிலும் தக்காளிச் செடிகளை நட்டு வைத்திருந்தாள். நாட்டில் உணவுப் பொருள் அதிகரிப்புத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர அவளுடைய பெரும் முயற்சி போலும்! 'வனமகோத்சவத்துக்காகத் துளசிச் செடியை நடுவது போல இருக்கிறதே' என்றேன். அதைக் கேட்டு அவளும் சிரித்தாள்.

பழச் செடி, காய்கறிச் செடி இவைகளை வைத்துப் பலன் அடைவது என்பது சிரமம். செடிகளுடைய குணம், வளர்க்கும் முறை எல்லாம் நன்றாக அறிந்து கொண்டு இடைவிடாமல் உழைத்தால்தான் ஓரளவு பயனை எதிர் பார்க்கலாம். செடிகளின் பயங்கர விரோதி பூச்சிகள். காய்களாகக் காய்த்துப் பழுத்தும் விட்டால் அணில், பறவை இவைகளுடன் மனிதர்களும் பகைவர்கள்தான். நம் தோட்டத்துவாழைத் தார் நமக்கு உபயோகப்படுவதில்லை. அதனுடைய முதலுரிமை அதைக்கவரும் கள்வர்களுக்குத் தான்.

எப்படி இருந்தாலும் தோட்டம்போடுவது இன்பகரமான பொழுது போக்கு. நம்மை விடக் குழந்தைகள் தோட்டத்தில் உற்சாகமாக வேலை செய்வார்கள். செடிகளுக்குத் தண்ணீர் விடுவதில் அவர்களுக்குள்ள உற்சாகமும் ஆனந்தமும் அளவிடற்கரியது. பூக்கள் பூத்துக் குலுங்கி மலர்வது போல் குழந்தைகளின் முகமும் அல்லவா மகிழ்ச்சியினால் மலர்ந்து காட்சி யளிக்கிறது!

இப்படிக்கு,
பூமாதேவி



# மார்ஜாலம்



அகத்தியர் ஒரு நாள் பூனையைக் கூப்பிட்டு, அதற்கு உபதேசம் செய்தார்.

"பூனையே! உன் வாழ்க்கை மிகப் பாவ வாழ்க்கையாக இருக்கிறது. புலி உன்னுடைய மாமன். அது காட்டில் வசிக்கிறது. அதற்கு வேறு வழியில்லை. காய்கறிகள் உண்டு ஜீவிக்க முடியாது. பசியெடுக்கும் போது மிருகங்களைக் கொன்று வாழ்கிறது. நீ மனிதர்களிடையில் இருந்து வாழ்கிறாய். பாலும் மோரும் வெண்ணெயும் நெய்யும் வைத்திருக்கும் மனிதர்களிடையில் வாழ்ந்து வருகிறாய். நீ பிராணிகளைக் கொன்று ஜீவிக்க வேண்டிய அவசியமில்லை. இனிமேல் நீ பறவைகளையும் எலிகளையும் கொல்லாதே!" என்றார்.

பூனை ஒப்புக் கொண்டது. "நான் இது வரையில் வாழ்ந்த முறை சரியல்ல. இனிமேல் நானும் என் ஜாதியும் ஜீவகாருணிய மார்க்கத்தில் வாழ்வோம்" என்று தீர்மானித்தது.

பூனைகள் எலிகளைப் பிடித்துத் தின்பதை நிறுத்தி விட்டன. வெண்ணெயும் பாலும் திருடியே ஜீவனம் நடத்தி வந்தன.

ஊரில் எல்லாரும் பூனை பேரில் மிகக் கோபங் கொண்டார்கள். எங்கே நெய்ப் பண்டம் வைத்திருந்தாலும் பூனை அதைத் தேடித் தின்ன ஆரம்பித்தது. பாற்சட்டியும் நெய்க் கிண்ணமும் கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்தால் போயிற்று. பூனை உருட்டிக் குடித்து விடும். வீடுகளில் எலிகளின் உபத்திரவமும் அதிகமாயிற்று. பயமின்றி எலிகள் எங்கும் புகுந்து அரிசியும் பருப்பும் தின்று பாழாக்கி வந்தன.

மக்கள் கண்ணனை வேண்டிக் கொண்டு தவம் செய்தார்கள்.

"பகவானே! இந்த உபத்திரவம் ஊரைப் பஞ்சத்தில் கொண்டு போய் வீழ்த்திவிடும். நீதான் காப்பாற்ற வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டார்கள்.

கண்ணன் பூனையைக் கூப்பிட்டு உபதேசம் செய்தான்.

"நீங்கள் இனி பாலும் தயிரும் வெண்ணெயும் திருடலாகாது. அது உங்களுக்கு நியாயமாகாது. மக்கள் கஷ்டப்படுகிறார்கள். இந்தத் துன்மார்க்கத்தை விட்டு விடுங்கள்!" என்றான்.

இந்த உபதேசத்தைப் பூனை வெகு பக்தியாகக் கேட்டு, "தாங்கள் ஒரு காலத்தில் வெண்ணெய் திருடியதாகச்சொல்லுகிறார்களே!" என்று மெதுவாகச் சொல்லிற்று.

"யார் உனக்கு அதைச் சொன்னது? அதெல்லாம் சிறு குழந்தையாக இருந்த காலத்தில் விளையாட்டாகச் செய்தது. அதை நீங்கள் பின்பற்றலாகாது. நீங்கள் பாட்டுக்கு எலிகளைப் பிடித்து வாழுங்கள். அது உங்கள் குல தருமம். அதில் பாபமில்லை. அருச்சுனனைக் கேட்டுப் பாருங்கள். அவனுக்கு இதை நான் முந்தியே சொல்லியிருக்கிறேன்" என்றான் கண்ணன்.

"ஓகோ! அப்படியா?" என்றது பூனை. "தாங்கள் சிறு வயதில் செய்ததையும் செய்வோம். பிறகு அருச்சுனனுக்கு உபதேசித்ததையும் செய்வோம்! நாம் இரண்டையும் செய்து வருவோம். எலிகளைப் பிடித்துத் தின்போம். பாலும் வெண்ணெயும் எங்களுக்கு எட்ட முடியாதபடி வைக்கச் சொல்லுங்கள். எங்களுக்கு

எட்டி விட்டால், பிறகு விட முடியாது!" இப்படிச் சொல்லி விட்டு ஓடிப்போய் ஒரு மரத்தின் மேல் ஏறிக் கொண்டது.

கண்ணன் சிரித்தான். "சரி, அப்படியே செய்யுங்கள். ஆனால் கண்ட இடத்தில் மல ஜலம் கழிக்காதீர்கள். எங்கேயாவது மறைவாகக கழித்து மண்ணைக் கீறி மூடி விடுங்கள். தெரிந்ததா ?" என்றான்.

"அப்படியே!" என்றது பூனை மரத்தின் மேலிருந்து.

"தினமும் குளிக்க வேண்டும், தெரியுமா ?" என்றான் கண்ணன்.

"அப்படியே செய்வோம். ஆனால் தண்ணீரைப் பார்த்தால் பயமாக இருக்கிறதே!" என்றது பூனை.

"இறங்கு கீழே! சொல்லுகிறேன்" என்றான் கண்ணன். பூனை இறங்கி வந்தது.

"நாக்கை நீட்டு" என்றான் கண்ணன். பூனை நாக்கை நீட்டிற்று. பூனைக்குக் கண்ணனிடத்தில் பயமே இல்லை.

## ராஜாஜி

கண்ணன் பூனையின் நாக்கைத் தொட்டு, "இதுவே உன் கங்கை. தினமும் தவறாமல் உன் உடம்பை உன் நாக்கினால் நக்கிச் சுத்தம் செய்து கொள்" என்றான். "அப்படியே!" என்றது பூனை.

"உனக்கு மார்ஜாலம் என்று பெயர் வைத்தேன். உடம்பை நன்றாகத் தேய்த்துச் சுத்தமாக வைத்துக் கொள்" என்றான் கண்ணன்.

"அப்படியே!" என்று சொல்லிப் பூனை தன் உடம்பை நக்கிக் காண்பித்தது. 'மார்ஜனம்' என்றால் சம்ஸ்கிருதத்தில் தேய்த்துச் சுத்தம் செய்வதற்கும் குளிப்பதற்கும் பெயர். ஆனபடியால் பூனைக்கு 'மார்ஜாலம்' என்று பெயர்.

பூனை தன் குட்டியையும் நக்கி நக்கித் தினமும் குளிப்பாட்டும். தன்னைத்தானே நக்கிக் கொண்டு குளிப்பதற்கும் குட்டிக்குச் சொல்லித் தரும். பூனை ரொம்ப சுத்தமான பிராணி. நாயைப் போல் அல்ல. ஆனால் வீட்டில் வளர்த்த நாய் எதையும் திருடாது. பூனைக்குப் பாவம், அந்தக் கட்டுப்பாடு இல்லை, திருடும்.



# அபலை அஞ்சுகம்

15

## எங்கள் குறி தப்பாது!

நிர்மலா மெதுவாக அந்தக் கிழவியிடம் பணம் பறித்து விடச் சொக்கனிடம் யோசனை கூறினாள் அல்லவா? அதைக் கேட்டதும் சொக்கன்,

''அந்தக் கிழவி எல்லாச் சொத்துக்களையும் என் பெயரில் உயில் எழுதி வைக்கும்படி நான் செய்து விடுகிறேன். நீ அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாதே. ஆனால் கொலை செய்கிற காரியம் மாத்திரம் என்னால் முடியாது...'' என்றான்.

''அதை நீங்கள் செய்யும்படி நான் வைக்க மாட்டேன். எல்லாவற்றையும் எப்படி எப்படி உசிதமோ அப்படி நான் பார்த்துக் கொள்கிறேன். சரி! நீங்கள் பெரியம்மா அறைக்குப் போங்கள்'' என்றாள் நிர்மலா.

சொக்கன் பார்வதியம்மாளின் அறைக்குச் சென்றான். நிர்மலா நாற்காலியில் அமர்ந்த வண்ணமே ஆழ்ந்த யோசனையில் இருந்தாள். அவள் முகத்தில் வேதனையின் குறி படர்ந்திருந்தது. விஜயரங்கனைப் போல் வேஷம் போடுவதைத் தவிரச் சொக்கனால் வேறொன்றும் நடக்காது என்று அவள் கண்டு கொண்டாள். அவன்மீது அவளுக்கு வெறுப்பு ஏற்பட்டது. அவனை அங்கிருந்து அவளால் விரட்டிவிட முடியும். ஆனால் விஜயரங்கனின் வேஷப் பொருத்தத்துக்குத் தகுந்த மனிதன் கிடைப்பதல்லவா கடினம்? அவன் எப்படியாவது இருந்து தொலையட்டும். தான் போட்ட திட்டங்களைத் தானே முனைந்து நின்று செய்து விடுவோமென்றாலும் அவனுக்குள்ள பயத்தின் காரணமாக ஏதேனும் இடையூறுகள் நேர்ந்துவிடுமோ என்றும் அஞ்சினாள் நிர்மலா. அவனால் எவ்வித இடையூறும் நேராத வண்ணம் சாமர்த்தியமாகக் காரியங்களைச் செய்து விடலாம் என்று அவள் நம்பினாள். இப்பொழுது அவளுடைய முக்கியமான பிரச்னை, அவள் மனத்தைக் குழப்பிய விஷயம் உண்மையான விஜயரங்கன் ஒரு நாள் அங்கு வரப்போகிறான் என்பதே. முதலில் அவன் இங்கு வராத வண்ணம் ஏதாவது செய்தாக வேண்டும். ஏன், அவன் இந்த உலகத்திலேயே இல்லாத வண்ணம் செய்ய ஏதாவது துணிகரமான ஏற்பாடுகள் செய்தாகவேண்டும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அவனை உயிரோடு விட்டு வைப்பதே பெரிய அபாயம். அவனைக் கொலை செய்து அவன் சடலத்தைக் கூட வெளியில் காட்டாத வண்ணம் செய்யக்கூடிய துணிகரமான நெஞ்சுள்ள ஒரு மனிதன்தான் அவளுக்குத் தேவை. அதற்குரிய மனோ பலமும் முரட்டுத்தனமும், இரக்கமற்ற கொடிய சுபாவமும் பொருந்திய



மனிதன் எங்கே இருக்கிறான்? அப்படிப் பட்ட மனிதனைத் திடீரென்று அவள் எங்கே காணப் போகிறாள்? இந்தச் சிந்தனைத் தடுமாற்றத்தில் சிக்கித்தான் அவள் துடித்துக் கொண்டிருந்தாள்.

அந்த வீட்டு வாசலில் யாரோ ஒரு பெண் உரத்த குரலில் ஏதோ பாடிக் கொண்டிருந்தது அவள் சிந்தனையைக் கலைத்துப் பெருத்த ஆத்திரத்தை உண்டாக்கியது. "இந்தப் பிச்சைக்காரியின் தொல்லையே பெருந் தொல்லையாகப் போய் விட்டது" என்று அவள் கோபத்துடன் சொல்லி எழுந்தாள்.



"பெத்தம்மா முத்தம்மா எங்கள்
குலதெய்வம்
பேச்சியம்மா நாச்சியம்மா
எங்கள் குலதெய்வம்
செத்தாலும் பொய் சொல்லா
எங்கள் மலைச்சாதி
சீரான சாதி அம்மா எங்கள்
குறச் சாதி
வைத்த மருந்தெடுக்கும் எங்கள்
மலைச் சாதி
வாகாய்க் குறிகள் சொல்லும்
எங்கள் குறச்சாதி
ஆசை கொண்ட பேர்களைக்
கூடவைக்கும் சாதி
ஆட்டி வைக்க மை கொடுக்கும்
அம்மா எங்கள் சாதி."

கிழக் குறத்தி ஒருத்தி அந்த வீட்டு வாசலில் நின்று பாடிக் கொண்டிருந்தாள். ஆத்திரத்தோடு அங்கு வந்த நிர்மலா அந்தக் குறத்தியை ஏற இறங்க ஒரு தடவை பார்த்து விட்டு எரிச்சலோடு, "ஏ, பீடை! இங்கே என்ன சத்தம்? உங்களுக்கு வேறு பிழைப்பில்லையா? மரியாதையாய்ப் போய் விடு" என்றாள்.

அந்தக் கிழக் குறத்தி நிர்மலாவின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் நிர்மலா புரிந்து கொள்ளும் வண்ணம் மெதுவாக நிறுத்திப் பாடத் தொடங்கினாள்.

"கோபப்படாதேயம்மா குறச்சாதி
பொய்யாது
ஆபத்தில் நீர்படுவதெல்லாம் அறிந்து
சொல்லும் குறச்சாதி"

என்று பாடி நிறுத்தி விட்டு, "கோபிக்காதே, அம்மணி! ஓரணா கொடு; போதும். உன் அழகான கையைக் காட்டு. உள்ளதை உள்ளபடியே பார்த்துக் குறி சொல்லுகிறேன்.

சொன்ன குறி தப்பாது
சோதனைகள் ஓடிவிடும்
எண்ணமெல்லாம் ஈடேறும்
எங்கள் குறச்சாதி சொன்னால்"

என்று பாடி நிறுத்தி விட்டு நிர்மலாவின் முகத்தைப் பார்த்தாள். அந்தக் குறத்திக்குச் சுமார் ஐம்பது வயதுக்கு மேல் இருக்கும். அவளுடைய தோளில் ஒரு துணிப் பை தொங்கியது. கையில் வெள்ளிப் பூண் கட்டிய ஒரு சிறு மரக் குச்சியை வைத்திருந்தாள்.

"போதும். போதும்! உன் பாட்டு கதையெல்லாம்! இந்தக் குறச் சாதியே இப்படித்தான். இங்கே எல்லாம் வந்து தொந்தரவு செய்யாதே. உனக்குக் காசைக் கொடுத்து விட்டு உன்னுடைய பொய்க் கதைகளை யெல்லாம் கேட்டுப் பல்லை இளிக்க மாட்டேன். இதற்கெல்லாம் கிராமத்திலுள்ள குடியானவ ஜனங்கள்தான் சுலபமாக ஏமாறுவாங்க" என்று கூறினாள் நிர்மலா, மிகவும் அலட்சியமாக.

"அப்படிச் சொல்லாதே, ராசாத்தி! உனக்குத் தெரியாது, எங்களுடைய மகிமையும் திறமையும்.

முகம் பார்த்தவுடனேயே
மோசக் கருத்தறிவோம்
கண் பார்த்தவுடனேயே
கள்ளநெஞ்சம் தானறிவோம்
நடையழகு பார்த்து மன
நாட்டமெல்லாம் கண்டுகொள்வோம்

உடையழகு பார்த்து நெஞ்சில்
உள்ளதெல்லாம் நாமறிவோம்
முக்காலம் கண்டு சொல்வோம்
முருகனுட பேரருளால்
எக்காலமும் சொன்ன
எங்கள் குறி தப்பாது ''

என்று பாடி விட்டு, '' இந்தக் குறத்திக் குறியை அவ்வளவு எளிதாக நினைத்திடாதீங்க. உங்க கையைப் பார்த்துத் தான் குறி சொல்லணும்னு நினைக்காதீங்க. உங்கள் முகக் குறியாலேயே எல்லாம் எனக்கு விளங்கிப் போச்சு. இந்த வீட்டுக்குள்ளேயே நீங்க ஏதோ ஒரு காரியத்தை ரொம்பச் சாமர்த்தியமாகச் செய்து முடிக்க நினைக்கிறீங்க. அதை எப்படிச் செய்யலாம் என்று தான் இப்போது உங்கள் மனசு குழப்பமடைந்து நிற்குது '' என்றாள் குறத்தி.

குறத்தியின் வார்த்தைகள் நிர்மலாவைத் திகைக்க வைத்தன. அப்போது அவளுக்குள்ள மன நிலையை அந்தக் குறத்தி எப்படி அறிந்து சொன்னாள் என்பதுதான் ஆச்சரியம்! அவளுக்கு இதுவரையில் இல்லாத நம்பிக்கை அந்தக் குறத்தியிடமும், அவள் வார்த்தைகளிலும் ஏற்பட்டது. அவள் சிறிது நேரம் அந்தக் குறத்தியின் முகத்தை உற்று நோக்கினாள். தன்னுடைய காரியங்களெல்லாம் சித்தியாகுமா என்று ஏன் அந்தக் குறத்தியிடம் குறி கேட்கக் கூடாது என்று நினைத்தாள்.

அவள் அந்தக் குறத்தியிடம் நெருங்கி மெதுவான குரலில், '' நீ உள்ளதை உள்ளபடி சொல்லுவதாக இருந்தால் ஒரணா இல்லை, பத்து ரூபாய் வேண்டுமானாலும் தருகிறேன். ஆனால் இங்கு எதையும் உரத்த குரலில் பேசக் கூடாது; பாடக் கூடாது '' என்று சொல்லிக் குறத்தியை அழைத்துக் கொண்டு அந்த வீட்டின் வாசற்புறத்திலுள்ள தனி அறைக்கு அழைத்துச் சென்றாள். அறை நடுவே அவர்கள் இருவரும் தரையில் உட்கார்ந்தனர். நிர்மலா ஆவலோடு தன் இடது கையை நீட்டினாள். குறத்தி அவள் கையிலுள்ள ரேகைகள் ஒவ்வொன்றையும் தன் கையில் இருந்த சிறு குச்சியினால் தொட்-



டுப்பார்த்து, "நீ நன்ருகப் படிச்சவள். கெட்டிக்காரி. உனக்கு இந்த வீடு இல்லே, இன்னும் பெரிய ராசாங்கத்தைக்கூடக் கட்டிக் காரியம் செய்யும் சமர்த்தும் சாமர்த்தியமும் இருக்கு. இந்த வீட்டிலே இப்போது ஒரு குழப்பமான நிலைமை இருந்து வருகிறது. கொஞ்ச நாட்களுக்கு முன்னுல் இந்த வீட்டிலேயே பெரிய புதையல் மாதிரி சில நகைகளெல்லாம் உனக்குக் கிடைச்சிருக்கணும். அந்த நகைகளை எடுத்த பழி உன்னைச் சேருமோன்னு நீ பயப்படுகிருய். இல்லேயா?" என்று சொல்லி விட்டு, நிர்மலாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள்.

"சரி! தொடர்ந்து சொல்லு....." என்ருள் நிர்மலா மிகுந்த ஆவலுடன்.

"இதற்கெல்லாம் நீ பயப்படாதே! கிரகங்கள் எல்லாம் உன் பக்கம் பலமா நிற்கின்றன. உனக்கு வர அதிர்ஷ்டத்தை யாரும் தடுக்க முடியாது. உனக்கு எதிரா ஒரு பெண் பிள்ளை இருக்கிருள். அவளுக்கு என்றைக்கும் ஆபத்துத்தான். இன்னும் பெரிய பெரிய லாபமெல்லாம் இந்த வீட்டிலிருந்தே நீ அடையப் பார்க்கிருய். எல்லாம் உன் சாமர்த்தியத்தாலே உனக்குச் சாதகமாகவே முடியும். எதற்கும் நீ பயப்படாதே! இந்தக் கிழக் குறத்தி குறி சொல்லுவதில் மட்டும் கெட்டிக்காரியில்லே. இன்னும் எவ்வளவோ மந்திர தந்திரம் செய்வதில் எல்லாம் கெட்டிக்காரி. உனக்கு என்ன ஒத்தாசை வேணுமோ, அதை யெல்லாம் என்னிடம் ஒளிக்காமல் மறைக்காமல் கேளு" என்ருள் குறத்தி.



நிர்மலா அந்தக் குறத்தி சொல்லிய வார்த்தைகளிலிருந்து அவளைக் குறி சொல்லுவதில் கெட்டிக்காரி என்று எண்ணினளே தவிர வேறு எவ்வித சந்தேகமும் அவளிடம் கொள்ளவில்லே. அவளிடம் தன் அபிப்பிராயங்களைச் சொன்னுல் அவள் தனக்கு ஏதேனும் உதவி செய்தாலும் செய்யலாம் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டது. அவளிடம் எந்த உண்மையையும் மறைத்து வைக்க அவள் பிரியப்படவில்லே. அந்தச் சமயத்தில் தெய்வாதீனமாக இப்படி ஏதேனும் உதவி தனக்குக் கிடைக்காதா என்றுதானே அவள் எண்ணினுள்?

"நீ குறி சொல்லுவதில் மிகவும் கெட்டிக்காரியாக இருக்கிருய். எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடியே சொல்லி விட்டாயே! நடந்ததெல்லாம் இருக்கட்டும். இப்போது நடக்க வேண்டியதைப் பற்றித் தான் யோசிக்கிறேன். உன்னுல் எனக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டாள் நிர்மலா.

குறத்தி இலேசாகச் சிரித்துக் கொண்டே, "நான்தான் உனக்கு உதவி செய்வதாகச் சொல்லி விட்டேனே? ஆனுல் நீ என்னிடம் ஒன்றையும் மறைக்கக் கூடாது. என் குல தெய்வங்கள் வந்து சொல்வது ஒன்றும் பொய்யாகாது. நீ இந்த வீட்டிலிருந்து கொஞ்சம் நகைகளைக் களவாடி வைத்திருப்பது உண்மைதானே?" என்ருள்.

"அது உண்மை தான். நான் களவாடியிரா விட்டால் அவைகளை வேறு யாரேனும் ஒரு நாள் கொள்ளையடித்துக் கொண்டு தான் போவார்கள். இந்த வீட்டை என்னுடைய சாமர்த்தியத்தால் இப்படிக் கட்டிக் காத்துக் கொண்டு போகிறேனே, இந்த வீட்டு எஜமானிக்கு எனக்கு ஏதேனும் நல்லது செய்ய வேணும் என்கிற மனமே இல்லே" என்ருள் நிர்மலா.

"அப்படியா! அப்படிப்பட்டவங்க பொருளைக் கொள்ளையடிப்பதில் தோஷமே இல்லே" என்ருள் குறத்தி.

"நான் இந்த நகைகளில் பாதி வேண்டுமானுலும் உனக்குக் கொடுத்து விடுகிறேன். அது எனக்குப் பெரிதல்ல. ஆனுல் நீ எனக்கு ஒரு உபகாரம் செய்ய வேண்டும்...."

"நான்தான் உனக்கு உபகாரம் செய்கிறேன் என்று சொல்லி விட்டேனே! இந்தக் குறச்சாதி மாத்திரம் எப்பொழுதும் சொன்ன வார்த்தை தவருது என்று நினைத்துக் கொள். உனக்கு என்ன ஆக வேண்டுமோ அதைத் தாராளமாக என்னிடம்


Erasmic
PERFUMED
COCONUT
HAIR OIL
கூந்தலுக்கு இராஸ்மிக்
பரிமள தேங்காயெண்ணெய்
ECH. 1-50 TM

சொல்லு'' என்ருள் அந்தக் குறத்தி பகிரங்கமாக.

நிர்மலா குறத்திக்குச் சமீபமாக நெருங்கி உட்கார்ந்து மெதுவான குரலில் அந்தரங்கமாக ஏதோ சொன்னுள். விஜயரங்கன் தேவிப் பட்டினத்தில் எங்கு தங்குவான் என்பதையும், அவனுடைய அங்க அடையாளங்களையும் சொல்லி, அவனை எப்படியாவது கொலை செய்து மனிதர்கள் கண்களில் படாமல் அவன் உடலை மறைத்து வைத்துவிட வேண்டும் என்றும் சொன்னுள். அப்படிச் செய்து விட்டால் அவளுக்கு ஏராளமான வெகுமானம் தருவதாகச் சொன்னுள் நிர்மலா.

குறத்தி எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டுக் கொண்டு, ''அதைப் பற்றி நீ கவலைப்படாதே. தக்க ஆசாமியைக் கொண்டு எல்லாவற்றையும் சீராக முடித்து விடச் சொல்கிறேன்'' என்ருள்.

அவள் எப்படியேனும் விஜயரங்கனைக் கொன்று விட்டதற்கு ஆதாரமாக ஏதாவது அடையாளங்களைக் கொண்டு வந்து காட்டினுல் தன்னிடமுள்ள நகைகள் அவ்வளவையும் கொடுத்துமேலும் இருநூறு ரூபாய்கள் வெகுமானம் தருவதாகச் சொன்னுள்.

நிர்மலா வைத்திருக்கும் நகைகளில் அப்பொழுதே பாதியையாவது கொடுத்தால் தான் இந்தத் துணிகரமான காரியத்தைச் செய்ய இயலும் என்று குறத்தி கண்டிப்பாகச் சொல்லி விட்டாள். குறத்தியின் அபிப்பிராயங்களுக்கு இணங்கி நிர்மலா தன்னிடமுள்ள நகைகளில் பாதியைக் கொடுத்து விடலாம். ஆனுல் அவள் நகைகளைப் பதுங்கி வைத்திருக்கும் இடத்திலிருந்து அப்பொழுது அவ்வளவு சுலபமாக எடுத்துவிட முடியாது. அந்தக் குறத்திக்குத் தன் மீது நம்பிக்கை ஏற்படுவதற்காக, அந்த நகைகளைச் சுலபமாக நினைத்தபோது எடுக்க முடியாத இடத்தில்வைத்திருக்கும் ரகசியத்தைச்சொன்னுள், குறத்தியின் காதோடு காதாக. நகைகள் எங்கே ஒளித்து வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறிந்துகொண்டதும் குறத்தி மிகவும் திருப்தி அடைந்தவள் போல், ''சரி! நகைகள் கிடக்கட்டும். இப்பொழுது ஒரு நூறு ரூபாய் பணமாவது கொடுத்தால்தான் ஆசாமிகள் தயங்காமல் வேலை செய்வார்கள்'' என்ருள்.

நிர்மலா அதற்கு இணங்கியவளாகத் தன் அறைக்குச் சென்று பத்துப் பத்து ரூபாய் நோட்டுகளைக் கொண்டு வந்து குறத்தியிடம் கொடுத்தாள். அந்தக் குறத்தி அவைகளை ஒவ்வொன்ருக எண்ணித் தன் துணிப் பையில் வைத்துக் கொண்டு இரண்டு நாட்களில் காரியத்தை முடித்துக்கொண்டு வருவதாகச் சொல்லிச் சென்ருள்.

தன்னுடைய திட்டங்கள் நிறைவேறுவதற்கு ஒரு வழி கண்டு பிடித்துவிட்டதில் நிர்மலாவுக்கு எவ்வளவு மன நிம்மதியும் ஆறுதலும் ஏற்பட்டதோ, தெரியவில்லை. ஆனுல் குறத்தி மீனுச்சிக்குத்தன்னுடைய முயற்சியில் இவ்வளவு சுலபமாக வெற்றி கிடைத்ததில் மிகுந்த மன ஆறுதலும், நிம்மதியும் ஏற்பட்டன.



அப்பொழுதுதான் வாய்க்காலில் இருந்து தண்ணீர் கொண்டு வந்த அஞ்சுகத்தைக் குறத்தி மீனுச்சி அழைத்து, கோடைகாலம் வந்துவிட்டதால் தாங்கள் இனி அந்தக் கிராமத்தில் இருப்பது கடினமென்றும், காட்டுக்கு மத்தியில் இருக்கும் எலிக் கோட்டை என்ற இடமே தாங்கள் வசிப்பதற்கு ஏற்ற இடமென்றும், மறுநாளே குடிசையைப் பிரித்துக்கொண்டு போகப் போவதாகவும் சொன்னுள். அஞ்சுகம் அதற்கொன்றும் பதில் சொல்லவில்லை. அவர்கள் எங்கு செல்வதாயிருந்தால் அவளுக்கு என்ன? அவளும் அவர்களோடு போக வேண்டியவள்தானே? அவர்களை விட்டால் அவளுக்கு வேறு கதி ஏது? அவர்களோடு வசிப்பதுதானே அப்பொழுது அவளுக்குப்பத்திரம்? அவர்கள் தன்னைக் கைவிடாமல் காப்பாற்றினுல் அதுவே போதுமென்று எண்ணினுள்.

மறுநாள் விடியற் காலையிலேயே மீனுச்சி சொல்லியபடியே எலிக் கோட்டையை நோக்கி அவர்கள் பிரயாணம் ஆரம்பமாகியது.

எலிக்கோட்டை என்பது, அந்தக் கிராமத்துக்குப் பக்கத்திலுள்ள வேறொரு

கிராமமாக இருக்கலாம் என்று அஞ்சுகம் எண்ணினாள். ஆனால் மீனாச்சியும் அவர்களுடைய புத்திரர்களும் தங்களுடைய சாமான்களைச் சுமந்து அடர்ந்த காட்டிடையே நடந்த பொழுதுதான் எலிக்கோட்டை என்பது மனித சஞ்சாரமற்ற ஒரு பயங்கரமான இடமாக இருக்குமோ என்று அஞ்சுகம் சந்தேகப்பட்டாள். முதல் நாள் இரவு மீனாச்சி தன் புதல்வர்களுடன் நெடுநேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தது அஞ்சுகத்துக்குத் தெரியும். அவள் என்ன பேசுகிறாள் என்பதைப் பற்றி அஞ்சுகம் அப்பொழுது கவலைப்படவே யில்லை. ஆனால் அவள் அந்தக் காட்டிடையே நடக்கும் போதுதான். அவர்கள் ஏதோ ஒரு பயங்கரமான சதிச் செயலைச் செய்யத்தான் முதல் நாள் இரவு நெடுநேரம் யோசித்திருக்க வேண்டுமென்றும், அதற்காகவே வேறு இடம் மாறுவதாகவும் அவளுக்குத் தோன்றியது. எப்படி இருந்தால் என்ன? உலகத்தில் அவள் அவர்களைத் தானே நம்பி இருக்கிறாள்? எல்லாம் கடவுள் விட்ட வழி என்று எண்ணி அவர்களைப் பின்தொடர்ந்தாள்.

மரங்களும் புதர்களும் அடர்ந்த அக் கடினமான பாதையில் இரண்டு மூன்று மைல்கள் 'நடந்த பின் ஒரு சிறிய ஆற்றங்கரையை அடைந்தனர். வளைந்து செல்லும் அந்தச் சிறிய ஆறும், மனோரம்மியமான காட்சிகளும் அஞ்சுகத்தின் மனத்தில் எழுந்த சிறு பயத்தை மாற்றி ஆறுதல் அளிக்கக்கூடியதாய் இருந்தன. அது ஒரு காட்டாறாகத்தான் இருக்க வேண்டுமென்று அவளுக்குப் பட்டது. எப்படியோ சிறிதாவது மனித சஞ்சாரமுள்ள இடத்துக்குத்தான் நாம் வந்திருக்கிறோம் என்ற மன ஆறுதல் அவளுக்கு ஏற்பட்டது. அந்த ஆற்றங்கரை வழியாகச் சிறிது தூரம் நடந்த பின் பாழடைந்த புராதனமான கட்டடங்கள் நிறைந்த ஒரு இடத்தை அவர்கள் அடைந்தனர். எலிக்கோட்டை என்றால் பெயருக்குத் தக்கபடி விசித்திரமான ஒரு இடமாக இருக்கும் என்று அவள் நினைத்தாள். பெரிய பெரிய புராதனமான கட்டடங்களை எல்லாம் கண்டபின் அது ஒரு காலத்தில் மிகுந்த பிரசித்தியோடு விளங்கிய இடம் போல அவளுக்குத் தோன்றியது.

குறத்தி மீனாச்சி சிரித்துக்கொண்டே அஞ்சுகத்தைப் பார்த்து, "இதுதான் எலிக்கோட்டை. முன்பு நாமிருந்த இடத்தை விட இது சந்தோஷமாகவும் மன நிம்மதியாகவும் இருக்கும். முன் காலத்திலே இந்த இடங்களெல்லாம் பெரிய ராசாக்கள் வாழ்ந்த இடம். இதெல்லாம் அவர்கள் அரண்மனை, கோட்டை. ஆனால் இப்பொழுது இந்த இடம் நமக்கு அரண்மனை. நமக்குச் சொந்தம். பயப்படாதே. போலீஸ்காரங்களுக் கெல்லாம் உலகத்தில் எந்த இடம் தெரிந்தாலும் தெரியும், இந்த இடம் மாத்திரம் தெரியாது. அப்படி போலீஸ்காரர்கள் வந்தாலும் நாம் எங்கிருக்கிறோம் என்பதுதெரியாதவண்ணம் எங்கேயாவது போய்ப் புகுந்துவிடலாம். யாரும் துணிந்து இந்தக் கட்டடத்துக்குள் ளெல்லாம் நுழையு மாட்டார்கள். முன்னே ராஜாக்கள் வாழ்ந்த காலத்தில் யார் யாரோ படை எடுத்தார்களாம். ஆனால் இப்பொழுது நாமிருக்கும்போது யாரும் படையெடுத்து வர மாட்டார்கள். இங்கேயும் இப்பொழுது ராசாக்கள் இல்லை. இந்தக் கோட்டை மீது படையெடுக்கவும் இப்பொழுது உலகத்தில் ராசாக்கள் இல்லை. ராசாத்தி போல் உல்லாசமாக இந்த இடத்தில் எங்கு வேண்டுமானாலும் சுற்றித் திரியலாம்...." என்றாள்.

உண்மையாகவே அந்த இடம் ஒரு காலத்தில் யாரோ ஒரு அரசன் வாழ்ந்த இடம்போல்காணப்பட்டது. (தொடரும்)

## நூற்புப் பயிற்சியும், கதர் விற்பனையும்

அகில பாரத சர்வ சேவாசங்கம் சென்னை விபாகம் கதர் வஸ்திராலயத்தின் சார்பில் அம்பர் சர்க்கா நூற்புப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. நூற்புப் பயிற்சி சம்பந்தமாக ஆண்கள் "சூப்பிரண்டெண்டண்ட், தயாசதனம், 45, கொன்னூர் ஹைரோடு, அயன்புரம், பெரம்பூர், சென்னை" என்ற விலாசத்துக்கும், பெண்கள் "காரியதரிசி, 'கோகுலம்' 11-பி. எல்டாம்ஸ் ரோடு, தேனாம்பேட்டை, சென்னை" என்ற விலாசத்துக்கும் கடிதம் மூலமாகவோ அல்லது நேரிலோ சென்று விவரம் தெரிந்து கொள்ளலாம்.

காந்தி ஜெயந்தியை முன்னிட்டு, அகில பாரத சர்வசேவா சங்கம் சென்னை விபாகம் கதர் வஸ்திராலயங்களில் 2-10-56 முதல் 31-10-56 சில்லறைக் கதர் விற்பனையில் ஏற்கெனவே கொடுக்கும் கமிஷனுடன் ரூபாய்க்கு அரையணா அதிகமாகக் கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். கதர் அன்பர்கள் இதைப் பயன்படுத்திக் கொள்ளக் கேட்டுக் கொள்கிறோம்.

# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்....என்றும்!




காஷ்மீர்பொக்கே டால்கம் பௌடர் சுத்த மனோரம்மியமே! மிக்க மிருதுவாக உங்கள் உடலில் வஸந்தகாள் காலையின் புத்துணர்ச்சியை அள்ளித் தெளிக்கிறது– உடலை ரம்மியமணத்துடனும் குளிர்ச்சியுடனும் மணிக்கணக்காக வைத்திருக்கிறது. அதிகப்படி ஈரத்தை உறிஞ்சுகிறது ... அரிப்பையும் எரிச்சலையும் தவிர்க்கிறது ... உங்கள் வசீகரத்தையும் மென்மையையும் பன்மடங்கு காக்குகிறது.

# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பௌடர்

*ஆண்கள் விரும்பும் நறுமணத்துடன்*

ஒரு கால்கேட்—பாமாலிவ் தயாரிப்பு

கால்கேட் 1806 முதல் தரத்துக்குப் பெயர் போனது

# டினோபால் வெண்மை என்றால்

# வெண்மையிலும் வெண்மை என்று அர்த்தம்



சாதாரண சோப்பினால் சுத்தம் செய்த பின் உங்களுடைய வெண்மையான ஆடைகளுக்கு டினோபால் உபயோகிப்பதால், நீங்கள் எவ்வித தோற்றமளிக்கின்றீர்கள் எனப் பாருங்கள், வெண்மையான ஆடைகளைப் பிரகாசமாகவும், பளபளப்பான வெண்மையுடனும் வைக்கச் செய்யும் பிரத்தியேகமான தொகுணம் டினோபாலிலடங்கியுள்ளது.



## டினோபால்

"டினோபால்" என்பது ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பாஸல், ஸ்விட்ஸர்லாந்த், அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்.

அமால்கமேடட் கெமிக்கல்ஸ் அண்ட் டைஸ்டப்ஸ் கோ, பிரைவேட் லிட்.,
பி. ஓ. பாக்ஸ் 965, பம்பாய்.

# வட்ட மேஜை

## "இலக்கியச் செல்வம்"

செப்டம்பர் 30உ ''கல்கி'' இதழில் பேராசிரியர் திரு அ. சீநிவாச ராகவன் அவர்கள் எழுதப் போகும் தொடர் கட்டுரைகள் பற்றிய அறிவிப்பைக் கண்டு மகிழ்ந்தேன்.

உயர்ந்த திறமை படைத்த பேராசிரியர் இதுகாறும் தமது நடையின் உயர்வு காரணமாகவே சாதாரண மக்களின் கைக்கு எட்டாத கனியாக விளங்கி வந்தார். இன்று அக்கனியை எல்லோருக்கும் எட்ட வைக்கும் ஏணியாக உதவக் ''கல்கி'' முன் வந்திருப்பது கண்டு நான் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன்.

சேலம்
30—9—56
ஏ. எஸ். நாகராஜன் (கிவ்யா டைரக்டர்)

## பெரிய அதிர்ஷ்டம்

"இலக்கியச் செல்வம்" என்ற தலைப்பில், ஸ்ரீ அ. சீநிவாசராகவன் அவர்கள், தொடர்ந்து இலக்கியக் கட்டுரைகள் எழுதுவார் என்ற செய்தியைப் படித்தேன், பெரு மகிழ்ச்சி யடைந்தேன். இன்றையத் தமிழகத்தில், அ. சீ.ரா. ஒரு சிறந்த இலக்கிய மேதை. ''சித்தலை''யைத் தொடர்ந்து படித்தவர்களுக்கு அவர் மேதை புலப்பட்டிருக்கும்.

அமரர் கல்கி, ரஸிகமணி டி. கே. சி. இவர்கள் இல்லாத குறையை அ. சீ. ரா. ஒருவரே நிரப்ப முடியும். 'கல்கி'யில் அவர் தொடர்ந்து எழுத ஒப்புக் கொண்டது, வாசகர்களுக்குப் பெரிய அதிர்ஷ்டம். இந்தச் செய்தியைப் படித்ததுமே, 'கல்கி' பூர்ணத்துவம் அடைந்துவிட்டதுபோல் தோன்றுகிறது.

திப்பிராஜபுரம்
28—9—56
வி. பாலசுப்பிரமணியம்

## சிறந்த சித்திரம்

"மின்சாரத் தறிப் பிரச்னை" என்ற தலைப்பின் கீழ் 30—9—56ல் 'கல்கி' இதழில் வெளியாகி யிருக்கும் கார்ட்டூனைக் கண்டு மகிழ்ந்தேன். அதில் சென்னை அரசியலாரின் மின்சாரத் தறிக் கொள்கையைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறீர்கள்.

வீரனூர்
29—9—56
வீரனூர் சபாபதி

## கட்டணம் குறையுமா?

ரயில்வே சர்வீஸ் கமிஷன் உத்தியோகத்துக்கு ஆள் தேவை என்று விளம்பரங்கள் பத்திரிகைகளில் அடிக்கடி வருகின்றன. ஆனால் என்ன பிரயோசனம்? ரயில்வே சர்வீஸ் கமிஷன் வேலைக்கு மனுப்போடுவதற்குக் கீழ்த்தர வகுப்பினர்களுக்குக் கட்டணம் அணா நான்கு என்றும், மற்ற வகுப்பினர்களுக்குக் கட்டணம் ரூபாய் ஒன்று என்றும் வெகு காலமாக வைத்திருக்கிறார்கள்.

இவற்றில் கீழ்த்தர வகுப்பினர்களைத் தவிர மற்றவர்களுக்காக வைத்திருக்கும் கட்டணம் மிக அதிகமாகக் காணப்படுகிறது. வேலைக்காக மனுச் செய்து கொள்பவர்கள் எல்லோரும் ஒவ்வொரு முறையும் தங்களது பெற்றோரையே பணம் கேட்டு வாங்கிக் கட்டணத் தொகை செலுத்த வேண்டியிருக்கிறது. அத்துடன் முதல்முயற்சியிலேயே வேலை கிடைத்து விடுகிறதா என்றால் அதுவும் இல்லை. அதனால் பல தடவைகள் முயற்சி செய்ய வேண்டியிருப்பதால் பல ரூபாய்கள் வேண்டியிருக்கின்றன. மேற்படி பணத்துக்காக அவர்கள் தம் பெற்றோரை ஒவ்வொரு முறையும் நாட வேண்டியிருக்கிறது. இதனால் பெற்றோர்களுக்கு அதிகப் பணக் கஷ்டம் உண்டாகிறது. இதை அரசாங்கம் கவனித்து இனிமேலாவது கட்டணத் தொகையைக் குறைப்பார்களா?

சென்னை-17
6—9—56
வி. பாலசுப்ரமண்யம்

## சதாம்ச நாணயம்

இப்போது நம்மிடையே புழக்கத்தில் இருந்து வரும் உலோக நாணயம் வெள்ளியில்லை. அதற்குச் சுயமதிப்பு இல்லை. அரசாங்கம் நிர்ணயித்துள்ள சங்கேத மதிப்புத்தான் உள்ளது. இப்போது இருந்து வரும் காலணாவை ஒரு சதம் என்று வைத்துக் கொண்டால் போதும். சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வரப் போகும் சதாம்ச நாணய முறையில் சிக்கல் எதுவும் இராது. அரை அணா, ஒரு அணா, இரண்டு அணா, நாலணா, எட்டணா நாணயங்கள் அப்படியே இருக்கலாம். ஆனால் ரூபாயில் மாத்திரம் மாறுதல் செய்ய வேண்டும். மலாய் நாட்டில் உள்ள டாலரைப் போல், இருபத்தைந்து அணா கொண்ட ரூபாய்கள் அடிக்க வேண்டும். இப்படிச் செய்தால் ஜனங்களுக்குக் கஷ்டமோ, நஷ்டமோ ஏற்படாது. இப்போது ஒரு அணாவுக்கு நாலு காலணாவாக இருப்பது புதிய முறைப்படி நாலு சதமாக மாறும். இவ்வாறாக, புது நாணயங்களோ, சிக்கல்களோ இராமல் சதாம்ச நாணய முறையை அமுலுக்குக் கொண்டு வரலாம்.

கோயமுத்தூர்
28—9—56
ஆர். எஸ். சங்கரய்யர்

## ரகுபதி ராகவ

நான் உங்கள் நாட்டில் கால் நூற்றாண்டுக்கு முன் இருந்தவன். படித்தவன். அங்கு நான் படித்தது சமூக சமயச் சண்டைகள் தான். நான் படித்த பள்ளிக்கூடங்களில் சமூக துவேஷந்தான் ஊட்டப்பட்டது. இத்தகைய பூசல்களையும் வேறுபாடுகளையும் இயற்கையிலேயே விரும்பவில்லை.

ஆகவே நான் பால்ய நாட்களில் விரும்பிய சமூக, சமய, தேசீய ஒற்றுமையை வளர்க்க என் மனத்தில் எழுந்த புரட்சிகரமான கனவுகளை நனவாக்கும் சந்தர்ப்பம் நான் ஸ்தாபித்த எங்கள் ஹாஸ்டல் மூலம் ஏற்பட்டது.

எங்கள் ஹாஸ்டலில் முந்நூறுக்கு மேற்பட்ட மாணவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பல சமூகங்களைச் சேர்ந்தவர்கள். பல சமயத்தைச் சேர்ந்தவர்கள். பல வேறுபாடுகள் உடையவர்கள். அவர்கள் எல்லோருக்கும் சுதந்திர, சமத்துவ, சமரச, சன்மார்க்கக் கொள்கைகளைப் பரப்பி, ஒரு தாயின் வயிற்றுப் பிள்ளைகள் போல் இருக்கிறோம்.



சங்கீத மும்மூர்த்திகள் அவதரித்த திருவாரூரில் செப்டம்பர் 16ந்தேதி யன்று புண்ணிய மூர்த்திகளான ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாமா சாஸ்திரிகள் திரு வுருவப் படங்களை ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். நாதசுர இன்னிசையுடன் தூக்காலயத் தெருவிலிருந்து மேட்டுத் தெருவில் உள்ள ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் இல்லத்துக்குச் சென்று அங்கே வைதிக முறைப்படி பிரதிஷ்டை செய்தனர். அன்று ஆலத்தூர் வித்வான் ஸ்ரீ. வெங்கடேசய்யர் அவர்கள் தலைமையில் கோஷ்டி கானமும் நடைபெற்றது.

---

இத்தகைய கொள்கைகளில் வெற்றி யடைந்ததற்குக் காரணம் சகிப்புத் தன்மை தான். அதுதான் எங்கள் வெற்றிக்கு அடிப் படையாக நாங்கள் அறியாமலே இருந்து வந் திருக்கிறது. நீங்கள் தற்சமயம் மகாத்மா காந்தியின் ''சத்தியமே தெய்வம்'' என்ற கருத்துக்களை விளக்கிவரும் 'ரகுபதி ராகவ' என்ற பகுதியில் சகிப்புத்தன்மையைப் பற்றிய தைப் படித்ததும் எங்கள் மூல பலத்தை அறிந்து மகிழ்ந்தோம்.

அசோகா மாணவர் ஸ்டாக்
கண்டி
10—9—56

பி. டி. ராஜன்

## சர்க்கார் கவனிக்குமா?

பாரத நாட்டுப் பண்டிகைகளில் மிகவும் முக்கியமானது தீபாவளிப் பண்டிகை. இந்த வருஷம் தீபாவளிப் பண்டிகை 1—11—56ல் வருகிறது. 1–11–56ம், 2–11–56ம் விடு முறை நாட்கள். சர்க்கார் சிப்பந்திகள் பண்டி கைச் செலவுக்குச் சம்பளம் கிடைக்காது தவிப் பார்கள். ஆகையால், சர்க்கார் சிப்பந்தி களுக்கு அக்டோபர் மாதச் சம்பளம் 30–10–56லேயே கிடைக்க அரசாங்கம் உத்தரவு செய்ய வேண்டும். ஏழை சர்க்கார் சிப்பந்திகளுக்குத் தாராளமாகச் சம்பளம் கொடுக்க மனம் இல்லாவிட்டாலும் இந்த ஒரு நல்ல காரியத்தையாவது அரசாங்கம் செய்ய வேண்டும் என்று சர்க்கார் சிப்பந் திகள் சார்பில் கேட்டுக் கொள்கிறேன்.

திருவாரூர்
29—9—56

அருணா நமசிவாயம்

## குறளுக்கு இலக்கணம்

அருமையான குறளுக்கு அழகான இலக் கணமாக அமைந்திருக்கிறது. ''யாரைப் பொறுக்குவது?'' என்ற செப்டம்பர் 23ந் தேதி இதழில் வெளிவந்துள்ள உபதலையங்கம்.

''உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.''

இப்போதெல்லாம் 'கல்கி'ப் பத்திரிகை மிகப் பொலிவுடன் விளங்குகிறது.

விட்டலபுரம்
21—9—56

வெங்கடாச்சாரி

## யார் சுயநலக்காரர்?

முதன் மந்திரி ஸ்ரீ காமராஜர் சேலம் ஜில்லா தாரமங்கலத்தில் நடந்த கூட்டத் தில் விசைத் தறிகளைக் குறிப்பிட்டு, ''கைத் தறித் தொழிலுக்கு உதவுவதில் சர்க்கார் ரொம்பவும் அக்கறையா யிருக்கின்றனர். ஆகவே சில சுயநலமிகளின் தப்புப் பிரசாரத் துக்குச் செவி சாய்க்கவேண்டாம்'' என்று பேசியுள்ளார். இதைப் பார்க்கும்பொழுது ஒரு பக்கம் ஆச்சரியமும், மறு பக்கம் வருத்த மும் உண்டாகிறது. சுயநலமிகள் தப்புப் பிரசாரம் செய்கிறார்கள் என்று முதன் மந்திரியார் யாரைக் குறிப்பிடுகிறார்?

விசைத்தறிகளினால் உண்மையாகவே கைத் தறியாளர்களுக்கு ஏதாவது நன்மை உண்டா என்பதை ஆராய வேண்டும். ஒவ்வொரு விசைத்தறியும் ஐந்து கைத்தறிகளின் வேலை யைச் சுலபமாகச் செய்து முடிக்கும் சக்தி வாய்ந்தது. இதன்படி பார்த்தால் ஒவ்வொரு விசைத் தறியினாலும் ஐந்து கைத்தறியா ளர்கள் வேலை இழப்பார்கள். ஆனால் சாதக மாகச் சர்க்காரின் வாதம் என்னவென்றால், விசைத் தறிகளின் மூலம் கைத்தறியாளர் களின் வருமானம் அதிகரிக்கிறது என்பது ஒன்றேதான். ஆனால் தற்போது யார் யார் விசைத் தறிகளை வைத்துநடத்திவருகிறார்கள்? சாதாரண கைத்தறியாளர்கள் இவ் விசைத் தறிகளை வைத்து நடத்த முடியாது. மேலும் மின்சாரம் பரவாத கிராமங்களிலும் ஓட்ட முடியாது. மின்சார வசதியுள்ள இடங்களி லுள்ள முதலாளி வர்க்கம்தான் விசைத்தறி யின் மூலம் பயனடைய முடியும். கிராமங் களிலுள்ள நெசவாளர்களுக்கு விசைத்தறியின் மூலம் பயன் கிடைக்காது.

திருநெல்வேலி
14—9—56

வி. காந்திமதி

# ஸிரோலின்

**உங்கள் இருமலின் மூலகாரணத்தை நிறுத்துகிறது . . . 'நீங்கள் இருமுவதை நிறுத்த' மட்டுமல்ல அது செய்வது**



ஸிரோலின் உங்கள் இருமலுக்குக் காரணமான அபாயகர கிருமிகளை ஒழிக்கிறது

இருமல் அபாயத்தின் அறிகுறி. உங்கள் தொண்டையிலும் ஸ்வாசப் பைகளிலும் உள்ள மெல்லிய தசை நார்கள் வீக்கி ரணமாயிருப்பதை அது குறிக்கிறது. எனவே இருமலின் மூல காரணத்தை வேரறுக்கக்கூடிய ஒரு மருந்துதான் உங்களுக்கு தேவை — நீங்கள் இருமுவதை மட்டும் நிறுத்தும் மருந்தினால் யாதொரு பயனுமில்லை.

ஸிரோலின் இருவழிகளில் உங்கள் இருமலின் மூலகாரணத்தை நிறுத்துகிறது. முதலாவதாக அதன் விஷநாசக குணம் நோய்க் கிருமிகளை ஒழித்து, நோய் விஷம் பரவாமல் தடுக்க உதவுகிறது. இரண்டாவதாக, மூச்சுத்திணற வைக்கும் கோழையும் கபமும் சுலபமாக வெளியாக உதவி, உங்களுக்கு துரிதமாக உண்மையான ஆசுவாசம் தருகிறது. ஸிரோலின் எபிட்ரின் கலப்பில்லை.








**இருமலுக்கு அபாயமற்ற குடும்ப ஔஷதம்**

ஆம், குடும்பத்தில் ஒவ்வொருவரும் எவ்வித பயமுமின்றி ஸிரோலின் உட்கொள்ளலாம் — குழந்தைகளுக்கூடத்தான். காரணம் ஸிரோலினில் மயக்கு மருந்துகளோ வேறு எவ்வகை நாசகரமான மருந்துப்பொருள்களோ கிடையாது. குழந்தைகள் அதன் இனிய மணத்தை விரும்புவர். வீட்டில் எப்பொழுதும் ஒரு புட்டி ஸிரோலின் அவசியம் வைத்திருங்கள்.

**ஸிரோலின்**
'ரோச்'

VT. 127

பிரபல ஆங்கில ஆசிரியரான மார்க் ட்வைனின் கதையொன்றை ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீ ரா. வீழிநாதன் எழுதிய 'முடிவில்லாக் கதை' 23-9-56 'கல்கி' இதழில் வெளியாகியிருந்தது. முடிவில்லாத அந்தக் கதைக்கு இந்தக் கதையின் ஆசிரியர் முடிவு காண்கிறார். — ஆசிரியர்




பாளையப்பட்டு சமஸ்தானத்தின் சிற்றரசரும் விக்கிரமனும் மயக்கமுற்று விழுந்ததும் சபையில் ஒரே பரபரப்பு ஏற்பட்டு விட்டது. எல்லோரும் செய்வதறியாது திகைத்தார்கள். விஷயம் அறிந்து பராக்கிரம பாண்டியர் சபைக்கு வந்தார். அவர் சபையில் நுழைந்ததும் ஒரு பயங்கர அமைதி நிலவியது. எல்லோருடைய உள்ளமும் தத்தளித்துக் கொண்டிருந்தது. 'என்ன நேருமோ, அரசருடைய வாயிலிருந்து என்ன ஆணை வருமோ?' என்று எல்லோரும் நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

அரசகுமாரி மரகதவல்லி விக்கிரமனிடம் காதல் கொண்டிருக்கிறாள் என்ற செய்தி ராஜ்யம் முழுவதும் தெரிந்திருந்தது. அந்தக் காதலை மக்கள் அனைவரும் வரவேற்றார்கள். ஆனால், விக்கிரமன் மரகதவல்லியை விரும்பவில்லை என்பதை யாரும் அறியவில்லை. மக்களுக்கு இந்தக் காதலில் பரம திருப்தி. மரகதவல்லி விக்கிரமனின் கரம் பற்றும் நன்னாளை ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். பாண்டிய குமாரிக்குக் குழந்தை பிறந்திருக்கிறது என்ற இரகசியம் அம்பலமானதும் அந்தக் குழந்தை விக்கிரமனுடையதாகத்தான் இருக்க வேண்டும் என்று எல்லோரும் முடிவு செய்தனர்.

''மாமன் மகளாக இருந்தாலும், விக்கிரமன் இப்படி நடந்திருக்கக் கூடாது!''

''அவன்மீது மாத்திரம் பழி சுமத்துவதில் அர்த்தம் இல்லை. அரசகுமாரி மீதும் தவறு இருக்கத்தான் செய்கிறது!''

''அப்படியே இருந்தால்தான் என்ன? அரச குடும்பத்தில் காந்தர்வ மணம் ஏற்றுக் கொள்ளக் கூடியதுதானே?''

இப்படியாகப் பலதரப்பட்ட வாதப் பிரதிவாதங்கள் மக்களிடையே எழுந்தன. ஆயினும் இதில் எல்லோருக்கும் பொதுப்படையான வருத்தம் என்னவென்றால் இந்த விஷயத்தை நீதிமன்றம் வரை கொண்டு வந்து விட்டார்களே என்பதுதான். அதோடு நின்றதா? யார் அந்தக் குற்றத்துக்கு உடந்தையாக இருந்தானோ, அவனே அதற்குத் தீர்ப்புக் கூற அமர்ந்ததுதான் வேடிக்கை. எல்லாவற்றையும் விடப் பெரிய அதிசயம் விக்கிரமனே குற்றவாளியாக மாறியதுதான்.

இந்தமாதிரியான சிக்கல்கள் ஏற்பட்டிருக்கும்போது, பராக்கிரம பாண்டியர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க மக்கள் ஆவலும் ஆதுரமும் கொள்வதுஇயல்புதானே?

மன்னர் தமது தள்ளாத வயதில் உடல்நடுங்க நீதி மண்டபத்தில் ஏறி நின்றார். ஒரு முறை சபையோர்களைச் சுற்றித் தம் பார்வையைச் செலுத்தி விட்டுக் கம்பீரமான குரலில், ''சபையோர்களே! எனது மக்களே! உங்கள் தீர்ப்பு என்ன? நீங்கள் எது சொல்லுகிறீர்களோ, அதையே நான் தீர்ப்பாக அளித்து விடுகிறேன்!'' என்றார்.

மன்னரின் குரலில் தொனித்த கடுமை சபையினரைக் கலக்கிவிட்டது. யாரும் ஏதும் பேசாமல் சிலையாக நின்றனர். ஒருவர் கூட வாய் திறக்கவில்லை. திறக்கத் தைரியம் இருந்தால்தானே? என்ன சொல்ல இருக்கிறது? இந்தச் சிக்கலை மன்னரைத் தவிர வேறு யாரால் தீர்க்க முடியும்?

மீண்டும் மன்னர் பேசினார்:

''சரி, நானே தீர்ப்புக் கூறுகிறேன். விக்கிரமனுக்கும் மரகதவல்லிக்கும் மரண தண்டனை விதிக்கிறேன்.''

மன்னர் தீர்ப்புக் கூறி முடித்தவுடன், மக்கள் கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். கூட்டத்தை இடித்துத் தள்ளிக் கொண்டு ஒரு வாலிபன் சபையோர் முன் வந்தான். மன்னரை நிமிர்ந்து நோக்கினான்.

''என்ன வீரசிம்மா! உனக்கு என்ன வேண்டும்?'' என்றார் அரசர் கடுமையாக.

''அரசே! விக்கிரமன் நிரபராதி! இந்தக் குற்றத்துக்கு உடந்தையானவன் நான்தான்''

வீரசிம்மனையும் மயங்கித் தரையில் கிடக்கும் விக்கிரமனையும் மாறி மாறிப் பார்த்தாள் மரகதவல்லி. அவள் மாத்திரம் என்ன? அந்தச் சபையில் உள்ள அனைவருமே அப்படித் தான் பார்த்தார்கள்.

விக்கிரமனுக்கும் வீரசிம்மனுக்கும் உள்ள உருவ ஒற்றுமையை எல்லோரும் கண்டு வியந்தார்கள்.

பராக்கிரம பாண்டியர் ஒரு கணம் திகைத்தார். கோபத்தோடு தம் மகளைப் பார்த்தார். மரகதவல்லிக்கு ஒரே மனக் குழப்பம். தலை சுற்றியது. சபா மண்டபம் சுற்றியது. அங்கிருந்த அனைவருமே சுழன்றனர். அவளுடைய கண்கள் இருண்டன. மங்கின அவளது கண்களில் பராக்கிரம பாண்டியரின் கோபாவேசமான முகம் தெரிந்தது. பிறகு வீரசிம்மனின் முகம் வந்து மறைத்தது. அவ்வளவுதான்; மயங்கித் தரையில் விழுந்தாள்.

சபையில் குழப்பம்எழுந்தது. மக்களது மனத்தில் பீதியும் வேதனையும் கலந்து விட்டன. அந்தச் சூழ்நிலையில் எதுவும் செய்யப் பிரியப்படாத மன்னர் வழக்கின் தீர்ப்பை மறுநாள் காலைக்கு ஒத்தி வைத்து விட்டார்.



மக்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. யார் அந்த வீரசிம்மன்? அவனுக்கும் அரசகுமாரிக்கும் எப்படித் தொடர்பு ஏற்பட்டது? அவனுடைய களை பொருந்திய முகத்தைப் பார்த்தால் அரச குடும்பத்தைச் சேர்ந்தவனைப் போலல்லவா தோன்றுகிறது? எந்தச் சந்தேகமும் மறுநாள் பொழுது விடிந்தால், தானே தெளிந்து போய் விடுகிறது!

அன்று இரவு அரண்மனையில் ஒரு இரகசியக் கூட்டம் நடந்தது. பராக்கிரம பாண்டியரின் அந்தரங்க அறையில் வீரசிம்மனும், விக்கிரமனும் நின்று கொண்டிருந்தார்கள். எதிரே மரகதவல்லி மனக் குழப்பத்தோடு தரையை நோக்கிய வண்ணமிருந்தாள். மன்னருக்கு எதிரில் ஒரு திண்டில் பாளையப்பட்டுச் சிற்றரசர் சாய்ந்திருந்தார். அவருடைய மனத்தில் வேதனையும் பயமும் சூழ்ந்து கொண்டு அவரை வாட்டி யெடுத்தன. அவருடைய உடல் உள்ளூற நடுங்கிக் கொண்டிருந்தது. சற்றுத் தூரத்தில் வயது முதிர்ந்த பெண்மணி ஒருத்தி நின்றுகொண்டிருந்தாள். அவள் வீரசிம்மனின் தாயாராம். சோழ நாட்டிலிருந்து வந்தவளாம்.

அந்த இரவில் ஒரு பெரிய இரகசியம் வெளியாயிற்று. முப்பது வருடங்களுக்கு முன் நிகழ்ந்த அந்த இரகசியம் வெளியானபோது எல்லோருக்குமே ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது.

முப்பது வருடங்களுக்கு முன் பாண்டிய நாட்டில் நிகழ்ந்த கலை விழாவுக்குப் பாளையப்பட்டு இளவரசர் — அதாவது விக்கிரமனின் தந்தை — வந்திருந்த போது, பாண்டிய மன்னரின் மகள் கோமளவல்லியைக் கண்டார். அப்போது பாண்டிய நாட்டை ஆண்டவர் பராக்கிரம பாண்டியரின் தந்தை ஜெயவீர பாண்டியர். கோமளவல்லிக்கும் பாளையப்பட்டு இளவரசருக்குமிடையே காதல் தோன்றி வளர்ந்தது. அவர்கள் இருவரும் காந்தர்வமணம் புரிந்து கொண்டனர். இரவு நேரங்களில் அந்தப்புரத்தை யடுத்த ஓடக்கரையில் சந்தித்தனர். பலநாட்களுக்குப் பிறகு பாளையப்பட்டு இளவரசர் தம் நாட்டுக்குத் திரும்பினார். அப்போது கோமளவல்லி வடித்த கண்ணீருக்கு அளவே யில்லை.

"கோமளம்! வருந்தாதே. நான் என்நாடு சென்றதும் நம் திருமணத்துக்கு வேண்டியதைக் கவனிக்கிறேன்" என்று ஆறுதல் கூறி விட்டுப் பிரிந்தார் பாளையப்பட்டு இளவரசர். ஆனால் சில நாட்களில் பாளையப்பட்டு இளவரசரின் தந்தைக்கும், ஜெயவீர பாண்டியருக்கும் பகை ஏற்பட்டது. எனவே, அந்தக் கல்யாணப் பேச்சு முறிந்து விட்டது. திருமண முயற்சி நின்று விட்டதற்காகக் கோமளவல்லியின் வயிற்றிலிருந்த சிசு வளராமல் இருந்து விடுமா? கோமளவல்லியின் தாயாருக்கு இந்த இரகசியம் நன்றாகத் தெரியும். கோமளவல்லியின் காதலுக்கு அவள் ஆசி கூறினாள். ஆனால் அது இப்படி வினையாக வந்து முடியும் என்று அவள் அப்பொழுது எதிர்பார்க்கவில்லை.

கோமளவல்லிக்கு ஆண் குழந்தை பிறந்த ரகசியம் பாண்டிய ராணிக்கும், ஒரே ஒரு பணிப் பெண்ணுக்கும்தான் தெரியும். கோமளவல்லிக்குக்கூடத் தெரியாது. குழந்தை பிறந்த போது அவள் மயக்கத்தில் இருந்தாள். அவளிடம் குழந்தை செத்துப் பிறந்ததாக அறிவிக்கப்பட்டது. இந்த இரகசியம் வேறு யாருக்குமே தெரியாதபடி மறைத்து விட்டாள் பாண்டிய நாட்டு ராணி. அந்தப் பணிப் பெண்ணிடம் பிறந்த குழந்தையைக் கொடுத்துச் சோழ நாட்டில் போய் வாழும்படி செய்தாள். ராணியின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அந்தப் பணிப் பெண், சோழ நாட்டில் அந்தக் குழந்தைக்காகக் கன்னியாகவே வாழ்ந்தாள். கேட்போரிடம் அது தன்னுடைய குழந்தையென்றும் தன் கணவன் இறந்து விட்டானென்றும் கூறி வந்தாள்.

குழந்தை பிறந்து ஆறு மாதங்களுக்குள் ஜெய வீர பாண்டியரின் பட்டமகிஷி



''நாம் பல நூற்றாண்டுகளாகச் செய்துள்ள இந்தப் பாவத்துக்குப் பிராயச் சித்தம் செய்வதற்கான ஒரே வழி ஹரிஜனங்களுடன் நாம் நட்புக் கொள்வதேயாகும். அதாவது அவர்களுடைய வீடுகளுக்கு நாம் செல்ல வேண்டும். உங்களுடைய குழந்தைகளை நீங்கள் கட்டித் தழுவிக் கொஞ்சுவதுபோல் அவர்களுடைய குழந்தைகளையும் கட்டித் தழுவ வேண்டும். அவர்களுடைய க்ஷேம லாபங்களில் அக்கறை கொள்ள வேண்டும். அவர்கள் சாப்பிடுவதற்குப் போதிய உணவு கிடைக்கிறதா? குடிப்பதற்குச் சுத்தமான தண்ணீர் கிடைக்கிறதா? நீங்கள் உரிமையுடன் அனுபவிப்பதுபோல் அவர்களுக்கும் நல்ல வெளிச்சமும் காற்றும் கிடைக்கிறதா? என்பதை எல்லாம் நீங்கள் கண்டறிந்து அவர்களுக்குச் சகல வசதிகளும் கிடைக்க வழி செய்ய வேண்டும்.''

— மகாத்மா காந்தி —

# ஹரிஜனங்களுக்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமைகளை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்

DA – 56/104

இறந்து விட்டாள். அவள் இறந்து ஒரு வருடத்துக்குப் பிறகு ஜெயவீர பாண்டியருக்கும், பாளையப்பட்டுக்காரர்களுக்கும் இருந்த பகை மாறி நட்பு ஏற்படவே, மீண்டும் விட்டுப் போன பழைய கல்யாணப் பேச்சு ஆரம்பமாயிற்று. ஒரு நன்னாளில் கோமளவல்லி, பாளையப்பட்டு இளவரசனின் கரம் பற்றினாள். ஆனால் ஊரறியத் திருமணம் நடக்கும் முன்பே, தனக்கும் தன் கணவருக்கும் பிறந்த குழந்தையைப் பற்றி அவள் தன் கணவரிடம் தெரிவிக்கவே இல்லை. பிறந்த குழந்தை இறந்து விட்டது என்ற எண்ணத்திலிருந்த கோமளவல்லி, இறந்து போன குழந்தையைப் பற்றிக் கூறுவானேன் என்று பேசாமலிருந்து விட்டாள்.

மணமாகிப் பல வருஷங்களுக்குப் பிறகு தான் அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. இந்தப் பெண் குழந்தைதான் விக்கிரமன் என்ற பெயரில் வளர்ந்து வந்தது.

சோழநாட்டில் வளர்ந்த வீரசிம்மனுக்கும் பாளையப்பட்டுச் சிற்றரசர்தான் தன் தந்தை யென்பது தெரியாது; தெரியாதபடி வளர்க்கப்பட்டான். அவன் பாண்டிய நாட்டு அரண்மனை ஒற்றனாக அமர்ந்த போது கூட அவனுக்கு இந்த இரகசியம் தெரியாது.

பராக்கிரம பாண்டியரின் அரண்மனையில் வீரசிம்மன் ஒற்றனாகச் சேர்ந்த இரண்டாம் நாள்தான் விக்கிரமன் வந்து சேர்ந்தான். வீரசிம்மன் அநேகமாகத் தன் சுய உருவில் இருப்பதேயில்லை. ஒற்றனாகையால் மாறு வேடத்தில் இருப்பான். சில வேளைகளில் அவன் தன் சுய உருவிலிருக்கும் போது பாண்டிய குமாரி மரகதவல்லி அவனிடம் தனிமையில் காதல் மொழி பேசுவாள். வீரசிம்மன் விவரமறியாது குழம்புவான்.

வீரசிம்மன் இதயத்தில் மரகதவல்லி குடியேறிவிட்டது உண்மைதான். ஆனால், அது சாத்தியமான காரியமா? அவனால் அரசகுமாரியை மணக்க முடியுமா? அவன் ஒரு சாதாரண ஒற்றன்தானே! ஆனால், அரசகுமாரியே அவனிடம் வலிய நெருங்கிக் காதல் மொழி பேசும்போது?...அசட்டுக் காதலுக்கு இந்த உயர்வு தாழ்வு தெரியவா செய்கிறது?

இந்தச் சமயத்தில்தான் பாளையப்பட்டு சிற்றரசர் அனுப்பி வைத்த மார்த்தாண்டன் பாண்டிய மன்னரின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். சிற்றரசரால் அவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்த வேலை இதுதான்:

மார்த்தாண்டன் தன் அழகையும் சாதுர்யத்தையும் உபயோகித்துப் பாண்டிய அரசகுமாரியை மயக்கித் தன்னுடையவளாக்கிக் கொண்டு விடவேண்டும்.

இந்தக் காரியத்தைச் சாதிப்பதற்காக அவன் பராக்கிரம பாண்டியரின் அரண்மனையிலேயே வேலைக்கு அமர்ந்தான். அவன் மரகதவல்லியை மயக்க எவ்வளவோ முயன்றும் பலிக்கவில்லை. காரணம், வீரசிம்மனின் அறிவுத்திறன்தான். தக்க சமயத்தில் வீரசிம்மன் தோன்றி அவனது முயற்சிகளுக்கெல்லாம் மண் காட்டத் தொடங்கவே, மார்த்தாண்டன் வெட்கிப் போய் அந்நாட்டை விட்டே ஓடி விட்டான். மரகதவல்லியோ அவனைக் கைகொடுத்துக் காக்கும் கடவுளாக எண்ணித் தன் மனத்தையே பறி கொடுத்து விட்டாள். எனவே, அவள் காதல் மேலும் வலுப்பெற்று விட்டது.

வசந்த காலத்தில் ஒரு பௌர்ணமி இரவன்று ஓடக்கரையில் ஒற்றன் வீரசிம்மன் அமர்ந்திருந்தபோது, அவனை விக்கிரமன் என்று எண்ணி நெருங்கினாள் அரசகுமாரி. சூழ்நிலையும், இயற்கையின் தூண்டுதலும் இருவரது அறிவையும் மயக்கிவிட்டன.

அந்தச் சம்பவத்துக்குப் பிறகு, வீரசிம்மனின் மனம் அமைதியை இழந்துவிட்டது.

விக்கிரமனும், தானும் ஒரே முகத்தோற்ற முள்ளவர்களாக இருப்பதால், தன்னை விக்கிரமனென்று எண்ணி மரகதவல்லி நேசிக்கிறாள் என்பதை அறிந்த பொழுது வீரசிம்மனுக்குச் சம்மட்டி கொண்டு அடிப்பதுபோலிருந்தது. அடுத்த சில மாதங்களுக்கெல்லாம் விக்கிரமன் உண்மையில் ஆண் இல்லை, ஒரு பெண் என்பதும் அவனுக்குத் தெரிந்தது. தான் செய்தது ஹிமாலயத் தவறு என்று மனம் நொந்தான்.

அதோடு அரசகுமாரிக்கு ஒரு குழந்தையும் பிறந்து ஊர் அறியும் பகிரங்க ரகசியமாகி விடவே, வீரசிம்மன் நடுநடுங்கினான். உண்மை வெளியானால் அவனுக்குக் கிடைக்கக் கூடியது மரண தண்டனையல்லவா? அந்தக் குழந்தை அவனுக்குத்தானே பிறந்திருந்தது!

இவ்வளவு பெரிய இரகசியம் பராக்கிரம பாண்டியனின் அந்தரங்க அறையில், வீரசிம்மனின் தாயார் என்று சொல்லப்பட்ட கிழவியால் வெளியிடப்பட்டபோது, பாளையப்பட்டு அரசரின் தலை சுழன்றது. முப்பது வருடங்களுக்கு முன் நடந்த சம்பவங்களை மனத்தில் கொண்டு வந்து நிறுத்தினார். அவருடைய தளர்ந்த உடல் உணர்ச்சிப் பெருக்கினால் நடுங்கியது. வீரசிம்மன் தன் தமையன் என்ற உணர்வால் திகைத்து நின்றாள் ஆண் வேடத்தில் விக்கிரமனாக இருந்தவள்.

"உண்மையில் வீரசிம்மன், என்னுடைய சகோதரியின் மகனாயிருந்தால், அதுவும் இந்த அரண்மனையில் பிறந்தவனாக இருந்தால், அவனுடைய வலது காதுக்குப் பின்புறத்தில் மீன் குறி இருக்க வேண்டும். எங்கே காட்டு!" என்றார் பராக்கிரம பாண்டியர்.

அந்த அரண்மனையில், அரச குடும்பத்தில் பிறக்கும் குழந்தைகளுக்குப் பிறந்தவுடன், வலது காதுக்குப் பின் புறத்தில் மீன் வடிவில் பச்சைக் குத்துவது பரம்பரை வழக்கம். குழந்தை இறந்து பிறந்தால் கூட, அந்த இறந்த குழந்தையின் காதில் மீன் குறிபோல் சூடு போடுவது வழக்கம்.

வீரசிம்மனின் காதில் மீன் குறியைக் கண்டதும், பராக்கிரம பாண்டியருக்கு உணர்ச்சியால் உடல் தள்ளாடியது.

"என் குலப் பெருமை கெட்டுவிடவில்லை" என்று அவர் வாய் முணுமுணுத்தது.

"அப்பா!" என்று அலறிக் கொண்டு பாளையப்பட்டு அரசரின் காலில் விழுந்தான் வீரசிம்மன். அவனை அணைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தார் பாளையப்பட்டு அரசர்.

பிறகு, அரசுக்காக ஆசைப்பட்டுத் தம் மகளைப் பிறர் அறியாமல் ஆணாக வளர்த்து, ஆணாகவே பாண்டிய நாட்டுக்கு அனுப்பி

வைத்த செய்கைக்காகப் பராக்கிரம பாண்டியரிடம் மன்னிப்புக் கோரினார்.

"உமது குற்றத்தை மன்னித்து விட்டேன். ஆனால், உமது மகள் பட்டம் சூட்டுவதற்குள் அரியாசனம் ஏறியதற்குள்ள தண்டனையை அடைந்தே தீரவேண்டும். அந்தப் பொறுப்பை நானே மக்கள் பொறுப்பில் விட்டு விடுகிறேன். அவர்கள் கூறும் தீர்ப்பே முடிவானது!" என்றார் பராக்கிரம பாண்டியர் அழுத்தமாக.

மறுநாள் காலையில் அரச சபையில் ஒரே கூட்டம். மண்டபத்தில் எல்லோரும் வந்து அமர்ந்து விட்டார்கள். குற்றவாளிக்கூண்டில், குற்றவாளிகள் மூன்று பேரும் நிறுத்தப்பட்டிருந்தனர். பராக்கிரம பாண்டியர் வீரசிம்மனைப் பற்றிய இரகசியங்கள் அனைத்தையும் கூறி முடித்தார்.

"சபையோர்களே, நான் இதற்குத் தீர்ப்புக் கூறப் போவதில்லை. நீங்களே தீர்ப்புக் கூறுங்கள். உங்கள் முன்பு மூன்று குற்றவாளிகள் நிற்கிறார்கள். முதலில் மரகதவல்லியும், வீரசிம்மனும் புரிந்த குற்றத்துக்குத் தீர்ப்புக் கூறுங்கள். பிறகு, விக்கிரமனின் குற்றத்துக்குத் தீர்ப்புக் கூறலாம். மரகதவல்லியும், வீரசிம்மனும் நடந்து கொண்ட விதம் குற்றந்தான் என்றாலும் காந்தர்வ முறைப்படி மணந்து கொள்வது அரச குடும்பத்தில் ஏற்றுக் கொள்ளப்படுவதுதான். ஆனாலும், இவர்களின் நடத்தையில் குற்றம் கண்டீர்களென்றால், உங்கள் தீர்ப்பையே உறுதி செய்து விடுகிறேன்."

மன்னர் சொல்லி முடித்ததும் மக்கள் "திருமணம்! திருமணம்!" என்று இரைந்து சத்தமிட்டார்கள். பிறகு மன்னர் பேசினார்:

"உங்கள் தீர்ப்புக்கு நன்றி. இனி விக்கிரமனுக்குத் தீர்ப்பளியுங்கள். பட்டம் சூட்டாத பெண் அரியாசனத்தில் அமருவது பெருங் குற்றம். இதற்கு இரண்டு வழிகள்தான் உண்டு. ஒன்று, இந்தத் தவறுக்காக விக்கிரமனுக்கு மரண தண்டனை விதிப்பது. மற்றொன்று விக்கிரமனை மன்னித்து விட்டு மாசு அடைந்துவிட்ட அரியாசனத்தை விலக்கிப் புதிய அரியாசனத்தைச் செய்து கொள்வது ஆனால் இந்தக் குற்றத்தைப் புரிந்தவன் எந்தக் காரணத்தைக் கொண்டும் பாண்டிய நாட்டின் எல்லைக்குள் வரக்கூடாது. இந்த இரண்டில் எதை நீங்கள் விரும்புகிறீர்கள்?"

சபையில் கொஞ்சம் சலசலப்பு ஏற்பட்டது. பிறகு எல்லோரும் ஏக காலத்தில் ஏதோ சொல்ல ஆரம்பிக்கவே, ஒரே கூச்சலாகப் போய் விட்டது.

"எல்லோரும் பேச வேண்டாம். உங்களில் யாராவது ஒருவர் முன் வந்து கூறுங்கள், போதும்!" என்றார் முதன் மந்திரி.

ஒரு முதியவர் சபை முன்பு கோலூன்றி வந்தார். மன்னரை நோக்கிப் பேசினார்:

"மன்னவா! உமது மகளின் திருமணம் சற்று முன்புதான் நிச்சயமாயிற்று. இந்த நல்ல நேரத்தில் யாருக்கும் மரண தண்டனையளிப்பது நல்லதல்ல. அரியாசனத்தை மாற்றி விட்டு, விக்கிரமனைப் பாண்டிய நாட்டை விட்டு வெளியேற்றி விட்டாலே போதும்!"

முதியவர் சொல்லி முடித்தவுடன் கூட்டத்தில் சந்தோஷ ஆரவாரம் எழுந்தது.

"பாண்டிய நாட்டை விட்டுக் கடத்தப்பட்ட பொழுதிலும் பாலையப்பட்டு அரச குமாரியைச் சோழ நாடு ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறது. என் இதய சிம்மாசனத்தில் மட்டும் அல்ல, சோழ சிம்மாசனத்திலும் அவளே வீற்றிருப்பாள்!" என்று ஒரு குரல் அந்த ஆரவாரத்துக்கும் மேலாக ஒலித்தது.

குரல் வந்த திசையை எல்லோரும் ஏக காலத்தில் நோக்கினர். சோழ நாட்டு இளவரசர் முகத்தில் முறுவல் நெளிய ராஜகம்பீரத்தோடு நின்று கொண்டிருந்தார்.

# படித்துப் பாருங்கள்

## Sport & Pastime (Annual 1956)

பாரத நாட்டிலே விளையாட்டுக்களுக்கும் கேளிக்கைகளுக்கும் வருஷத்துக்கு வருஷம் 'மவுசு' அதிகமாகி வருகிறது. மக்களிடையே உற்சாகமும் ஊக்கமும் பெருகி வருகிறது. ஒவ்வொரு வருஷமும் 'கிரிக்கெட்' விளையாட்டைப் பார்ப்பதற்கு முந்நூறு மைல், நானூறு மைல் தூரத்திலிருந்தெல்லாம் கோஷ்டி கோஷ்டியாக ரஸிகர்கள் வருகிறார்கள். சென்னை கார்ப்பரேஷன் ஸ்டேடியம் மைதானத்தில் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் உட்கார்ந்து லட்சக்கணக்கான பேர்கள் கண்டு களிக்கிறார்கள். இதைப் பார்க்கும் போது கிரிக்கெட் நமது வாழ்க்கையில் அகற்ற முடியாத இடம் பெற்று விட்டது என்பது தெரியவரும்.

ஆனால் கிரிக்கெட் மட்டுமல்ல, கால்பந்து, டென்னிஸ், டேபிள் டென்னிஸ், வாலிபால், ஓட்டப் பந்தயம் முதலிய ஆட்டங்களிலும் ஜனங்களின் உற்சாகம் பெருகி வருகிறது.

பாரத சர்க்கார் வெளிநாட்டிலிருந்தெல்லாம் பிரபல ஆட்டக்காரர்களை வரவழைத்து இந்தியர்களுக்குப் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்து வருகிறது. பாரதம் ஹாக்கி, டென்னிஸ், கிரிக்கெட் முதலிய விளையாட்டுக்களில் உலக அரங்கிலே மிக முக்கியமான ஸ்தானம் வகிக்கிறது. சென்ற ஆண்டில் இந்த விளையாட்டுக்களில் எவ்வளவு தூரம் பாரதமும் உலகமும் அபிவிருத்தி அடைந்திருக்கின்றன என்று தெரிந்துகொள்ள வேண்டுமானால் 'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம் ஆண்டு மல'ரை வாங்கியே ஆக வேண்டும். இம்மலரில் சென்ற ஆண்டில் பல்வேறு விளையாட்டுக்களில் புகழ்பெற்றவர்களின் வண்ணப் புகைப்படங்களும் செய்திப் புகைப் படங்களும் கண்ணைக் கவர்கின்றன. சினிமா ரஸிகர்களுக்கும் கண்ணுக்கு இனிய விருந்திருக்கிறது. ஸந்தியா, பத்மினி, சிவாஜி கணேசன், சென்ற ஆண்டில் பாரதத் திரை உலகிலும் உலகத்திரையுலகிலும் புகழ்பெற்ற நட்சத்திரங்கள் ஆகியவர்களின் புகைப் படங்களும் இருக்கின்றன. இவ்வளவும் சேர்ந்துள்ள இம் மலரின் விலை ஒன்றே கால் ரூபாய் தான்.

கிடைக்குமிடம்: ஸ்போர்ட் & பாஸ்டைம் 'கஸ்தூரி பில்டிங்ஸ்', சென்னை—2.




# ரேடியோ மூலம் விளையாட்டை அனுபவியுங்கள்!

உங்கள் வீட்டில் ஒரு ரேடியோ எவ்வளவு மாறுதலை ஏற்படுத்துகிறது. பலவிதமான கதம்ப நிகழ்ச்சிகள் உங்கள் குடும்பத்தில் எல்லோருக்குமே ஆனந்தத்தை அளிக்கும்.

மேலும் ஞாபகமிருக்கட்டும்— நீங்கள் மின்சார சக்தியில்லாத இடத்திலிருந்தாலும், பாட்டரி சக்தியால் இயங்கும் ரேடியோ மூலம் அதே ஆனந்தத்தை நீங்கள் அனுபவிக்கலாம்.

"NINE LIVES"
TRADE-MARK

இன்றே உங்கள் ரேடியோ வியாபாரியிடம் இதைப்பற்றி கேளுங்கள்

EVEREADY
TRADE-MARK

'எவரெடி' ரேடியோ பாட்டரிகள்

நாஷனல் கார்பன் தயாரிப்புகள்

NCM 684

# அவள் கேட்டது பின்னி சேலைகள்

## நீங்களும் அதையே தான் கேட்பீர்கள்!

விருந்தும் கூட்டங்களில்
அலங்காரமாய் எடுப்
பாகத் தோன்றுவதற்கு

**பின்னி**
**ஸில்க்குகளும்**
**ஜார்ஜெட்டுகளும்**

இன்றியமையாதவை



சென்னை, வடஆற்காடு ஜில்லா & தமிழ்நாடு முழுவதிற்கும் ஸோல்டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
**எச். ஏ. ஆர். மகம்மத் & சன்ஸ்**
6-ஏ, டேங்கு தெரு, சென்னை

கீழ்க்கண்ட கடைகளிலேயே உங்களது தீபாவளி ஜவுளிகளை வாங்குங்கள்

ஸ்டாக்கிஸ்டுகள்: ஜார்ஜ் டவுன்: மெஸர்ஸ் வெங்கடேஷ் லக்ஷ்மிராமையா ஷாப் 1; பாங்க் ஆப் மைசூர் நியூ பில்டிங்ஸ், ஹைகோர்ட்டுக்கு எதிர்ச். * மவுண்ட் ரோடு: இந்தியா ஸில்க் ஹவுஸ். * தியாகராயநகர்: நம்பி சின்னசாமி செட்டி, நாகேஸ்வர ராவ் ரோடு. * மயிலாப்பூர்: ராதா ஸில்க் எம்போரியம், சன்னதித் தெரு. * திருச்சிராப்பள்ளி: பி. ஆர். நாராயணஸ்வாமி ஐயர், பெரிய கடைத் தெரு. * மதுரை: மெஸர்ஸ் ஜமீந்தார் ஸ்டோர்ஸ்.



# கைத்தறியைப் போற்றுங்கள்!

எஸ்.வி.எஸ்.

காந்தி மகான் கைத்தறியாளர்களுக்காகவே தமது வாழ்நாளெல்லாம் பாடுபட்டார். ராட்டினத்தைச் சுற்றச் சொன்னார். கதரை அணியச் சொன்னார். நமது கிராமங்களில் வாழும் கைத்தறியாளர்கள் புனர் வாழ்வு பெற்று விழிப்புப் பெற்று விட்டால் சுதந்திரம் கிட்டிவிடும் என்று பரிபூரணமாக நம்பினார். அப்படிப்பட்ட மகானின் பிறந்த தினத்தன்று, காந்தியின் பெயரால் "ஐயா, எங்களைக் காப்பாற்றுங்கள்!" என்று கூவி அழைத்தனர் கைத்தறி நெசவாளர்கள்.

சென்னை ராஜ்யக் கைத்தறியாளர்கள்தான் அப்படி ஓலமிட்டார்கள். அவர்கள் கோவையில் மகாநாடு கூடி, காந்தி ஜெயந்தி யன்று தங்களுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டங்களை எடுத்துக் கூறி, தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள்.

இக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை என்று சொல்வதுண்டல்லவா? தெய்வத்துக்கு அடுத்தாற் போல் பெரியோர்களின் ஆசி. வினோபாஜி அக்டோபர் 2ம் தேதி கோவையில் தங்கப் போவதாகத் தெரியவே, அவர்களின் ஆசி பெறவே அவர்கள் கோவையில் மகாநாடு கூடினார்கள்.

அன்று காலை சரியாக ஒன்பதேகால் மணிக்கு வினோபாஜி சென்னை ராஜ்யக் கைத்தறியாளர் மகாநாட்டின் மேடைக்கு வந்து சேர்ந்தார்கள்.

பிரார்த்தனை கீதத்துக்குப் பிறகு வினோபா அடிகள் மகாநாட்டுத் துவக்க உரையை ஆரம்பித்தார்.

மகாநாட்டுப் பந்தலில் ஒரே கூட்டம் நிரம்பி வழிந்தது. வினோபா அடிகளின் பொன்னுரையைக் கேட்பதற்குக் கூடியிருந்த கூட்டத்தில் கசமுச என்ற சப்தம் உண்டாகி விட்டது. 'மின்சாரத் தறிகளை எதிர்க்கும் இந்தக் கூட்டத்தில் நமக்கு மட்டும் என்ன வேலை?' என்று சொல்வதுபோல் மின்சார ஒலிபெருக்கி வேலைசெய்ய மறுத்து விட்டது. வினோபாவின் குரல் காதில் விழவில்லை. அதனால்தான் கூச்சலும் சத்தமும்.

வினோபா இதற்குப் பயந்தவரா? தமது உரையை அந்தக் கூச்சலிலும் சத்தத்திலும் பேசி முடித்து விட்டுத்தான் சென்றார்.

வினோபா அடிகள் ஓர் உண்மையை மிகத் தெளிவாக அன்று எடுத்துரைத்தார்.

நமது நாட்டில் விவசாயத் தொழில் மிகப் பெரிய தொழில். மக்கள் பெரும்பாலோரின் ஜீவனம் அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது. அதற்கடுத்தாற்போல் பெரிய தொழில் கைத்தறி நெசவுத் தொழில்தான். இன்று விவசாயிகளும் கைத்தறி நெசவுத் தொழிலாளர்களும் பெரும் கஷ்டத்தில் இருக்கிறார்கள். இந்த இருவரும் இணைந்தால் எப்படிப்பட்ட பெரும் ஆபத்துக்களையும் எதிர்க்கலாம்.

விவசாயிகள் நூற்றுத்தரும் நூலையே நெசவு செய்வது என்று கைத்தறியாளர்கள் விரதம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

கைத்தறி நெசவாளர் நெய்து தரும் துணியையே உடுத்துவது என்று விவசாயிகள் உறுதி பூண வேண்டும். இப்படிப் பரஸ்பர உடன்படிக்கை செய்து கொண்டால் எந்தச் சட்டமும் யாரையும் ஒன்றும் செய்துவிட முடியாது.

இப்பொழுது கைத்தறியில் விசைத்தறியைப் புகுத்துவது என்று தீர்மானித்திருக்கிறது; கைத்தறிகளைப் பதிவு செய்து கொள்ளும் திட்டமும் நடைபெற்று வருகிறது. இவை இரண்டும் கைத்தறிக்காரர்களுக்குப் பெரும் தீங்கு விளைவிப்பதாகும். இதை நீங்கள் ஒருமுகமாக எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்றார்.

இப்படிக் கைத்தறியாளரின் கிளர்ச்சிக்கு வினோபாஜியின் பரிபூரண ஆதரவு கிடைத்தது.

அடுத்தாற்போல் இரு சித்தையன் மகாநாட்டுக்கு வந்திருந்த வாழ்த்துக்களை வாசித்தார். [illegible]ர்த வாழ்த்துக்களி விருந்த ராஜாஜி



மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ பிரகட கோட்டையா தலைமையுரை நிகழ்த்துகிறார். பக்கத்தில் மூக்குக் கண்ணாடி அணிந்திருப்பவர்தான் தமிழில் மொழிபெயர்த்த ஸ்ரீ சித்தையன்.

---

யின் வாழ்த்தை. 'கல்கி' இதழில் நேயர்கள் இரண்டு வாரங்களுக்கு முன் பார்த்திருப்பார்கள். அதில் ராஜாஜியும் இவர்கள் கிளர்ச்சிக்குப் பரிபூரண ஆதரவு அளித்திருந்தார்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு டி. கோபால்சாமி ஒரு நீண்ட வரவேற்புரை வாசித்தார். பொதுவாக வரவேற்புரைகள், தலைமையுரைகள் மகாநாடுகளில் அச்சடித்துக் கொண்டு வந்து யாராவது வாசிக்கத் தலைப்பட்டால் 'இது என்ன பெருந் தலைவலியாக இருக்கிறதே!' என்று தோன்றும். ஆனால் திரு டி. கோபால்சாமி அவர்கள் வெகு புலகமாகவும் தெளிவாகவும் படித்தார். எல்லாவற்றையும்விட அவருடைய வரவேற்புரையில் பல விஷயங்கள் தெளிவாகக் கூறப்பட்டிருந்தன :

''இந்நாட்டுக் கைத்தறி வருஷத்தில் 200 நாட்கள்தான் வேலை செய்கின்றது என்று கனுங்கோ கமிட்டியில் கூறப்பட்டிருக்கிறது. துணித் தேவை அதிகரிப்புக்கு விசைத் தறிகளைப் புகுத்த இவ்வளவு அவசரப்படும் சர்க்கார் கைத்தறிகளை வருடம் 300 நாட்கள் தடங்கலின்றி வேலை செய்வதற்குச் செய்திருக்கும் உதவி என்ன? நூல், நார்ப்பட்டு முதலிய கச்சாப் பொருள்களை நியாயமான விலையில் வருஷம் முழுதும் கிடைக்க, சர்க்கார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் என்ன? தயாரித்த துணிகளை உத்தரவாதத்துடன் விற்பனை செய்து கொடுக்க என்ன ஏற்பாடு செய்து கொடுத்திருக்கிறது அரசாங்கம்? இத்தேவைகளை எல்லாம் செய்து கொடுத்த பிறகு துணித் தேவை முழுதும் கைத்தறிகளால் பூர்த்தி செய்வதற்கு முடியவில்லை என்றால் விசைத் தறிகளைப் புகுத்துவதில் அர்த்தம் காண முடியும்.

''இப்போது சர்க்காரின் சலுகை நெசவாளர்களுக்கு ஏதாவது சிறிது கிடைக்கிறது என்றால் அது கூட்டுறவு ஸ்தாபனங்களுக்குள்ளிருக்கும் ஐந்தில் ஒரு பகுதியினருக்குத்தான். வெளியிலிருக்கும் 80 சதவிகிதம் தறிகள் எந்தவிதமான சலுகையுமின்றிப் பெரிதும் அவதிப்படுகின்றன!''

ஒரு கூட்டுறவு ஸ்தாபனத்தினுள்ளிருக்கும் திரு டி. கோபால்சாமி இப்படி உண்மையை ஒளிவு மறைவின்றிச் சொன்னதற்குப் பாராட்ட வேண்டும் அல்லவா!

இந்த மகாநாட்டுக்குத் தலைமை தாங்க அழைக்கப்பட்டிருந்தவர் ஸ்ரீ பிரகட கோட்டையா என்பவர். 'இது என்ன? தமிழ் நாட்டுப் பெயராகத் தோன்றவில்லையே' என்று நீங்கள் அதிசயிக்கலாம். வாஸ்தவம்.

ஸ்ரீமான் பிரகட கோட்டையா என்பவர் ஆந்திரராஜ்ய எம். எல். ஏ. நீடுபுரோலு என்ற ஊரைச் சேர்ந்தவர். கைத்தறியாளர்களின் குடும்பத்தில் தோன்றியவர். ஆங்கிலக் கல்வி பயின்றும் குடும்பத் தொழிலை மறக்காதவர். அவர் அன்று நிகழ்த்திய பேருரைகளில் பல வெளிச்சமூட்டும் விஷயங்களெல்லாம் இருந்தன.

ஆம்! அவர் தெலுங்கில்தான் பேசினார். ஸ்ரீ சித்தையன் அதை நல்ல தமிழில் மொழி பெயர்த்தார்.

கைத்தறியாளர்களின் இந்த நிலையைப் பார்க்கும்போது பரிதாபமாக இருந்தது. தமிழ்நாடு தமிழருக்கே என்று வீர முழக்க மிடும் நண்பர்கள், காங்கிரஸ் மந்திரிகள் யாரும் இந்த மகாநாட்டில் கலந்துகொள்ளவில்லை. தமிழ்ச் சாதியில் மிக முக்கியமான ஒரு பெருந் தொகையினர் அல்லலுறுவதைப் பார்த்தும் பார்க்காதவர் போலிருக்கின்றனர்.

ஆனால் பிரகட கோட்டையா அன்று, ''எங்கள் முயற்சியால் ஆந்திர மந்திரி சபை, மத்திய சர்க்காரின் விசைத் தறிக் கொள்கையை அங்கீகரிக்க முடியாது என்று முடிவு செய்துவிட்டது. இந்த முடிவுக்கு எங்கள் கவர்னர்தான் சற்றுத் தயங்குகிறார். அவரையும் சரிப்படுத்திவிடுவோம். இம்மாதம் 7ம் தேதி நடக்கப் போகும் மந்திரி சபைக் கூட்டத்தில் முடிவாகிவிடும்'' என்று கூறினார்.

அதைக் கேட்டபோது தமிழ் மக்களுக்குத் தங்கள் மந்திரி சபையைப் பற்றி மிகவும் அவமானமாக இருந்தது.

''இன்றைய பாரதத்தில் ஜனநாயகம் நடைபெறுகிறது. நூற்றுக்கு ஐம்பத்தொரு பேர் ஒரு முடிவுக்கு (அந்த முடிவு சரியோ

தவறோ) வந்து விட்டால் அதை நிறைவேற்றி விடுவது என்று கொள்கை கொண்டிருக்கிறது. எல்லாக் காரியங்களும் அந்த அடிப்படையில் நடைபெறுகின்றன. ஆனால் நம் விஷயத்தில் மட்டும் பீஹார், பம்பாய், சென்னை முதலிய பல ராஜ்யங்கள் எடுத்துச் சொல்லியும் கேட்க மறுத்துவிட்டது. பாரத நாட்டின் 36 கோடி மக்களில் 24 கோடி மக்கள் கூறியும் கைத்தறி நெசவாளர் கோரிய சலுகையைத் தர மறுத்து விட்டது. அதாவது கைத்தறிகள்வாழ, அதற்குக்கரை போட்ட வேஷ்டியும், கலர் சேலைகளையும் ராஜாஜி கூறியபடி ஒதுக்க மறுத்து விட்டது. அது போதாதென்று கைத்தறியை ஒழித்துவிட, அதில் ஜீவனம் செய்யும் மக்களை அழித்துவிட மின்சாரத் தறிகளைப் புகுத்தும் கொள்கையையும், பதிவு செய்து கொள்ளும் முறையையும் கொண்டு வந்துவிட்டது.

''பிரிட்டிஷார் கைத்தறியாளர்களை ஒடுக்க எவ்வளவோ முயன்றார்கள். இருந்தும் நாம் இன்று வரை உயிர் வாழ்ந்து வருகிறோம்.

''இதற்குக் காரணம் நமது தாய்மார்கள் தான். ஆடவர்கள் மேல்நாட்டு மோகத்தில் மூழ்கித்தங்கள் உடைகளை மாற்றிக்கொண்டாலும் நமது தாய்மார்கள் பழையபடியே சேலைகளைஅணிந்துவருகிறார்கள். அவர்கள், 'கவுனை'யும் கால் சராயையும் போட்டுக் கொள்ளத் தொடங்கவில்லை. அதனால் நாம் பிழைத்தோம். அவர்களுக்கு நமது நன்றி!'' என்று அவர் கூறியபோது சபையில் சிரிப்பு எழுந்தது. பெண்கள் பகுதியில் ஒரு பெருமித உணர்ச்சி எழுந்தது!

''மதுரையில் 150 ஆண்டுகளுக்கு முன் வெள்ளையர் ஆலைகளைத் தொடங்கினர். அப்பொழுதைய கைத்தறியாளர்கள் எங்கள் வாழ்வு நசித்துவிடும் என்று கிளர்ச்சி செய்தனர். அப்போதைய மதுரை மில் முதலாளிகள் ''எங்கள் ஆலைகளில் நூல் உற்பத்தி செய்வோமே தவிர, துணி நெசவு மேற்கொள்ள மாட்டோம்!'' என்று வாக்குறுதி கொடுத்தனர். அந்த வாக்குறுதியை இன்று வரை காப்பாற்றி வருகின்றனர். இன்றுவரை அவர்கள் துணி நெய்யவில்லை.

ஆனால் நமது காங்கிரஸ் சர்க்காரோ, இப்போது இயந்திரத் தறிகளைப் புகுத்திக் கைத்தறியாளர்களை ஒடுக்கப் பார்க்கிறார்கள்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதிகமாகத் தேவைப்படும் துணி 170 கோடி கஜம்தான். 28 லட்சம் தறிகள் உள்ள இந்த நாட்டில் 170 கோடி கஜம் துணி நிறைவு செய்வது ஒரு பெரிய காரியமல்ல.

கைத்தறிகளைப் பதிவு செய்துகொள்ளுமாறு கைத்தறிநெசவாளர்களைவற்புறுத்துகிறார்கள். இதற்குக் காரணம் நாட்டில் எத்தனை கைத்தறிகள் இருக்கின்றன என்று கணக்கெடுப்பதற்காகத்தான் இப்பதிவு நடைபெறுகிறது என்று சொல்லுகிறார்கள். இன்றைய பாரத சர்க்கார், நாட்டின் ஜனத்தொகையை ஒரு சில நாட்களில் கணக்கெடுத்து விடுகிறார்கள். ஆடுகளையும் மாடுகளையும் கணக்கெடுக்கிறார்கள். கோழிகளையும் குருவிகளையும் கணக்கெடுக்கிறார்கள். இவற்றையெல்லாம் கணக்கெடுக்கும் சர்க்காருக்கு நாட்டில் எத்தனை தறிகள் இருக்கின்றன என்று கணக்கெடுப்பது கஷ்டமா, என்ன? கிராம கர்ணங்களிடம் இந்த வேலையை ஒப்படைத்தால் ஒரு மணி நேரத்தில் புள்ளி விவரங்களைத் திரட்டித் தருவார்களே. இவ்வளவு சுலபமான வழியை விட்டு ஏன் பதிவு செய்து கொள்ளச் சொல்கிறார்கள்! இதில்தான் சூழ்ச்சியே இருக்கிறது. பதிவு செய்து கொள்ளும் உத்தியோகஸ்தர் வரும் போது கைத்தறியில் வேலையில்லாமல் இருந்தால், ''கைத்தறியில் வேலை நடக்க வில்லை. லைஸென்ஸ் வேண்டியதில்லை'' என்று முடிவு செய்து விடுவார்கள். ஆகவே, பதிவு செய்து கொள்ளும் உத்தியோகஸ்தர்கள் என்ன தகவல் கேட்டாலும் கொடுங்கள். ஆனால் 'கையெழுத்து மட்டும் போடாதீர்கள்' என்று எச்சரிக்கை செய்தார் ஆந்திரத் தலைவர்.

இந்த மகாநாட்டில் அகில இந்திய கைத்தறிபோர்டு அங்கத்தினர் திரு எம்.சோமப்பா அவர்கள் பங்கெடுத்துக் கொள்வதாக இருந்தது. அவரால் வர இயலாததால் தம் கருத்துக்களை விரிவாக எழுதி அனுப்பி விட்டார்.

அன்றைய மகாநாட்டில் பல கூட்டுறவுச் சங்கங்களைச் சேர்ந்தவர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். திரு வி. சுவரன் செட்டியார் பி. ஏ., பி. எல், திரு என்.

திரு டி. கோபால்சாமி வரவேற்புரை நிகழ்த்துகிறார்.





திருச்சி, புத்தூர் குரு மருத்துவச்சாலையின் ஸ்தாபகரான ராவ்பகதூர் டாக்டர் அய்யாத்துரை மதுரம் அவர்களின் உருவச்சிலை திறப்பு விழா செப்டம்பர் மாதம் 15ம் தேதி சிறப்பாக நடைபெற்றது. குரு மருத்துவச் சாலையில் பொதுமக்களின் நிதி உதவி கொண்டு நிர்மாணிக்கப்பட்ட இந்தச் சிலை திறப்புவிழாவுக்கு அண்ணாமலை பல்கலைக்கழகத் துணை வேந்தர் திரு. டி.எம். நாராயணசாமிப் பிள்ளை தலைமை வகித்தார். முதன் மந்திரி திரு காமராஜ் சிலையைத் திறந்து வைத்தார். மேலே விழாத் தலைவர்களையும், டாக்டர் இ. பி. மதுரம் எம். பி. அவர்களையும், டாக்டர் அய்யாத்துரை மதுரம் அவர்களின் உருவச்சிலையையும் காணலாம்.

மகாலிங்கம் எம். எல். ஏ., திரு எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார் எம். எல். ஸி., திரு மு. கே. ராமலிங்கம், ஆர். துரை, திரு. வணங்காமுடி, திரு கே. கே. பூரணையா முதலியவர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். பிற்பகல் இன்னும் பல அங்கத்தினர்கள் தீர்மானங்களைப் பிரேரேபித்தும் ஆதரித்தும் நன்றாகப் பேசினார்கள்.

ஸ்ரீ பிரகட கோட்டையா முடிவுரையாகப் பேசியபோது கைத்தறித் தொழிலுக்கு எந்தத் தொழிலுக்குமில்லாத ஒரு தனிப் பெருமை உண்டு என்பதை வெகு அழகாக மனதில் பதியும் வகையில் எடுத்துரைத்தார்.

''நமது கைத்தறி நெசவாளரை எடுத்துக் கொள்ளுங்கள். வீட்டுக்காரன் தறியில் உட்கார்ந்து வேலை செய்தால் அவன் மனைவி ராட்டையில் நூல் சுற்றித் தருகிறாள். தந்தை இன்னொரு உதவி செய்கிறான். பையன் வேறொரு காரியம் செய்கிறான். ஆகவே அவன் குடும்பமே சேர்ந்து உழைக்கிறது. நெய்த துணியை விற்று வரும் லாபத்தில் எல்லாருமே சமமாகப் பகிர்ந்து திருப்தியாக வாழ்கிறார்கள். அவர்கள் பொறாமை கொள்ள வழியில்லை. சம்பளம் போத வில்லையே என்று கிளர்ச்சி செய்வதில்லை. ஆறு மணி நேரம்தான் வேலை செய்வோம் என்று புரட்சி செய்வதில்லை. இப்படிப் போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து என்று வாழும் மக்களை அல்லற்படுத்தவே விசைத்தறி வருகிறது. இதில் சர்க்கார் அடையும் பயன்தான் என்ன?'' என்று நெஞ்சு உருகக் கேட்டார்.

''திருவள்ளுவர் செய்த தொழில், காந்தி மகான் உயிர்ப்பித்த தொழில், ராஜாஜி அவர்கள் வாழ்வளித்த தொழில். இப்படிப்பட்ட மகான்கள் ஆதரவு பெற்ற பழம் பெரும் தொழில் நம் தொழில் எனபதே நமது பெருமை!'' என்று சேலம் பூரணையா உணர்ச்சியோடு தமது பேச்சை ஆரம்பித்துப் பேசியது இன்னும் என் காதுகளில் ரீங்காரம் செய்த வண்ண மிருக்கிறது.

* * *

அந்த மகாநாட்டில் நமது நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் அவர்கள் கலந்து கொள்வதாக இருந்தது. அவர் வந்து ஆறுதல் வார்த்தைகள் கூறுவார் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் வரவில்லை. சென்னை சர்க்கார் எப்படியும் கைத்தறியாளர்களின் கோரிக்கைக்கு இணங்காது என்பதை அவர் காண்பித்து விட்டார்!

எனினும் கைத்தறியாளர்களுக்குத் தேசத்தில் உள்ள நல்லோர் ஆதரவிருக்கிறது. ஒரு நல்ல தொழில், நல்ல மக்கள். தேசத்தில் பல்லாயிரக் கணக்கான தறியாளர்கள் பஞ்சத்திலும் பட்டினியிலும் தறிகளை விட்டு வீடு வாசல்களை விட்டுத் தெருத் தெருவாய் அலைய நேரும்படி விடுவது மகாபாவம். பொது மக்கள் இதை உணர வேண்டும். சர்க்கார் அவர்கள் வாழ வழியின்றிச் செய்கிறார்கள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறியாமலே செய்து வருகிறார்கள். அதனால் பொது மக்கள் விஷயத்தைப் புரிந்து கொண்டு கைத் தறியைப் போற்ற வேண்டும் என்று கூறிக் கொள்ள விரும்புகிறோம்.

# இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறது

# பாமாலிவ்

## டால்கம் டீ-லக்ஸ்



நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்த டால்கம் பவுடர்! உண்மையிலேயே நேர்த்தியான டால்கின் சகலகுணங்களுடன், ஒரு புதியரம்மிய வாசனையும்சேர்ந்தது! வெறியூட்டும் 17 ஸென்டுகளின் அற்புதக்கலவைசேர்ந்த பாமாலிவ் டால்கம் டீ-லக்ஸின் நறுமணம் உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம் அடையச் செய்யும் ... மணிக் கணக்காக உங்களுக்குக் குளுமை யும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!



அன்னையில் சுத்தமும்
சௌகர்யமும்



குழந்தைக்கு இதம்
அளிக்க அதைத்
தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத்தடுக்க
மேலெங்கும் அதை
உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு
இதமும் புத்துணர்ச்
சியும் அளிக்க

# பாமாலிவ்

## டால்கம் டீ—லக்ஸ்



# காலம் பல விதம்!


"நல்ல காலம் பொறக்குது! ஐயாவுக்கு நல்ல காலம் பொறக்குது!"


"எது எது எந்தெந்தக் காலத்திலே நடக்கணுமோ, அப்படிச் செய்து-டால்தான் நல்லது! காலாகாலத்தில் கல்யாணத்தை நடத்திடுங்கோ!"


சங்கம்
"நமது தலைவர் இப்போது 'கற்காலமும், தற்காலமும்' என்பது பற்றிப் பேசுவார்!"


"இறந்த காலம், எதிர் காலம் இவ்விரண்டையும் கற்றுக் கொடுத்து விட்டேன். இப்போது நிகழ்காலம் பற்றி......"


"போன வருஷம் சாப்பாட்டுக்கே லாட்டரி. இப்ப அன்னதானம் செய்யறான்! காலம் பண்ணுறெ கூத்து!"


"அந்த வித்வான் துரித காலத்திலே வாசிக்கிறபோது என்ன ஆனந்தமாயிருக்கும் தெரியுமா?"

பாலர் தொடர் கதை

துரோண

## 7. மகேந்திரபுரி ராணி

விமலன் தன் அண்ணன் விஜயன் காணாமற் போனதற்குக் காரணம் கேட்டதும் அவன் தாயார் மல்லிகாவுக்குக் கடுங்கோபம் ஏற்பட்டு விட்டதல்லவா? அதைக் கண்டதும் விமலன், "அம்மா! உங்கள் பதிலே எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. நான் இப்பொழுதே போகிறேன். என் அண்ணனைத் தேடியழைத்து வந்த பின்னரே இந்த அரண்மனைக்குள் நுழைவேன்!" என்று கூறிக்கொண்டே விசையுடன் நடந்து கொண்டிருந்தான்.

அவனது பின்புறத்திலிருந்து, "குழந்தாய் விமலா! இங்கே வா!" என்று தாயின் குரல் பதறியபடியே கேட்டுக் கொண்டிருந்தது. ஆனால், விமலனின் செவிகளில் அது விழவேயில்லை.

உபாத்தியாயர் இத்துடன் கதையை நிறுத்தி விட்டுப் பையன்களின் முகங்களை ஆவலுடன் நோக்கினார். ஏனென்றால் பள்ளிக்கூட மணியடித்து அரை மணி காலம் வரையில் அவருக்குப் பொழுது போனதே தெரியவில்லை. பையன்களும் கதையின் சுவாரஸ்யத்தினால், மணியடித்ததைக் கூடக் காதில் வாங்காமல் இருந்து விட்டனர்.

"சார்! அப்புறம் அந்தப் பெரிய ராஜகுமாரன் - விஜயனை அந்த அசுரர்கள் பலி கொடுத்து விட்டார்களா சார்? அதை நீங்கள் சொல்லவேயில்லையே?" என்றான் ஒருவன்.

"ஏன் சார், விமலன் தன் அண்ணனைக் கண்டு பிடித்து விட்டானா சார்?" என்றான் மற்றொருவன்.

உபாத்தியாயர் சிரித்தபடியே, "எல்லாம் நாளைக்குத்தான் சொல்லுவேன்! இப்பொழுது நீங்களெல்லாம் வீட்டுக்குப் போகணும்!" என்றார். அவ்வாறு சொல்லி விட்டு அவர் எழுந்திருக்கவும், பையன்களும் உற்சாகத்துடன் கதையின் முடிவுகளைப் பற்றிப் பலவாறு பேசிக் கொண்ட படியே வீட்டுக்குச் சென்றனர்.

மறுதினம், நான்காம் வகுப்புப் பையன்களெல்லாம் வழக்கத்தை விடச் சீக்கிரமாகவே பள்ளிக்கூடத்துக்கு வந்து விட்டனர். அவர்கள் எல்லோரும் சண்டை போடாமலும், பெஞ்சியாட்டம் ஆடாமலும் சாதுபோல் உட்கார்ந்து கொண்டிருந்த காட்சியைக் கண்டதும், உபாத்தியாயருக்கே மிகுந்த ஆச்சரியமாக இருந்தது!

ஆசிரியர் மாணவர்களின் ஆஜர்ப் பட்டியலை எடுத்து ஒவ்வொரு பெயராக வாசித்து விட்டுக் கீழே வைத்தார். பின்னர் மகிழ்ச்சியான குரலுடன், "பையன்களா! நேற்று நீங்கள் பல கேள்விகளையெல்லாம் கேட்டீர்களல்லவா? அந்தச் சந்தேகங்களெல்லாம் இன்று தீர்ந்து விடும். ஆனால், இன்று வேறொரு ராஜ்யத்தைப் பற்றி முதலில் உங்களுக்குக் கொஞ்சம் சொல்லி விட்டுத்தான், பழைய கதையைத் தொடர வேண்டியிருக்கிறது! அது



எந்த ராஜ்யம் தெரியுமா? ராணி மல்லிகா தன் பிள்ளை விமலனிடம் 'உன் அத்தையின் ராஜ்யம்' என்று கூறினாளல்லவா? அவனது அத்தையின் ராஜ்யத்தைப் பற்றித்தான் இப்போது கூறப் போகிறேன்!'' என்று கூறி விட்டுக் கதையை மேலே தொடர்ந்தார்:—

விக்ரௌந்த மகாராஜாவின் ராஜ்யத்துக்குப் பக்கத்தில்தான், மைசூர் ராஜ்யத்தில் மிகப் பெயர் போன காடு இருந்தது. அந்தக்காட்டின் எல்லை,ஏறக் குறைய மூப்பது மைல் விஸ்தீரணம் இருந்தது. அக்காட்டுக்குள் ஏராளமான சந்தனமரங்களும், மற்றும் பல வகையான காட்டு மரங்களும் இருந்தன. புலி, சிங்கம் போன்ற துஷ்டமிருகங்களும் அதில் வாழ்ந்து வந்தன. இக்காட்டின் மறுபக்கத்தில்தான், 'மகேந்திரபுரி' என்ற மற்றொரு ராஜ்யம் இருந்தது. இந்த இரண்டு ராஜ்யங்களுக்கும் நடுவில்தான் அந்த அடர்ந்த காடு அமைந்திருந்தது.

அந்த மகேந்திரபுரியை வெகு காலமாக, அநேக அரசர்கள் ஆண்டு வந்திருந்தனர். இந்த இரண்டு தேசங்களுக்குமிடையே, எல்லைத் தகராறுகளின் காரணமாக, அடிக்கடி சண்டைகள் நடந்துகொண்டிருப்பது வழக்கமாகியிருந்தது. ஆனால் நாளடைவில், இரண்டு தேசத்து அரசர்களும் ஒற்றுமைப்பட்டு விட்டார்கள். விக்கிராந்த மன்னனின் தகப்பனார், அவருடைய பெண்ணான நளினிதேவியென்பவளை மகேந்திரபுரி மன்னருக்குக் கலியாணம் செய்து கொடுத்திருந்தார். இதன் மூலம், இந்த இரண்டு ராஜ்யங்களுக்கும், ஏறக் குறைய இருபத்தைந்து வருஷங்களாகச் சிநேகம் வளர்ந்திருந்தது.

சில வருஷங்கள் கழித்து, தன் தகப்பனுக்குப் பின், விக்கிராந்தன் அரசாளத் தொடங்கினார். அவருக்கு, பெரிய ராணியின் மூலம் விஜயனும், சிறிய ராணியின் மூலம் விமலனும் பிறந்தார்கள் என்பதைத்தான் இது வரையில் கூறி விட்டோமே! விஜயனும், விமலனும் பிறந்து மூன்று வருஷங்களுக் கெல்லாம், அந்த மகேந்திரபுரி ராஜ்யத்தில் ராணி நளினிதேவிக்கும் ஒரு குழந்தை பிறந்தது. அது பெண் குழந்தை. அந்தக் குழந்தையை அவர்கள் ரொம்பவும் அருமையுடனும், சிறப்புடனும் வளர்த்து வந்தார்கள். அவள் தான் அரச குமாரி மேகலா!

மேகலாவுக்கு மூன்று வய[illegible] போதே, மகேந்திரபுரி அரசர் [illegible]ரென்று ஒரு நாள் இற[illegible] விட்டார். அதை யாருமே எதிர் பார்[illegible] இதையறிந்த வேறு சில [illegible] ளெல்லாம் நாட்டரசை கொ[illegible] ராஜ்யத்தின் மீது படையெடு[illegible] ரூர்கள். ஆனால், மகேந்திரபு[illegible] திலிருந்த குடிமக்களெல்லாம் [illegible] கூடி, வேற்றரசர்களின் படை[illegible] களையெல்லாம், சாமர்த்தியமாக [illegible] விட்டார்கள். பின்னர், ராணி [illegible] தேவியின் தயாள குணங்க[illegible] இனிய சுபாவங்களையும் அறிந்தி[illegible] குடி ஜனங்களெல்லாம், அவளே ரா[illegible] யத்தை நடத்தி வர வேண்டுமெ[illegible]



கேட்டுக் கொண்டனர். ஆகவே, பத்து வருஷங்களாக ராணி தனினா தேவியே மக்களுக்கு எவ்விதக் குறைகளுமின்றி அந்த நாட்டை ஆண்டு வரத் தொடங்கினாள்.

இந்நிலைமைகளுக்கிடையில், விக்கிராந்தன் இளைய ராணியுடன், தம் தமக்கையாரான தனினா தேவியின் அரண்மனைக்கு அநேகம் தடவைகள் சென்றிருக்கிறார். அப்பொழுதெல்லாம், குழந்தையாக இருந்த மேகலாவின் அழகையும், புத்தி கூர்மையையும் கண்டு அவர்கள் ரொம்பவும் மகிழ்ச்சி கொண்டனர். விக்கிராந்தனுக்கும், இளையராணிக்கும்மேகலாவின் மீது ஒரு தனிமையான பாசமே ஏற்பட்டு விட்டது. அவர்கள் தனினா தேவியுடன் பேசிக் கொண்டிருக்கும் போது ராணி மேகலாவை விக்கிராந்தனின் புதல்வரில் ஒருவருக்கே கலியாணம் செய்து கொடுப்பதாகவும் கூறினாள். இவை நடந்து, ஏறக்குறையப் பத்து வருஷங்களாகி விட்டன.

ராஜகுமாரியானமேகலாவுக்கு இப்பொழுது பதினைந்து வயதாகி, அவள் ஒரு அழகான பெண்ணாகவும் இருப்பாளல்லவா? அப் பெண்ணைப் பற்றித்தான், மல்லிகா விமலனிடம் தெரிவித்தாள்!




ஆனால், அவள் பத்து மாதம் சுமந்து பெற்ற விமலனோ?... அவளைப் பொருட்படுத்தாமல் சென்று விட்டான்.

தாயின் கூப்பாட்டைக் கூட இலட்சியம் செய்யாமலே விமலன் வேகத்துடன் சென்றானல்லவா? இத்தகைய அலட்சிய சுபாவத்தையும் கல் நெஞ்சையும் ராணி மல்லிகா ஒரு நாளாவது தன்னுடைய தாயிடம் கொண்டிருப்பாளா? 'பிள்ளை மனம் கல்' என்ற பழமொழி அவள் மனசுக்கு எவ்வளவு தூரம் உண்மையாகி விட்டது?

ராணியின் இதயம் துயரத்தினால் உருகிற்று. அவள் படுக்கையில் சென்று படுத்தவாறே கண்ணீர்விடத் தொடங்கி விட்டாள். அப்பொழுது அவளது கண்களின் முன் பதினெட்டு வருஷங்களாக நடந்திருந்த சம்பவங்கள் நாடகக் காட்சிகள் போலத் தோன்றின.

அப்பொழுது ராணி மல்லிகாவின் வயதான தாய் அவளுடனேயே இருந்து வந்தாள். அவள் எதைக் கூறினும், ராணி அதைத் தெய்வ வாக்காகவே தான் மதித்து நடந்து வந்தாள். அரசர், பெரிய ராணியைக் காட்டிலும் தன்னிடமே அதிகமான பிரியத்துடன் இருப்பதை அடிக்கடி பெருமையாகக் கூறிக் கொள்ளுவாள். இந்தச் செய்திகளினால், அவளது தாயும் அவளிடம் உயர்வான மதிப்பு வைத்திருந்தாள். ஆனால், பெரிய ராணிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்து விட்டதன் பின்னரோ?...

அவளது தாயின் புத்தி மதிகளும், ஆலோசனைகளும் வெவ்வேறான போக்கில் உருமாறின. பெரிய ராணியான தூதிகை இறக்கும் தறுவாயில், அரசரிடம் கேட்டுக்கொண்டிருந்த வேண்டுகோளினால் மல்லிகாவின் நிலைமைகள் பெரும் சங்கடத்தில் ஆழ்ந்திருந்தன. அப்பொழுது அவள் ஒன்பது மாதக் கர்ப்பிணியாக இருந்தாள். பெரிய ராணியின் பிள்ளைக்கே அரசுரிமை கிடைக்கப் போவதைப் பற்றி, அவளது தாய் பலவித பயங்கரங்களை உருவாக்கிக் கூறினாள்.

இதற்குள் அவளுக்கும் ஒரு ஆண் குழந்தை பிறக்கவும், தாயும் மகளும் ஆறுதல் அடைந்தனர். ஆனால், நாட்டிலிருந்தோரெல்லாம் பேசிக் கொண்டிருந்த அபிப்பிராயங்களும், அதை அனுசரித்த மன்னரின் எண்ணங்களும் சிறிது சிறிதாக அவர்களைக் கொடியவர்களாக்கின. முடிவாக, மல்லிகாவின் தாய் கொலைகாரியாக மாறி விட்டாள்! எப்படி? பெரிய ராணியின் குழந்தையான விஜயனைக் கொன்று விடுவதுதான் அவளது யோசனையாக இருந்தது!

(தொடரும்)

# நறுமணம் குன்றாமல்



## ஈரம் உட்புகாத
## ட்ரேயோபேன்*
## தாளில் பாக் செய்யப்பட்டது




வழக்கமாக சிகரெட் பிடிப்பவர்கள் ட்ரேயோபேன் தாளில் பாக் செய்யப்பட்ட சிகரெட்டுகள் நல்லவை என நம்பலாம்.

ட்ரேயோபேன் தாளில் பாக் செய்யப்பட்ட பொருள்கள் கண்ணைக் கவருகின்றன - சீதோஷ்ணத்தால் பாதிக்கப் படாமல் இருக்கின்றன. இத்தாளில் சுற்றப்பட்ட சிகரெட், தேயிலை, காப்பி, மிட்டாய்கள், பிஸ்கோத் முதலிய பொருள்கள் ஈரத்தால் பாதிக்கப்படாமல் புத்தம் புதியதாக இருக்கின்றன.



ட்ரேயோபேன் ஈரம் புகாத தாள் உறுதியானது—மக்காது. கிழியாது

ட்ரேயோபேன் தாளை உஷ்ணத்தால் சீல் செய்து கொள்ளலாம்—ஓரத்தில் ஒரு உஷ்ணமான இஸ்திரியால் தேய்த்து.

ட்ரேயோபேன் மற்ற எந்த பாக்கிங் பொருள்களை விட மலிவானது. தாள்களாகவும் ரோல்களாகவும் கிடைக்கும். எங்களுடைய இலவச சாம்பிள் புத்தகத்திற்கு எழுதுங்கள்.

## ட்ரேயோபேன்*

ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பரேன்ட் தாளின் புதிய பெயர்




*கண்ணைக் கவருகிறது... விற்பனையை துவக்குகிறது*

தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

*பாக்டரி: ரேயான்புரம் போஸ்ட், திருவாங்கூர்-கொச்சின்*
*சேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங், மதராஸ்-1*

TR 862

# கடல் கொண்ட கனவு




மூன்றாம் அத்தியாயம்

## கல்லின் இதயம்

**ப**டைகளை நிறுத்தி விட்டுக் குதிரையிலிருந்து கீழே குதித்த தரங்கவல்லி, தன்னை நோக்கி நடந்து வரும் பாண்டிய அரச குமாரனைச் சீற்றத்தோடு பார்த்தாள். தன்னோடு வாளை ஏந்திய கையனாகப் போர் புரிவதற்கு வரவேண்டியவன், சமாதானக் கொடியை உயர்த்திக் கொண்டு உறவு மனப்பான்மையிலே நடந்து வருவது அவளுக்குச் சீற்றத்தை உண்டாக்கியிருந்தது.

"வலம்புரித் தீவின் இளவரசியாரே! தங்களுடைய கோபத்துக்கு அஞ்சி நான் இந்த உறவுக் கொடியை உயர்த்தவில்லை. இந்தப் புனிதமான நாட்டிலே ஒரு புண்ணியவதி வீரமரணம் அடைந்து விட்டாள். எதிர்த்து நின்று சண்டையிட்டு அவள் மடிந்திருந்தால் என் மனம் இத்தனை துன்பப்படாது. ஆனால் தன்னுடைய தாய் நாட்டின் வீழ்ச்சியைக் கண்டு அந்த அபலையின் உள்ளம் தன்னைத்தானே மாய்த்துக் கொண்டது என்பதை எண்ணும்போது என் மனம் துடிதுடிக்கிறது. தமிழ் நாட்டின் பாண்டிய மரபுக்கே அவமானம் உண்டாகும்படியாக அந்த அபலையின் வீர உடம்பைப் பாதங்களால் மிதித்து அலட்சியம் செய்து விட்டது என்னுடைய படை. அதற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டியது என்னுடைய கடமை!"

"அரச குமாரரே! என்ன சொல்கிறீர்கள்? எங்களுடைய தாய் நாட்டுக்காக அத்தனை வீரத்தோடு தனது உயிரையே தியாகம் செய்து விட்டாளா ஒரு பெண்? ஒருவேளை.."

"ஆமாம். பாணன் மகள் சாருகேசியின் மரணத்துக்குக் காரணமாக அமைந்த என்னுடைய

படையின் அலட்சியத்துக்கும், அறியாமைக்கும் அவமானப் படுகிறேன். அந்தப் பெரும் பிழைக்கு வேறுவிதமான பிராயச்சித்தம் எனக்குத் தோன்றவில்லை. இந்தத் தீவின் கலைச் செல்வத்தை யெல்லாம் நிலைகுலையச் செய்துவிட்டதற்காக ஒரு பெண்ணின் உள்ளம் அத்தனை துடிப்புத் துடித்தது என்பதை எண்ணும் போது என் உள்ளத்தில் ஏற்படுகிற உணர்ச்சியின் சுமையை எப்படி வெளியிடுவேன்!''

இதன் பிறகு வலம்புரிப் படையிலே உண்டான குழப்பமும் வேதனையும் அளவு கடந்தவை! பாணர் மகள் சாருகேசி மரணம் அடைந்தாள், இந்தப் புண்ணியத் தாய் நாட்டின் புழுதியிலே புரண்டு உயிர் விட்டாள் என்ற செய்தி தரங்கவல்லியின் உள்ளத்தையும் உடம்பையும் உலுப்பியது!

இவ்வாறு சமணத் துறவி சித்திராங்க பூபதிக்குச் சொல்லி விட்டுத் தமிழ் நாட்டில் அக்காலத்தில் வீர மரணம் அடைந்தவர்களுக்கு 'நடுகல்' என்ற வீரக் கல்லை நாட்டி, அதன் மேல் வீர வரலாற்றை எழுதும் வழக்கம் இருந்ததற்கு ஏற்பச் சாருகேசிக்கு வீரக் கல் நாட்டிய கதையைச் சொன்னார்.

''சித்திராங்க பூபதி! தரங்கவல்லியும் பாண்டிய அரச குமாரனுமாகச் சேர்ந்து வலம்புரித் தீவில் அம்மன் கோவிலை யடுத்த பாறைகளுக்கு மத்தியிலே சாருகேசியின் உடலை அடக்கம் செய்து, அதன் மேலேயே 'நடுகல்' நாட்டினார்கள். அந்த நடுகல் வெறும் கல்லாக இல்லை.

''யாழ் ஏந்திய ஒரு பெண்ணின் சிலையாக நின்றது அந்த வீரக் கல். கடல் அலைகள் தவழ்ந்து வந்து அந்தச் சிலையின் பாதங்களை நனைக்கும். பாண்டியன் கொடுத்த குவளைத் தண்ணீரைக் கூடக் குடிக்காமல் தனது உயிரை அந்தப் பூமியிலே தியாகம் செய்த வீராங்கனையின் உடலைச் சுற்றி என்றும் வற்றாத கடலின் அலைகள் நிரந்தரமாகச் சுற்றிச் சுற்றித் தவழ்ந்தன. எந்த யாழின் மறைவு அந்தப் பெண்ணின் இதயத்தில் நெருப்பைக் கொட்டியதோ, அதே பேரியாழ் சிற்ப வடிவத்தில் அந்தச் சிலையின் கைகளிலே ஒட்டிக் கொண்டு நின்றது. பௌர்ணமி இரவுகளில் நிலவு பொழிகிற குளுமையான வேளைகளில் அந்தச் சிலையைப் பார்த்தால், தரங்கவல்லியின் கண்ணுக்கும் பாண்டிய அரசகுமாரனின் கண்ணுக்கும் அது வெறும் கற்சிலையாகத் தோன்றாது. சாருகேசியே உயிர் பெற்று வந்து அந்தப் பாறைகளின் மேல் அமர்ந்து நிலவு பொழிகிற அந்த மோகனமான இரவில் தங்களுடைய உள்ளத்தைக் குளிர்விப்பதற்காக யாழ் வாசித்துக் கொண்டிருப்பது போலவே தோன்றும்! சில இரவுகளில் அலைகள் பொங்கிப் பொங்கி அந்தச் சிலையிலே வந்து யாழின் சிற்பத்தின் மேல் ஏறி இறங்கித் தவழும். அப்பொழுதெல்லாம் சப்த ஸ்வரங்களுமே ஒலிக்கும் அந்தச் சிற்பத்தில்! இதற்குக் காரணம், அந்தக் கற்சிலையைச் செய்து நிறுத்திய சிற்பிக்கு இசை ஞானமும் சிற்ப ஞானமும் அத்தனை அற்புதமான முறையில் ஒன்று சேர்ந்து அமைந்திருந்தது தான் என்று வலம்புரித் தீவின் மக்கள் சொன்னார்கள். ஆனால் தரங்கவல்லி அப்படி நினைக்கவில்லை, பாண்டிய அரசகுமாரனும் அப்படி நினைக்கவில்லை! சிற்பத்துக்குக் கீழே புதைந்து கிடக்கும் அதிசயமான பெண்ணின் இதயந்தான் அந்தக் கல்லிலே அப்படி ஒலி செய்கிறது என்று அவர்கள் இருவரும் தங்களுக்குள் பேசிக் கொள்ளுவார்கள்!''

இவ்வாறு சொன்னார் சமணத்துறவி! அப்போது சித்திராங்கபூபதி கேட்டான்: ''பெரியவரே! அப்படியானால் தரங்கவல்லிக்கும் பாண்டிய அரச குமாரனுக்கும் திருமணம் நடந்ததா? அவர்கள்



இருவரும் அப்புறம் மனம் ஒன்று சேர்ந்து வாழ்ந்தார்களா?''

பூபதி இப்படிக் கேட்ட போது அவனுடைய குரலில் ஆவலும் கவலையும் நிரம்பி நின்றன. துறவி சொல்லுவார்:

''பூபதி! கோபத்தோடும், ஆற்றுமையோடும் குதிரையிலேயிருந்து குதித்த தரங்கவல்லிக்குச் சாருகேசியின் மரணச் செய்தி ஒரு பெரிய அதிர்ச்சியாக இருந்தது. வியூகத்தைப் பிளந்து கொண்டு சாருகேசியின் உடலைக் காணுவதற்கு விரைந்தாள் அவள்! அந்த வீரப் பெண்ணின் உடலைக் கண்டதும் தரங்கவல்லி ஒரு குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதாள். சற்று நேரத்துக்கு முன்பு வீரத்தோடு வாளைப் பிடித்த தனது கைகளிலே, இப்பொழுது சாருகேசியின் உடம்பை அணைத்து எடுத்தாள். துவண்டு போன பூமாலையைப் போன்ற அந்த உடம்பை இரண்டு கைகளாலும் அணைத்தவாறு கதறினுள் தரங்கவல்லி! வீர மரணம் என்றும், உயிர்த் தியாகம் என்றும் சாரு கேசியைக் குறித்து நாம் எத்தனை சொன்னபோதி லும், தரங்கவல்லி ஒரு பெண்தானே? அவளு டைய உள்ளத்தில் மற்ற எல்லா உணர்ச்சிகளுக்கும் மேலாகப் பெண்மையின் மென்மையான இயல்புகள் விம்மி நின்றன! அவளால் அந்தக் காட்சியைத் தாங்க முடியவில்லை!''

இப்படிச் சொல்லி விட்டுச் சமணத் துறவி சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு அவர் மீண்டும் தொடர்ந்து சொன்னுர்:—

''சித்திராங்கபூபதி! இந்த உலகின் விரோதமும் பகையுணர்ச்சியும் சில சமயங்களில் எதிர்பாராத விதத்தில் அன்பாக மாறி விடுகிற வி



# கால்கேட் குளோரோபில்

# ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாகவாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரியகுளோரோபில் இல்லை**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை.
மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள்கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்**

நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/C/3

பார்க்கிறேம். நீங்கள் இளைஞர். வாழ்க்கை இப்பொழுதுதான் உங்களுக்கு ஆரம்பம் ஆகிறது. நான் அப்படி இல்லை. எத்தனையோ துன்பங்களை அனுபவித்து விட்டேன். அந்த அனுபவத்திலிருந்து சொல்கிறேன். கடுமையான பகை யுணர்ச்சிகூட, திடீரென்று வாஞ்சையாக மாறுகிறது. இதற்குக் காரணம் மனித உள்ளங்களில் உள்ள இலட்சிய நோக்கமும், எல்லா மனித மனங்களுக்கும் அடிப்படையாக அமைந்த அன்பு என்ற தத்துவமுந்தான்! எனவே, தரங்கவல்லிக்கும் பாண்டிய குமாரனுக்கும் திருமணம் நடந்தது குறித்து நான் வியப்படையவில்லை. அதிலும் சாருகேசியின் வீர மரணத்துக்குப் பிறகு அந்தப் பகைமையானது எப்படி வாழ முடியும்? சாருகேசியின் மரணத்தோடு அந்தப் பகைமையும் மரணம் அடைந்தது! பாண்டிய அரச குமாரனின் உள்ளத்தில் சாருகேசியின் மரணத்தால் ஏற்பட்டிருந்த மனமாற்றத்தைத் தரங்கவல்லி மிக நன்ருகப் புரிந்து கொண்டாள். பொதுவாகத் துன்பப்படுகிற ஒரு உள்ளம் ஆறுதல் சொல்லக்கூடிய இன்னெரு உள்ளத்தை நாடுவது இயற்கை. அந்த இன்னெரு உள்ளம் துன்பத்தை எத்தனை தூரம் பகிர்ந்து கொள்கிறதோ அத்தனைக்கு இந்த இரண்டு உள்ளங்களுக்கும் நேசமும் ஐக்கியமும் உண்டாகி விடுகின்றன. இது நுட்பமான மனத் தத்துவம். தரங்க வல்லியின் விஷயத்திலும் இப்படித்தான் நடந்தது. சாருகேசியின் மரணத்தினால் வேதனைப்பட்ட அந்த உள்ளத்தில், பாண்டிய அரசகுமாரனின் அநுதாபமும் அவனுடைய பச்சாத்தாபமும் சேர்ந்து ஓர் உறவை உண்டாக்கி விட்டன! நடுகல் நாட்டும் அந்த விழாவில் தரங்கவல்லியும் பாண்டிய அரசகுமாரனும் சதிபதிகளாக நின்று அந்தச் சடங்கைச் செய்தார்கள்!''

இவ்வாறு கூறி முடித்தார் சமணத் துறவி. பூபதி ஒன்றுமே பேசவில்லை. அவனுடைய மனத்தில் சாருகேசியின் மரணம் உணர்ச்சிச் சுழல்களை வீசிக் கொண்டே யிருந்தது. அன்றெருநாள் வலம்புரித் தீவின் நிலவுப் பாறையிலே தான் பார்த்த சிலை சாருகேசியின் சிலை தான் என்றும், அந்தச் சிலையிலே ஒலித்த இசையிலே பாணர் மகளின் இதயந்தான் துடிதுடிக்கிறது என்றும் தெரிந்து கொண்டதில், இப்பொழுது அவனுக்கு ஒரு விவரிக்க முடியாத தாபம் உண்டாயிற்று.

''பெரியவரே! அப்படியானல் பாண்டியர்கள் அந்தச் சம்பவத்தோடு வலம்புரித் தீவை மறந்து விட்டார்களா?''

துறவி சொன்னர்: ''மறந்து விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்ருல் பாண்டிய அரச குமாரன் அதற்குப் பிறகு பாண்டிய நாட்டுக்குத் திரும்பவில்லை. 'இந்த வலம்புரித் தீவின் புனர் வாழ்வுதான் இனி என்னுடைய இலட்சியம். அந்த முடிவோடு நான் இங்கே குடியேறி விட்டேன். இந்தத் திருமண உறவு என் தந்தைக்கு இப்பொழுது சீற்றத்தை உண்டாக்கினல் என்னை மன்னித்து விடும்படி அவரிடம் சொல்லுங்கள். அவருடைய ஐந்து குமாரர்களில் நான் ஒருவன். இவரில் ஒருவனை மறந்து விடும்படி பாண்டிய வேந்தரிடம் சொல்லி விடுங்கள்!' என்று பாண்டியத் தளபதியிடம் சொல்லி அனுப்பினன் அரச குமாரன். அன்று வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டுக்குத் திரும்பிய பாண்டிய சேனை அன்ருேடு அந்தத் தீவின் நினைவையே மறந்து விட்டது. வலம்புரித் தீவு கடலுக்கு மத்தியிலே தன்னந் தனியாக நின்றது!''

''பெரியவரே! பாண்டிய அரச குமாரனின் இலட்சியமும் இதுவரை நிறைவேற வில்லையே! வலம்புரித் தீவுக்கு இன்னும் புனர் வாழ்வு ஏற்பட வில்லையே! எதிர்பாராத சிக்கல் அல்லவா ஏற்பட்டிருக்கிறது! இதற்கு என்ன காரணம்? தரங்கவல்லிக்கும் பாண்டிய அரசகுமாரனுக்கும் ஏற்பட்ட உறவிலே ஏதாவது விபரீதம் நேர்ந்ததா?'' என்று கேட்ட பூபதிக்குச் சமணத் துறவி தரங்கவல்லியின் வாழ்விலே ஏற்பட்ட அந்த முக்கியமான சம்பவத்தைச் சொல்லத்தொடங்கினர்.



வலம்புரித் தீவின் அரச மாளிகையிலே மிகவும் அழகான இடம், மேல் உப்பரிகையின் நிலா முற்றந்தான். அந்த நிலா முற்றத்திலிருந்து பார்த்தால் வலம்புரித் தீவு முழுவதுமே கண்ணுக்குத் தெரியும். அது மட்டுமல்ல, சுந்தரத் தீவைச் சுற்றி அலை வீசிக் கொண்டு கோஷிக்கும் நீலக் கடலும், எல்லையற்ற அதன் பரப்பும் நன்ருகத் தெரியும். வலம்புரிக் கரையிலே

நிற்கும் கலங்கரை விளக்கும் அந்த விளக்கிலிருந்து கூர்மையான ஒளிக் கற்றைகளைச் சிதறிக் கொண்டு சுழலும் சந்திர காந்தக் கல்லும், நிலா முற்றத்தி லிருந்து பார்த்தால் மனத்தை மயக்கும்! வலம்புரி அம்மனுடைய கோவிலும், அந்தக் கோவிலைச் சுற்றி நிற்கும் சிற்பங் களும் ஏதோ ஒரு கனவு போல, நிலா முற்றத்தி லிருந்து பார்ப்பவர்களின் கண்ணுக்கு முன்னால் எழுந்து நிற்கும்! ஆனால் இப்பொழுதோ?

புதிதாக மணமாகிய பாண்டிய அரச குமாரனும் தரங்கவல்லியும் அந்த நிலா முற்றத்துக்கு வந்தார்கள். நூதன மாகப் பிறந்த அன்பின் வேகம் எப் பொழுதுமே அதிகமாகத்தான் இருக்கு மென்றாலும், அந்த அன்புக்குக் காரண மாக அமைந்த சோகமான சம்பவத் தின் துயரம் மனத்தை விட்டு அகலா மல்தான் இருந்தது. அந்தச் சோகத் தின் அஸ்திவாரத்திலே கட்டப்பட்ட அன்புக் கோவில்தான், பாண்டிய குமார னுக்கும், தரங்கவல்லிக்கும் ஏற்பட்ட பாசம். அந்தப் பாசம் எத்தனை பல மாக இருந்தாலும் அதன் அஸ்திவாரத் துக்குள்ளே சாருகேசியின் இதயம் பொதிந்து கிடந்தது.

''தரங்கவல்லி!'' என்று அழைத்தான் பாண்டிய குமாரன். அவனுடைய குரலில் ஏக்கம் இருந்தது.

''தரங்கவல்லி! நான் எத்தனை பெரிய பாபம் செய்துவிட்டேன் என்பது இந்த நிலா முற்றத்திலே நின்று பார்த்தால் தான் கண்ணுக்கு நன்றாகப் புலப்படு கிறது! இதோ தெரிகிற வலம்புரி அம் மன் கோவிலும், சுற்றி நிற்கிற இடிந்த சிற்பங்களும், கண்ணுக்குத் தெரிகிற எல்லையெங்கும் சிதைந்தும் அழிந்தும் சிதறியும் போய்க் காணப்படுகிற இத் தனை நாசக் காட்சியும் என்னுடைய பாபத்தின் சின்னங்கள். ஒரு மலர்ச் செடியின் அருமை காட்டு மிருகத்துக் குத் தெரியுமா? சாருகேசி என்ற மலர்க் கொடியை என்னுடைய படை தரை யிலே தேய்த்து மெழுகிவிட்டது. வலம் புரி என்ற நந்தவனத்தை என்னுடைய பாபச் செயல் சின்ன பின்னமாக அழித்து மெழுகிவிட்டது! அதைத்தான் இந்த நிலா முற்றத்திலிருந்து பார்க் கிறேன்! மிருகத் தனமான கோபம் எத்தனை பொல்லாதது என்பதை இந் தக் காட்சி எனக்கு எடுத்துக் காட்டு கிறது!'' என்றான் பாண்டியகுமாரன். தரங்கவல்லிக்கு இந்த வார்த்தை களைக் கேட்க மிகவும் கஷ்டமாக இருந் தது. சொன்னாள்:

''கோபம் கொடியது என்பதை ஒப் புக் கொள்ளுகிறேன். ஆனால் இந்த அரச குடும்பத்தோடு உறவு கொள்ள வேண்டும் என்று நீங்கள் அத்தனை தூரம் ஆர்வமாக இருந்ததால்தானே, அந்தத் திருமணம் முறிந்து போனதில் அத்தனை கோபம் உண்டாயிற்று உங்களுக்கு! அதை நன்றாகப் புரிந்து கொள்ளு கிறேன். ஆனால் அதைப் பற்றி இனிக் கவலைப்படுவதினால் என்ன பயன்? அத்தனை கோபத்துக்கும் சேர்த்து இப் பொழுது நீங்கள் இத்தனை மாறி விட் டீர்கள் அல்லவா? அது போதாதா?'' என்றாள் தரங்கவல்லி. பாண்டியன் சொல்லுவான்:

''மனத்தின் அமைதிக்கு இப்படி ஒரு புதிய வாழ்க்கை முறையை வகுத்துக் கொண்டு விட்டேன். அது பற்றி மகிழ்ச்சிதான். என்றாலும் என் னுடைய பாபத்துக்கு முழுப் பிராயச் சித்தம் இன்னும் செய்தாகவில்லை!'' இப்படிச் சொல்லும்போது பாண்டிய குமாரனின் விழிகள் கலங்கின. தரங்க வல்லி கேட்டாள்:

''அன்பே! நீங்கள் என்ன சொல்லு கிறீர்கள்? உங்களுடைய ஆத்திரத்தில்

## வெகுமதி!





# வேலைகளைச் செய்ய சக்தி

சக்திதான் பல வேலைகளைச் செய்து பூர்த்தி செய்ய உதவுகிறது. இந்தியாவின் இரண்டாம் ஐந்து வருஷ திட்டத்தின் பல பெரிய முயற்சிகளைச் செய்து முடித்து திட்டப்படி பலனைப் பெற மிகவும் அவசியமாயிருப்பது சக்தி. சக்தி முறைமையில் முற்றிலும் வணிக சக்தி, அதாவது நிலக்கரி, மின்சாரம் மற்றும் எண்ணெய் இவை இந்தியாவில் இப்போதும் மிகக் குறைவே. இருந்தபோதிலும் இவை மூலைமுடுக்குகளிலுள்ள கிராமாந்திரங்களில் தொன்று தொட்டு கையாண்டு வரும் வாழ்க்கைப் பழக்கங்களில் இப்போது நெருக்குதல் உண்டாக ஆரம்பித்திருக்கிறது.

1948-ம் வருஷம் முதல் வணிக சக்தி முறைமையில் இந்தியாவில் எண்ணெய் அளித்திருக்கும் சேவை 100 சத விகிதம் அதிகரித்திருக்கிறது. எண்ணெய் ஒன்றுமட்டுமே பலவிதப்பட்ட முறைகளில் உபயோகிக்கக்கூடிய சக்தி. இன்னும் இலகு-எளிதான வழியில் கையாளப்படும் 'பாக் செய்யப்பட்ட சக்தி' என்றும் கூறலாம். எண்ணெயிலிருந்து கிடைக்கக்கூடிய சக்தியை தேசத்தில் எல்லா பாகங்களிலும் குறைந்த விலையில் திறமையோடு போதுமான அளவில் கிடைக்கும்படிச் செய்ய விநியோக ஸ்தாபனத்தை வைத்து நடத்திவருவது தான் எங்கள் பொறுப்பு.

**பர்மா-ஷெல்... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

நீங்கள் செய்துவிட்ட காரியங்களுக்குப் பிராயச்சித்தமாகத்தான் இப்பொழுது இந்தத் தீவிலேயே தங்கி விட்டீர்களே. உங்களுடைய தந்தையையும், உறவினர்களையும், ஊரையும், சுற்றத்தையும் எல்லாம் மறந்து இந்தத் தீவின் புனர் வாழ்வுக்காகவே இங்கு தங்கிவிடுவதாகத் தீர்மானித்தீர்களே, அதைவிட மேலான பிராயச்சித்தம் வேறு என்ன இருக்கக்கூடும்?'' என்று கேட்ட தரங்கவல்லிக்குக் கண்ணிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பொங்கி ஓடியது. அவளுக்கு அருகிலே சென்று தனது மேலுடையினால் தரங்கவல்லியின் கண்களைத் துடைத்தான் பாண்டியகுமாரன்.

''வல்லி! என்னுடைய மனத்துக்கு ஆறுதல் சொல்லுகிறாய் நீ! ஆனால் அப்படி ஆறுதல் வார்த்தைகள் சொல்லிக் கொண்டு வரும்போதே உன்னையும் மீறி ஒரு பெருந் துயரம் உன்னை வாட்டுகிறது. அந்தத் துயரத்தை என்னிடம் வெளியிட்டுக் கூறாமல் மனத்துக்குள்ளே அடக்கிக்கொள்ளப் பார்க்கிறாய். ஏன் உனக்கு இத்தனை தயக்கம்? தரங்கவல்லி! உன்னுடைய உள்ளத்தின் துயரத்தை என்னிடம் சொல்லம்மா!''

இவ்வாறு அன்பும் பரிவும் மேலிட்டவளைக் கேட்டான் பாண்டிய குமாரன். தரங்கவல்லி நிலா முற்றத்தில் இருந்த பளிங்குக் கட்டிலிலே போய் அமர்ந்தாள். பாண்டிய குமாரனும் அவளோடு நடந்து சென்று அந்தக் கட்டிலில் அவளுக்கு அருகே அமர்ந்து கொண்டான். அரசகுமாரி தரங்கவல்லி பேச ஆரம்பித்தாள்:

''அன்பே! என் மனத்தில் உள்ளதை உங்களிடம் கட்டாயம் சொல்லத்தான் போகிறேன். ஆனால் அதற்கு முன்பு நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி தர வேண்டும்!'' என்றாள் தரங்கவல்லி.

''வாக்குறுதியா! எத்தனை வாக்குறுதிகள் வேண்டும், கேள். தாராளமாக உறுதி கூறுகிறேன்!''

''பாண்டிய குமாரரே! நீங்கள் என்னை விட்டுப் பிரிந்து செல்ல மாட்டேன் என்று உறுதி சொல்ல வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும் நீங்கள் இங்கிருந்து செல்லக் கூடாது. அப்படி ஒருவேளை இந்த வலம்புரித் தீவிலிருந்து போகும்படி நேர்ந்தால் என்னையும் உங்களோடு அழைத்துச் சென்று விட வேண்டும்!''

இவ்வாறு சொன்னாள் தரங்கவல்லி. அதைக் கேட்டுப் பாண்டிய குமாரன் புன்னகை செய்தான்.

''கண்ணே! உன்னை மறந்து விட்டு வேறு ஒரு பெண்ணின் மோக வலையில் விழுந்து விடுவேன் என்று பயப்படுகிறாயா! என்ன பைத்தியக்காரத்தனமான எண்ணம் இது! உன்னுடைய அழகும், கவர்ச்சியும், உன்னுடைய குண நலமும் உனக்கே தெரியவில்லை. அதனால்தான் இப்படிப் பயப்படுகிறாய்!'' என்றான் பாண்டியன்.

''இல்லை. அதற்குச் சொல்லவில்லை. என்னை நீங்கள் இங்கே தனியே விட்டு விட்டுத் தமிழ் நாட்டுக்குச் சென்றால் உங்களுடைய மனிதர்கள் உங்களுக்குப் பெரும் இடையூறு செய்வார்கள் என்று பயப்படுகிறேன். அவர்களையெல்லாம் மறந்து விட்டு நீங்கள் இங்கேயே தங்கியது அவர்களுக்கு அத்தனை ஆத்திரத்தைக் கொடுத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை!'' என்றாள் தரங்கவல்லி! எத்தனை வீரம் மிகுந்தவளாக இருந்தாலும் கணவனுக்கு மனைவி, அவளும் ஒரு பெண்தானே! அதனால் இப்படிச்சொன்னாள் என்பதைப் புரிந்து கொண்டு விட்ட பாண்டியகுமாரன், தரங்கவல்லியின் விருப்பப்படியே உறுதி செய்து கொடுத்தான். அதன்பேரில் தரங்கவல்லி சொன்னாள் :—

''பாண்டியகுல திலகமே! என்னுடைய உள்ளத்தில் எந்த மகிழ்ச்சிக்கு மத்தியிலும் ஒரு பெரிய துயரம் என்னை வாட்டி வருகிறது. அந்தத் துயரத்துக்கு ஒரு முடிவு ஏற்பட்டால் ஒழிய நமது இல்லறம் குறையுள்ள வாழ்க்கையாகத்தான் கழியும்! அந்தத் துயரம் நீங்க வேண்டுமானால், இந்தத் தீவிலிருந்து மறைந்து போய்விட்ட பேரி



திருவனந்தபுரம் ரிடயர்டு ஜில்லா மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீ கோவிந்தசாமி, பி. ஏ., பி. எல். அவர்கள் குமாரி சௌ. சீதாலக்ஷ்மிக்கும் கீழாம்பூர் ஸ்ரீ ஏ. ஏ. சங்கரநாராயண அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி ஹரிஹரன் பி. ஏ. அவர்களுக்கும் 9-9-56ந் தேதி அன்று திருவனந்தபுரத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!



டெல்லி ஸ்ரீ. ஏ. சுந்தரேச அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி எஸ். சுப்ரமணியன் பி.ஏ. (ஹானர்ஸ்) அவர்களுக்கும், தக்ஷிண ரயில்வே கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸ் பெரம்பூர். ஸ்ரீ. வி. ஸ்ரீநிவாசன் அவர்கள் குமாரி சௌ. விஜயலக்ஷ்மிக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

---

யாழ் மீண்டும் இந்தத் தீவுக்கு வந்தாக வேண்டும். ஓர் ஏழைப் பாணன் மகள் இந்த நாட்டுக்காகத் தியாகம் செய்த விலை மதிக்க முடியாத ஆருயிருக்குச் சாந்தி தர வேண்டிய பெரிய கடமை எனக்கு இருக்கிறது. நான் சிரிக்கும்போதும், நான் உங்களோடு உல்லாசமாகப் பேசும்போதும், நீங்களும் நானும் பூரண நிலவிலே களிப்போடு பேசித் திரியும்போதும் என் இதயத்தின் அந்தரங்கத்தில் இந்தக் கடமையுணர்ச்சி 'சுருக்' 'சுருக்'கென்று முள் குத்துவதுபோல வேதனை தருகிறது. நம்முடைய இல்லறத்தின் களியாட்டங்களுக்கு இருப்பிடமாக உள்ள காதற் கோயிலின் அஸ்திவாரத்துக்குள்ளே, ஒரு ஏழைப் பாணரின் ஏழை மகள் மறைந்திருக்கிறாள். நம்முடைய உல்லாசச் சாலையின் அஸ்திவாரத்துக்குள்ளே ஒரு மென்மையான சாருகேசியின் இதயம் துடித்துக் கொண்டேயிருக்கிறது! அந்தத் துடிப்பு ஒவ்வொரு கணமும் என்னுடைய கடமையை எனக்கு இடித்துக் கூறுகிறது. நான் அந்தப் பாணன் மகளுக்குக் கொடுத்த வாக்குறுதியை எனக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருக்கிறது.''

இவ்வாறு கூறினாள் தரங்கவல்லி. அவளுடைய முகம் வெளிறிப் போயிருந்தது. மறைந்துபோன ஒரு ஆன்மாவின் துடிப்பு இப்பொழுது தரங்கவல்லியின் இமைகளிலே வந்து துடிதுடித்துக் கொண்டிருந்தது. அதைக் கவனித்த பாண்டிய அரச குமாரன் தரங்கவல்லிக்கு ஒரு மகத்தான வாக்குறுதி செய்து கொடுத்தான்.

''தரங்கவல்லி! இனி இந்தப் பாண்டிய குமாரன் பிரளயமே வந்தபோதிலும், தரங்கவல்லியைக் கைவிட்டு ஓடமாட்டான். இனி இந்தப் பாண்டிய குமாரனின் ஒரே இலட்சியம், மறைந்து போன அந்தப் பேரியாழை மீண்டும் இந்த வலம்புரித் தீவுக்குக் கொண்டுவர வேண்டும் என்பதே! இந்தத் தீர்மானம் நிறைவேறுவதற்கு மனம், மொழி, மெய் மூன்றையுமே அர்ப்பணம் செய்கிறேன்!'' என்று வாக்களித்தான்.

நிலா முற்றத்தில் ஒரு மாபெரும் மௌனம் நிலவியது. பாண்டிய அரச குமாரனின் வாக்குறுதியைக் கேட்டு இயற்கையன்னையே ஸ்தம்பித்து நின்றுவிட்டது போல் இருந்தது. அந்த மௌனம்! ஏனென்றால் நிறைவேறாத வாக்குறுதிகளும், முற்றுப் பெறாத கனவுகளுமே மனித இயல்பாகப் போய் விடும்போது, இயற்கை அதைக் கண்டு மௌனம் சாதிக்க வேண்டியதுதானே?

சமணத்துறவி இப்படி முடித்தார் கதையை. வானத்தில் சூரியன் உதயமாகிக் கொண்டு வந்தது. காலைப் பறவைகள் இனிமையான இசையைக் காற்று வெளியிலே தூவிக் கொண்டு வானத்திலே பறந்தன.

''பெரியவரே! கதையை முடித்து விட்டீர்கள். ஆனால் தரங்கவல்லியும், பாண்டிய குமாரனும் என்ன ஆனார்கள் என்ற விவரத்தை இன்னும் சொல்லவில்லையே. சந்திரசூடன் யாழோடு ஓடிப்போனவன் எங்கே போய்ச் சேர்ந்தான், அவனுடைய கதி என்ன ஆயிற்று என்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா? சாருகேசியின் பெண் குழந்தை கண்ணற்ற கடலிலே மிதந்து கடலிலே ஆழ்ந்து விட்டதா? அல்லது உயிரோடு இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறதா என்று அறிந்து கொள்ள எத்தனையோ ஆவலாக இருக்கிறதே! இந்த விவரம் எல்லாம் எனக்குத் தெரியவேண்டாமா? இந்த முக்கியமான விவரங்களை எனக்குச் சொல்வதில் ஏதாவது பிசகு இருக்குமானால் சொல்ல வேண்டாம். இல்லையென்றால் கட்டாயம் சொல்ல வேணும்!'' என்று கேட்டான் பூபதி.

''வாருங்கள்! நடந்து கொண்டே பேசுவோம்'' என்று சொல்லிச் சித்திராங்க பூபதியை அழைத்துக் கொண்டு ஏழடிப் பட்டத்திலிருந்து புறப்பட்டார் சமணத் துறவி. (தொடரும்)

# உயர்தர வாழ்க்கைக்கு உகந்த ஒரு பரிசு....



60 ஆண்டுகள் வாழும் ஒரு மனிதன் தன் ஆயுளில் சுமார் 18 ஆண்டுகள் தூக்கத்திலும், 14 ஆண்டுகள் உழைப்பதிலும், 5 ஆண்டுகள் பிரயாணத்திலும்,



4 ஆண்டுகள் படிப்பிலும், 5 ஆண்டுகள் உண்பதிலும், உத்தேசமாக 3 ஆண்டுகள் நோயிலும் கழிக்கிறான்.



பாக்கியுள்ள அவகாசத்தை பொழுது போக்கு,



அரட்டையடிப்பது முதலிய வகையில் தீர்த்து விடுகிறான்.



பாதரக்ஷைகளின் நூலை இழுத்து முடிக்கும் வேலைகூட அரை வருட அவகாசத்தை விழுங்கிவிடுகிறது. கிடத்தட்ட அவன் செய்யும் எல்லா வேலைகளையும் டன்லபில்லோவில் உட்கார்ந்துகொண்டோ சாய்ந்துகொண்டோ செய்தால் அதிக சௌகரியமாகச் செய்யலாம் என்றென்றைக்கும் நினைவிருக்கக் கூடிய ஒரு பரிசை அளிக்க விரும்புவீராயின் உகந்த பரிசு ஒரு டன்லபில்லோ.



இழைநயமுள்ள தலையணை

வட்டமான, திருப்பிவைக்கக் கூடிய சாய்மான மெத்தை

மடக்கக்கூடிய கார்மெத்தை

தாத்காலி மெத்தை

பிரயாண சாமான் ஜோடிப்பு, மெத்தை தலையணை உள்பட



## டன்லபில்லோ

லேடக்ஸ் நுரை தயாரிப்புகள் முதன்மையானது நேர்த்தியானது

DPC-84 TM




# குலதெய்வம்

காந்தன்

உயர்ந்த இனத்தைச் சேர்ந்த 'புளு ஜாகர்' வைரமாயிருந்தாலும், அதை ஆபரணத்தில் அமைக்கும் பொற்கொல்லனின் கையிலிருக்கிறது. அதன் சிறப்பு. சிறந்த 'வெல்வெட்'டானாலும் அதை ஜாக்கெட்டாகத் தைக்கும் தையற்கலை நிபுணரின் கைவண்ணத்தில் இருக்கிறது. அதன் பளபளப்பு.

அதே மாதிரி எவ்வளவு நல்ல நடிகர்கள் நடித்த படமானாலும் அப்படத்தைத் தயாரித்த படாதிபதியின் திறமையிலிருக்கிறது. அப்படத்தின் வெற்றி, தோல்வி. நல்ல டைரக்ஷன் இருந்தால் போதாதா, ஒரு படம் வெற்றியடைய என்று கேட்கலாம். ஆனால் டைரக்ஷனின் இன்றியமையாத தன்மையை உணர்ந்து ரஸிக்கும் பண்பாடுள்ள படாதிபதியாயிருந்தால்தான் படம் நன்கு உருவாகும். இன்றேல் அதோகதிதான்!

எஸ். கே. பிக்சர்ஸாரின் "குலதெய்வம்" ஏவி. எம். ஸ்டுடியோவில் தயாரானது என்று அறிந்ததும் படம் நல்ல முறையில் உருவாகியிருக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டே போனேன்.

"வாழ்க்கை", "அந்த நாள்" முதலிய நல்ல படங்களைத் தயாரித்துப் பொதுமக்களிடையே நல்ல பெயர் பெற்றிருக்கும் ஏவி. எம். தயாரிப்பில் எனக்கு எப்பொழுதுமே ஒரு நம்பிக்கையுண்டு. அந்த நம்பிக்கை வீண்போகவில்லை.

மரணவாயிலில் இருந்த கார்மேகம் தன் மூத்த மகன் முத்தையாவிடம், அவன் தம்பிகள் ராஜய்யா, ராமய்யா, சின்னையா ஆகிய மூவரையும் ஒப்படைக்கிறார். விவரம் தெரியாத பருவத்திலிருந்து மூன்று சகோதரர்களையும் முன்னுக்குக் கொண்டு வரும் பொறுப்பையேற்று முத்தையா ஏழைமை நிலையிலிருந்து முன்னேறிப் பெரிய ஜவுளிக் கடை முதலாளியாகிறான். அவன் முதல் மனைவி ஒரு மகனை ஈன்றதும் இறந்து விடுகிறாள். அந்த இடத்தை இட்டு நிரப்ப, சாந்த குணம் படைத்த சாந்தா இரண்டாம் தாரமாக முத்தையாவின் கரம் பற்றுகிறாள்.

முத்தையாவாக நடிக்கும் சகஸ்ரநாமமும், அவன் மனைவி சாந்தாவாக நடிக்கும் பண்டரிபாயும் ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுக்காமல் நன்றாய் நடித்திருக்கின்றனர்.

தந்தைக்குத் தந்த வாக்கைக் காப்பாற்று வதிலேயே முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்த முத்தையாவுக்கு, பதிக்கேற்ற பத்தினியாக, கணவனின் காரியம் யாவினும் கைகொடுக்கும் காரிகையாக, தாயை அறியாத சேய்க்குத் தாயாக விளங்குகிறாள், சாந்தா. பண்டரிபாய் இந்தப் பாத்திரத்தை ஏற்று, சாந்தமாகவும், இயல்பாகவும் நடித்துத் திரைக்கதைக்கு மெருகு கொடுத்து விட்டார்.

முத்தையாவின் சகோதரர்களில் ராமய்யா வக்கீலுக்கும், ராஜய்யா டாக்டருக்கும் படிக்கிறார்கள்; கடைசித் தம்பி சின்னையா கஜனி முகம்மது மாதிரி அலுப்பு சலிப்பில்லாமல்

பள்ளிப் பரீட்சையின் மேல் படையெடுக்கிறான். மகிழ்ச்சி ததும்பும் இந்தக் குடும்பத்தில் சாந்தாவின் தங்கை லதாவும் சேர்ந்து கொண்டு உற்சாக மூட்டுகிறாள்.

நல்ல ரஸத்தில் அதிக உப்பு விழுந்து விட்டது போலவும், நல்ல இசைத் தட்டில் கீறல் விழுந்து விட்டது போலவும் ராஜய்யா, ராமையா இருவரின் மனைவிமார்களும் இந்தக் குடும்பத்தைக் கலைப்பதற்கென்றே வந்து சேருகின்றனர். இதுவரையில் ஒழுங்காகச் சென்று கொண்டிருந்த திரைக் கதையில் ஒரு திருப்பம் காண்கிறது. ராமய்யாவின் மனைவி தாராவின் சகோதரன் ஜீவா, தங்கையின் நல் வாழ்வுக்குப் பாதை அமைப்பதாகச் சொல்லிக் கொண்டு ராமய்யாவைப் பாகப் பிரிவினைக்குத் தூண்டுகிறான். அதன் காரணமாக, சகோதரர்களுக்குள் பாகப் பிரிவினை ஏற்பட்டு முத்தையா தன் மனைவி, மகள், அத்தையுடன் கிராமத்துக்குச் சென்று குடியேறுகிறான்.

முத்தையாவாக நடிக்கும் சகஸ்ரநாமத்தின் முகபாவங்களும், உணர்ச்சி ததும்பும் பேச்சும், சந்தர்ப்பங்களுக்கேற்ற அப்பழுக்கற்ற நடிப்பும், திரையுலகில் அவர் அடைந்திருக்கும் புகழுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. வயதானவனாக நடிக்கும் போது அவருக்கு நிஜமாகவே வயதாகி விடுகிறது!

இந்தப் படத்தில் லதா ஒரு நல்ல பாத்திரம். விவரம் தெரியாத வயதில் தனக்கு விவாகமாகி விட்டதும், விவாகமான விரைவிலேயே விதவையாகி விட்டதும் லதாவுக்குத் தெரியாது. பூத்துக் குலுங்கும் புதுப் பூங்கிளையைப் போலவும், வான மழையைக் கண்ட வண்ண மயிலைப் போலவும் அவள் இல்லமெங்கும் இன்ப நடனம் புரிகின்றாள். அவளது களங்கமற்ற சந்தோஷ வாழ்வைக் குலைத்து விடுகின்றனர், முத்தையாவின் சகோதரர்களுக்கு வாய்த்த மனைவிமார்கள். லதாவைக் கண்டபடி ஏசி, அவள் ஒரு விதவை என்பதையும் அவளுக்கு அறிவுறுத்தி விடுகின்றனர். லதாவின் முகமும் அகமும் சோர்ந்து விடுகின்றன. தன் நிலை யறிந்து துடித்த அவள் விதவைக் கோலம் பூண்டு விடுகிறாள். இவ்விரண்டு மாறான கட்டங்களிலும் பாராட்டும் வண்ணம் நடித்திருக்கிறார் மைனாவதி. ஆரம்பத்தில் கண்ட அவரது கவர்ச்சியான நடிப்பும், களங்கமற்ற பேச்சும் நமக்குக் களிப்பூட்டியதுபோலவே, கடைசியில் அவரது கண்ணீரும் கம்பலையும் நம்மைக் கலங்க வைக்கின்றன.

ராமையாவின் மனைவி தாராவாகத் தோன்றும் எம். என். ராஜம் தம் பாத்திரத்தை உணர்ந்து நன்றாய் நடித்திருக்கிறார். துடுக்குப் பேச்சும் மிடுக்கு நடையும் கொண்ட அவர், கடைசியில் அடங்கி ஒடுங்கி அண்ணியின் அடி பணிவது பொருத்தமா யமைந்திருக்கிறது. பாராட்டுக்குரிய இன்னொருவரையும் குறிப்பிட வேண்டும். அவர்தான் புது முகம் விஜய குமாரி. முத்தையாவின் மூன்றாவது சகோதரன் ராஜையாவின் மனைவி மங்களமாக அவர் நடிக்கிறார். எடுத்த எடுப்பிலேயே அவர் நடிப்பு சோபித்திருக்கிறது. கணவனின் கரம் பற்றி அவன் வீட்டில் காலடி எடுத்து வைத்ததிலிருந்தே அவனிடம் வெறுப்புக் கொள்ளுவதற்கு, சகுனங்களில் அவள் கொண்டிருந்த மூட நம்பிக்கையே காரணமாகிறது. மனைவியிடம் வெறுப்படைந்த ராஜையா குடிகாரனாக மாறுகிறான்.

கிராமத்துக்குச் சென்ற முத்தையா பட்டணத்தில் ஜவுளி வியாபாரம் நொடித்துப் போனது கேட்டு மனம் முறிந்து, உடல் மெலிந்து, உள்ளம் நலிந்து, உயிர் துறந்து விடுகிறான். பிரிந்த சகோதரர்கள் ஒன்று சேருகின்றனர். கடைசியில் லதாவின் கருகிய வாழ்வு முத்தையாவின் கடைசிச் சகோதரன் சின்னையாவினால் தளிர்க்கிறது. சின்னையாவாக நடிக்கும் வி. ஆர். ராஜகோபால் (புது முகம்) முன்னுக்கு வரக்கூடிய விதத்தில் நடித்திருக்கிறார். ராஜையாவாக நடிக்கும் ராஜேந்திரன் சாதாரணமாக இருக்கும் போதும், குடி மயக்கத்தில் இருந்த போதும் கச்சிதமாக நடித்திருக்கிறார். புது முகங்களைத் துணிந்து புகுத்தி யிருக்கும் டைரக்டர்கள் கிருஷ்ணன், பஞ்சு இருவரும் பாராட்டுக்குரியவர்கள் என்பதில் ஐயமில்லை.

பிரபாவதி தேவி சரஸ்வதியின் மூலக் கதையை ஒட்டித் தயாரிக்கப்பட்டிருக்கிறது இப் படம். திரு மாறன் எம். ஏ., ஓர் இளம் எழுத்தாளர் என்று அறிகிறேன். அவர் தயாரித்திருக்கும் வசனம் சூழ்நிலைக்கு ஏற்றபடி அருமையாக அமைந்திருக்கிறது.

படத்துக்குச் சம்பந்தம் இல்லாமலிருந்தாலும் கமலா லக்ஷ்மண் நடனம் கவர்ச்சியுடன் இருக்கிறது.

ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு எதிலும் குறை காண முடியாதபடி படம் நன்றாய்த் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

காதல் காட்சி அதிகம் இல்லாமலே படம் களை கட்டுகிறது. யாரும் பார்த்து மகிழக் கூடிய படம் '' குலதெய்வம்.''



# நான்கு
## மருந்துகள்

ஒரு டாக்டரின் குறிப்பைப் போன்றது

WILL NOT UPSET THE STOMACH

DOES NOT HARM THE HEART

ANACIN

TRADE MARK REGISTERED

TABLETS

GEOFFREY MANNERS & COMPANY PRIVATE

MAGNET HOUSE, DOUGALL ROAD

WHITEHALL PHARMACAL COMPANY




'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப் பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள்

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 41

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

48

கோவில்களில் செய்யப்படும் விக்கிரக ஆராதனை பாபம் என்றும் மூட நம்பிக்கை என்றும் சிலர் கருதுவது போல் நான் கருதவில்லை. பலர் கூடி ஆண்டவனுக்குப் பூஜை செய்ய வேண்டியது அவசியம். இதை ஏதாகிலும் ஒரு முறையில்தான் செலுத்த வேண்டும். அதற்கென்று ஒரு பொதுவான இடமும் வேண்டும். இதனாலேதான் கோவில்கள் தோன்றியிருக்கின்றன. கோவிலுக்குள் ஒரு மூர்த்தியிருக்க வேண்டுமா அல்லது மூர்த்தியில்லாமலே பூஜை செலுத்தலாமா என்கிற கேள்வி அவரவர்களுடைய சுபாவம், அவரவர்களுடைய பண்பாடு ஆகியவற்றைப் பொறுத்தது.

விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருக்கும் ஹிந்துக் கோவில்களும், கத்தோலிக்கக் கோவில்களும் மூட நம்பிக்கைக்கும் உண்மைக் கடவுளை மறைப்பதற்கும் வழியாகும் என்று நான் கருதவில்லை. விக்கிரகம் வைக்கப்படாத மசூதிகளும் புதுத் திட்டக் கிறிஸ்துவக் கோவில்களும் குறையற்ற ஞான ஸ்தானங்கள் என்றும் நான் நம்பவில்லை. மூர்த்தியோ தெய்வச் சிலையோ இல்லாமற் போன படியினாலேயே அறியாமை நீங்கி விட்டதாக எண்ணலாகாது. சிலுவை அல்லது வேறு ஒரு சின்னம் அல்லது ஒரு புஸ்தகம் மூட நம்பிக்கைக்கும் உண்மையை மறைப்பதற்கும் வழியாகலாம். ஆண்டவனை மறந்து விட்டு மரமும் ஓலையும் நமக்கு உதவும் என்று மூடத்தனமாக எண்ணவும் முடியும். சீக்கியர் கோவில்களில் புஸ்தகமே மூர்த்தியாகிறது. கிறிஸ்துவக் கோவில்களில் சிலுவையே மூர்த்தி பூஜைக்கு உதவுகிறது. கண்ணன் விக்கிரகம் கல்லிலோ மண்ணிலோ மரத்திலோ செய்தது, ஏசு நாதரின் தாய் மேரி அம்மையின் விக்கிரகம் இவையெல்லாம், பூரண பக்திக்கும் மெய் ஞானத்துக்கும் உதவும் என்பது என் கருத்து. வழிபடுகிறவனுடைய உள்ளத்தைப் பொறுத்திருக்கிறது.

[யங் இந்தியா, 5—11—25]

நாம் எல்லாம் முற்றிய ஞானிகள் அல்ல. நம்முடைய அறிவு மிகக் குறைவு பட்டுக் கிடக்கிறது. கண்ணுக்குப் புலனாகாத கடவுளைத் தியானித்துத் திருப்தி அடைவது கஷ்டம். ஏதேனும் ஒன்று—கையினால் தீண்டக் கூடியது, கண்ணுக்குக் காணப்படுவது—அதன்முன் விழுந்து நமஸ்கரிக்கக் கூடியது ஒரு சின்னம்—வேண்டியதாகிறது. அது கிரந்தமாக இருக்கலாம்; அல்லது கட்டடமாக இருக்கலாம், அல்லது மூர்த்திகள் அமைக்கப்பட்ட கோயில்களாகவும் இருக்கலாம். சிலருக்கு ஒரு புஸ்தகமே திருப்தி தருகிறது. சிலருக்கு வெறும் மசூதியே போதும். வேறு சிலருக்கு வெறும் கோவில் போதாது. கோவிலுக்குள் வீற்றிருக்க ஓர் மூர்த்தி வேண்டும். ஆனபடியால் கோவில்களை மூட நம்பிக்கையின் வடிவங்களாக எண்ண வேண்டாம். அந்த எண்ணத்தோடு போவதை விடக் கோவில்களுக்குப் போகாமல் இருப்பதே நல்லது. கோவில்களுக்குச் சென்றால் பக்தியோடு போக வேண்டும். அப்படிப் போய்ப் பூஜை செய்தால் உள்ளம் சுத்தமடையும். பூஜைக்குப் பின் உள்ளத்தில் ஆண்டவன் கோவில் கொள்வான்.

[ஹரிஜன், 23—1—37]

நான் மூர்த்தி பூஜை செய்பவன். மெய்ப் பொருளை மறக்கச் செய்யும் சின்னத்தை வேண்டாம் என்று எதிர்க்கவும் செய்வேன். மூர்த்தி பூஜை என்றால் என்ன என்பதை உண்மைப் பொருளில் அறிய வேண்டும். மூர்த்திக்குப் பூஜை செலுத்துபவனுடைய பக்தியைப் பாராட்டிப் பெரிதாகக் கருதுவேன். அதன் வழி மக்கள் மேம்பாடு அடைந்திருக்கிறார்கள். அது மிகவும் முக்கியமான சாதனம். ஆனபடியால் இந்த நாட்டைப் புனிதப் படுத்தி வரும் ஆயிரக்கணக்கான கோவில்களை என் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்றும் சக்தியை ஆண்டவன் எனக்குத் தருவானாக.

[யங் இந்தியா, 28—8—27]

தன்னந்தனியே நின்று கொண்டிருந்தேன். எனக்கு முன்னே பரந்த கடல்; பின்னால் விரிந்த மணற் பரப்பு. சுற்றிலும் காரிருள். சற்றுத் தூரத்தில் 'மரீனா' கடற்கரைச் சாலையில் வரிசையாக மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. எனினும் இரவின் பயங்கரத் தன்மை மட்டும் குறையவில்லை.

அன்று பிற்பகலில் என் நண்பன் சண்முகம் தனக்கு மிகவும் பழக்கமான ஒரு பத்திரிகாசிரியரிடம் என்னை அழைத்துச் சென்றிருந்தான். அதற்கு முந்தின தினம்தான் நானும் அவனும் ஒரு மாத 'லீவி'ல் கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வந்திருந்தோம். அந்தப் பத்திரிகாசிரியர் விருப்பப்படி நான் காதல் கதை ஒன்று தருவதாக ஒப்புக் கொண்டேன்.

ஆசிரியருக்கு அளித்த வாக்கை எப்படிக் காப்பாற்றுவது—காதல் கதை எப்படி எழுதுவது என்று யோசனை செய்வதற்காகத்தான் அன்றிரவு சாப்பிட்டவுடன் தனியாகக் கடற்கரையை நோக்கிப் புறப்பட்டேன். தனக்கு அசதியாக இருப்பதாகச் சொல்லிச் சண்முகம் நாங்கள் இறங்கி இருந்த ஹோட்டல் அறையிலேயே தங்கி விட்டான்.

நான் கடற்கரையை அணுகி மணற் பரப்பில் நடக்கத் தொடங்கியபோதே ஜனங்கள் திரள் திரளாக வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். நான் சென்ற சிறிது நேரத்துக்குள்—அப்பொழுது எட்டரை மணி யிருக்கும்—கடற்கரை அநேகமாக் காலியாகி விட்டது. என்னை அடித்துப் போட்டு, கொள்ளையடித்தாலும் தடுக்க ஆள் கிடையாது. ஆனால் அதற்கு நான் பயப்படவில்லை. எந்தத் திருடன் வந்தாலும் சமாளித்துக் கொள்ளலாம் என்ற தைரியமிருந்தது. அச்சமயம் நான் பயப்பட்டதெல்லாம் சொன்ன வாக்கை எப்படிக் காப்பாற்றிக் கொள்வது என்பதுதான்!

காதல் கதை எழுதுவது அவ்வளவு சிரமமா என்று நினைக்கலாம். வாழ்க்கை அனுபவங்களைத் தானே கதாசிரியன் கதைகளாக வடித்துத் தருகிறான்? என் வாழ்வில் காதல் அஸ்தமித்துப் போய்விட்ட பிறகு என் கற்பனையில் மட்டும் காதல் தோன்றுவது சாத்தியமா?

காதல் பாதை கரடுமுரடானது என்று சொல்கிறார்கள். ஆனால் என் விஷயத்தில் பாதை சௌகரியமாகவே இருந்தது. ஆனால்..

*

ஐந்து வருஷங்களுக்கு முன்பு அது நடந்தது. அப்பொழுது நான் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். கடைசி வருஷப் படிப்பு.

ஒரு நாள் அவளை—சாவித்திரியைச் சந்தித்தேன். எங்கே சந்தித்தேன், எந்தச் சந்தர்ப்பத்தில் என்பதெல்லாம் அவசியமில்லை. நானும் சாவித்திரியும் ஒருவரை யொருவர் விரும்பினோம்—காதலித்தோம். அவளும் அந்த வருஷத்துடன் பள்ளிப் படிப்பை முடிப்பதாக இருந்தாள்.

எங்கள் காதல் கைகூட முடியாத காதல் அல்ல என்றுதான் எண்ணினோம். அவள் விஷயத்தைத் தன்



பெற்றோரிடம் நேரிடையாகவே சொல்லி எங்கள் கல்யாணத்துக்கு அவர்களின் சம்மதத்தைப் பெற்றாள். நானும் என் தந்தையின் சம்மதத்தைப் பெறச் சிரமப்படவில்லை. 'தாயற்ற ஒரே பிள்ளை' என்ற சலுகையில் எதைத்தான் பெற முடியாது? அப்படித்தான் இறுமாந்திருந்தேன். பரீட்சை முடிந்ததும் விவாகம் செய்வதாகத் தீர்மானித்து, சித்திரையில் ஒரு முகூர்த்தமும் பார்த்திருந்தார்கள். இடையில் இரண்டு மாதங்களும் எங்கள் காதலை வளர்த்தோம்.

சித்திரையும் பிறந்தது; பரீக்ஷைகளும் முடிந்தன. முகூர்த்த நாளும் நெருங்கி விட்டது. அதுவரையில் அந்த ஐந்தாறு மாதங்களில்—எங்கள் காதல் பாதையில் எதிர்ப்படாதிருந்த இடையூறு, விவாக தினத்துக்கு இரண்டே நாட்களுக்கு முன் குறுக்கிட்டது, ஒரு 'மொட்டை'க் கடித உருவில்.

'உங்கள் பையனுக்குப் பார்த்திருக்கும் பெண்ணுக்கு ஏற்கெனவே விவாகம் ஆகிக் கணவனும் இறந்து விட்டான். ஆகவே ஜாக்கிரதை....'

அந்தக் கடிதத்தை வைத்துக் கொண்டு என் தகப்பனார் 'குதி குதி' யென்று குதித்தார். சாவித்திரியின் வீட்டாரைக் கலந்து கொள்ளாமலே பத்திரிகைகளில் ஒரு அவசர விளம்பரம் செய்து விட்டார்:

''....தேதியன்று நடப்பதாக இருந்த என் குமாரன்....விவாகம் ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது....''

அதன் பிறகே கடிதத்துடன் அவர்கள் வீட்டுக்குச் சென்றார்.

''இதற்கு என்ன சொல்கிறீர்கள்?'' என்று கடிதத்தைக் காட்டிக் கர்ஜித்தார். சாவித்திரியின் தந்தை பதறவில்லை.

''இதை நீங்கள் நம்புகிறீர்களா?'' என்று நிதானமாகக் கேட்டார்.

''நம்புகிறேனோ, இல்லையோ, அது வேறு விஷயம். எனக்கு உண்மை தெரியவேண்டும்.''

''உண்மை தெரிய வேண்டுமானால் முதலில் என்னிடம் அல்லவா வந்திருக்க வேண்டும்? கல்யாணத்தை ஒத்தி வைத்து நீங்கள் விளம்பரம் செய்வானேன்?''

இதைக் கேட்டதும் என் தந்தையின் முகம் சிவந்துவிட்டது. ''விளம்பரம் செய்வது என் இஷ்டம். இந்த முகூர்த்தம் இல்லாவிட்டால் இன்னொரு முகூர்த்தம் இருக்கவே இருக்கிறது'' என்று இரைந்தார்.

''இன்னொரு முகூர்த்தம் மட்டுமென்ன? உங்களுக்கு இன்னும் எத்தனையோ பெண்களும் கிடைக்கலாம். இருந்தாலும்




# காதல் பாதை

சு. ரா.

நீங்கள் அவசரப்பட்டு இப்படிச் செய்திருக்கக் கூடாது'' என்றார் அவர்.

''அதை நீங்கள் சொல்ல வேண்டியதில்லை. எனக்கு உண்மையைச் சொன்னால் போதும்'' என்றார் என் தந்தை.

''அது இனி உங்களுக்குத் தேவையில்லை'' என்று சம்பாஷணையை முடித்து விட்டார் அவர். என் காதல் கதைக்கும் முற்றுப் புள்ளி குத்தப்பட்டது.

அவர் கூறினதில் தவறு இருந்ததாக எனக்குப் படவில்லை.

எனவே, என் தந்தையுடன் தர்க்கம் செய்தேன். ஆனால் அவர் பிடி கொடுத்துப் பேசவில்லை. ''..பெண்ணைப் பெற்றவன் என்ற நினைவு இல்லாமல் பேசுபவனுடன் எனக்குச் சம்பந்தம் வேண்டாம்'' என்று ஒரேயடியாகச் சொல்லி விட்டார்.

சாவித்திரியின் தகப்பனாரை ரகசியமாகப் போய்ப் பார்த்தேன். அவனும் அங்கே கண்ணீர் விட்டுக் கொண்டு நின்று கொண்டிருந்தான். அவர் முகத்தில் மட்டும் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தன.

''கொஞ்சமும் யோசனையில்லாமல் ஆத்திரப்படுபவனுடைய வீட்டில் பெண்ணைக் கொடுத்து விட்டு, நான் மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்க முடியாது. மொட்டைக் கடிதத்தை நம்பிக் காரியம் செய்பவனும் மனிதனா?'' என்று சொல்லிவிட்டார்.

நான் பேசாமல் வெளியே வந்தேன். நேரே வீட்டுக்குப் போகவில்லை. என் காதல் முறிந்த நிலையில் நான் கோழையாகத் தானிருந்தேன். கையிலிருந்த பணத்துடன் நேரே சென்னை சென்று, அங்கிருந்து கல்கத்தாவுக்கும் போய் விட்டேன். காதலில் ஏற்பட்ட தோல்வியை மறக்க என்னால் செய்ய முடிந்தது அது ஒன்று தான். தோல்வியை மறந்தேனே தவிர, காதலை மறக்கவே முடியவில்லை.

நல்ல வேலை கிடைத்து, நன்றாகச் சம்பாதிக்கவும் செய்தேன். நாளடைவில் தகப்பனார் மேலிருந்த கோபத்தை மறந்து, அவரை என்னிடம் அழைத்துக் கொண்டேன். ஆயினும் சாவித்திரியைத் தவிர்த்து இந்த ஜன்மத்தில் வேறு பெண்ணை மணப்பதில்லை என்று உறுதி செய்து கொண்டேன்.

*

...என்னைத் தாண்டிக் கொண்டு ஒரு உருவம் தண்ணீரை நோக்கிச் செல்வதைக் கண்டு என் கனவுலகிலிருந்து விழித்துக் கொண்டேன். சற்றுக் கூர்ந்து பார்த்தபோது அது ஒரு பெண் என்று தெரிந்து கொண்டேன். அந்தச் சமயம் அந்தப் பெண் தண்ணீரில் இறங்கிச் செல்ல வேண்டுமானால் ஒரே ஒரு நோக்கம்தான் இருக்க வேண்டும். நான் யோசித்து முடிப்பதற்குள் அவள் தண்ணீரில் இறங்கியும் விட்டாள்.

மேலும் யோசிக்காமல் அவளை நோக்கிப் பாய்ந்து அவள் கரத்தைப் பற்றி இழுத்து. ''இது என்ன காரியம்?'' என்று கூவினேன்.

அவள் பதில் ஒன்றும் சொல்லாமல் தலையை நிமிர்த்தி என்னை உற்றுப் பார்த்தாள். ''யார்? நீங்களா?'' என்று அலறினாள்.

குரலிலிருந்து நான் அவளை அடையாளம் கண்டு கொண்டேன்.

''சாவித்திரி! நீயா? என்ன காரியம் செய்ய இருந்தாய்?'' என்று கூறி, மெதுவாக அவளைக் கையைப் பிடித்துக் கரைக்கு அழைத்துச் சென்றேன். வெகு நேரம் அவள் விம்மிக் கொண்டே இருந்தாள். தூரத்தே கடலிலிருந்து கிருஷ்ண பக்ஷத்துச் சந்திரன் மெதுவாக எங்களை எட்டிப் பார்த்தான்.

''சாவித்திரி! இங்கே நீ எப்படி வந்தாய்? இந்தக் காரியம் செய்ய எப்படித் துணிந்தாய்? கோழைகளல்லவா தற்கொலை செய்து கொள்வார்கள்?'' என்று கூறினேன்.

அவள் விம்முவதை நிறுத்தி, கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு பேசினாள். ''உண்மைதான். ஆனால் தைரியசாலியான நீங்கள் மட்டும் எதற்காக என்னை விட்டு ஓடினீர்களாம்?'' என்று கேட்டாள்.

''சாவித்திரி! அப்பொழுது நான் பெரிய கோழையாகத் தானிருந்தேன். அதற்காக என்னை மன்னித்து விடு. காதலில் ஏற்பட்ட தோல்வியைக் கண்டு பயந்துதான் ஓடினேன். உன்னை அடைய முடியாமல் உன் அருகிலேயே இருந்தால் என்ன விபரீதம் ஏற்படுமோ என்று அஞ்சியே ஓடினேன்.''

''ஓடினதால் மட்டும் விபரீதம் தடுக்கப் பட்டதா? என் வாழ்க்கை வீணாகித்தானே போயிற்று!'' என்றாள்.

''ஏன், சாவித்திரி! உனக்கு வேறு இடத்தில் கல்யாணம் நடக்க வில்லையா?''

அவள் சிரித்தாள். ''நன்றாக இருக்கிறது, உங்கள் காதல்! நீங்கள் கிடைக்காவிட்டால் வேறு யாரையாவது விவாகம் செய்து கொண்டு விடுவேன் என்று எதிர்பார்த்தீர்களா? நான் விரும்பினாலும், இந்த 'இளம் விதவை'யை யார் மணம் செய்து கொள்வார்களாம்!'' என்றாள்.

''என்ன, நீ இளம் விதவையா? அப்படியானால் அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது உண்மைதானா?'' என்று கேட்டேன்.

''ஏன், இந்த உண்மை தெரிந்திருந்தால் என்னைக் காதலிக்காமலேயே இருந்திருப்பீர்கள், இல்லையா?''

என் நெஞ்சில் ஏதோ அடைத்துக் கொண்டது போலிருந்தது. திணறித் திணறிப் பேசினேன். ''சாவித்திரி! நீ என் காதலை அறிந்து கொள்ளாமல் கேலி செய்கிறாய். நான் உன்னை விட்டு ஓடினேனே தவிர, கல்யாணமே செய்து கொள்வதில்லை என்று தீர்மானித்து, அப்படியே இருந்து வருகிறேன்.''

அவளது இமையோரங்களில் கண்ணீர் எட்டிப் பார்த்தது. முகமும் பிரகாச மடைந்தது போல் தோன்றியது. ''ஐயோ! உங்கள் மனம் புண்படும்படியாக என்னென்னமோ பேசி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள். சிறிது நேரம் மௌனம் நிலவியது. மௌனத்தை நான்தான் கலைத்தேன்:

''சாவித்திரி! போனதெல்லாம் போகட்டும். இனி நாமிருவரும் கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தத் தடையொன்றுமில்லையே?'' என்று கேட்டேன்.

''நான் விதவை என்று தெரிந்துமா என்னைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

"எனக்கு அதைப் பற்றி அக்கறை இல்லை, சாவித்திரி! உன்னை முழு மனதுடன் காதலித்தேன். என் இருதயத்தில் உன் ஒருத்திக்குத் தான் இடமுண்டு. உன்னை வாழ்க்கைத் துணைவியாக அடையவே காத்திருக்கிறேன். நீ சம்மதிக்காவிட்டால் என் காலமெல்லாம் பிரும்மச்சாரியாகவே. . . ."

அவள் என் வாயைப் பொத்தினாள். "நானும் உங்களுக்காகவே காத்திருக்கும் போது நீங்கள் ஏன் பிரும்மச்சாரியாக இருக்க வேண்டும்?" என்றாள்.

"நான் போனதிலிருந்து இதுவரை என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்றேன்.

சுருக்கமாகச் சொன்னாள்: "என் தந்தையுடன் சண்டையிட்டுக் கொண்டு இங்கே லேடி வெல்லிங்டன் கல்லூரியில் சேர்ந்து அமைதி பெற முயன்றேன். ஆனால் உங்களை மறந்து வாழ முடியவில்லை. அதனால்தான் கடலின் உதவியை நாடி வந்தேன்."

"நான்தான் சமயத்தில்வந்துவிட்டேனே!"

"இனி நாமிருவரும் ஒன்று சேருவதை யாரும் தடை செய்ய மாட்டார்களல்லவா?" என்று நான் கேட்ட கேள்வியையே சாவித்திரியும் திருப்பிக் கேட்டாள்.

"செய்தாலும், எதிர்த்து வெற்றி அடையும் தைரியம் எனக்கு இருக்கிறது" என்றேன்.

சந்திரன் மேலுக்கு வந்து விட்டான். எங்கும் ஒளி வெள்ளம் பரவியிருந்தது. அவள் தன் கரங்களை என்னிடமிருந்து மனமின்றி விடுவித்துக் கொண்டு, "நான் ஹாஸ்டலுக்கே போய் விடுகிறேன். நாளைக் காலையில் கல்லூரிக்கு வந்தால் நம் திருமண வாழ்வை நிர்ணயித்துக் கொள்ளலாம்" என்றாள்.

கதையைப் படித்து முடித்து விட்டு என்னைப் பார்த்தார் பத்திரிகாசிரிய நண்பர். கதையைப் படித்து வரும்போதே அவர் கண்கள் நிறைந்து கலங்குவதைக் கவனித்த எனக்கு, அவர் கதையை அங்கீகரித்து விடுவார் என்ற உறுதி ஏற்பட்டது.

"ரொம்ப உருக்கமாக எழுதியிருக்கிறீர்கள். . ஆனால். ." என்றார் அவர்.

"ஆனால் என்ன ஸார்?" என்றேன்.

"கதையின் முடிவை, பின்பகுதியைச் சற்று மாற்றலாமென்று நினைக்கிறேன்" என்றார்.

"முடிவையா? முடிவு மட்டும்தானே. . ." என்று மேலும் சொல்லாமல் நிறுத்திக் கொண்டேன். "முடிவு மட்டுமே கதை" என்று கூறி, அது என் வாழ்க்கைக் கதையே என்று நானே அவரிடம் ஏன் பறைசாற்றிக் கொள்ள வேண்டும்?

"ஆமாம். இன்னும்கூட இன்பகரமாக முடிக்கலாம் என்று தோன்றுகிறது. இன்று மாலை மரீனாவுக்கு வந்தால் இரண்டு பேருமாகக் கலந்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்து விடலாம். உங்கள் கதையில் வரும் லேடி வெல்லிங்டன் கல்லூரிக்கு எதிரிலேயே கடற்கரையில் இருந்தால் ஆறு மணிக்கெல்லாம் வந்து விடுகிறேன்" என்றார்.

★

ஐந்தரை மணிக்கே நானும் சண்முகமும் குறிப்பிட்ட இடத்தில் உட்கார்ந்திருந்தோம். சரியாக ஆறு மணிக்கு ஆசிரியர்

வந்து சேர்ந்தார். தனியாக அல்ல! ஒரு யுவதியையும் அழைத்து வந்திருந்தார். யுவதி சாவித்திரியேதான்!

அவளைக் கண்டு நானும், என்னைக் கண்டு அவளும் திடுக்கிட்டோம். பேச முடியாமல் நெஞ்சில் ஏதோ அடைத்துக் கொண்டது. ஆசிரியர்தான் பேசினார்:

"நீங்கள் தெரிந்துதான் எழுதினீர்களோ, அல்லது கற்பனையாகத்தான் எழுதினீர்களோ சாவித்திரி உண்மையிலேயே லேடி வெல்லிங்டன் கல்லூரியில்தான் ஆசிரியையாக இருக்கிறாள். ஆனால் நீங்கள் கதையில் எழுதியிருப்பது போல் அவள் விதவையல்ல!" என்றார்.

சாவித்திரி பேசினாள்: "அவருடைய மனத்தின் அடித்தளத்தில் அந்தச் சந்தேகம் இன்னும் இருப்பதைத்தான் அவருடைய கதை பிரதிபலிக்கிறது."

நான் பதில் சொல்ல வாய் திறக்கு முன் ஆசிரியர் முந்திக் கொண்டார். "அந்தக் கடிதம் பற்றி உங்கள் அபிப்பிராயம் இதற்கு முன் என்னவாயிருந்தாலும் இனிக் கவலையில்லை. அதை எழுதின நானே அது வெறும் புரளி என்று உண்மையை ஒப்புக் கொண்ட பிறகு சாவித்திரியைப் பற்றித் தவறாக அபிப்பிராயம் கொள்ள இடமில்லையல்லவா?"

"என்ன! அந்த மொட்டைக் கடிதத்தை நீங்களா எழுதினீர்கள்?" என்று வியப்புடன் நானும் சாவித்திரியும் கேட்டோம்.

"ஆமாம், சாவித்திரி, ஆமாம்! அந்தக் கேவலமான காரியத்தை ஆத்திரத்தில் நான் தான் செய்து விட்டேன்!" என்று கூறியவர் என்னை நோக்கி, "என் மாமன் மகளான இவளைக் கல்யாணம் செய்து கொள்ள நான் காத்திருந்தபோது நீங்கள் குறுக்கிட்டு இவளை அடித்துப் போவதை நான் விரும்பவில்லை. என் மாமா, மாமி, சாவித்திரி மூவரிடமும் சண்டையிட்டுப் பார்த்தேன். பிரயோசனமில்லை. பிறகுதான் உங்கள் தந்தைக்குக் கடிதம் எழுதினேன். நீங்கள் ஓடிப் போன பிறகும் சாவித்திரி உறுதியாக இருந்ததைக் கண்ட பிறகே உங்கள் காதலின் சக்தியை அறிந்தேன்.... உங்கள் கதையிலிருந்துதான் உங்களைக் கண்டு பிடித்தேன். அப்பொழுதே உங்களிருவரையும் ஒன்று சேர்த்துவிட முடிவு செய்தேன். சாவித்திரியைப் பிறகு நான் சந்திக்கவில்லையே தவிர அவள் இங்கேதான் இருக்கிறாள் என்பது தெரியும். இதோ உங்கள் இருவரையும் ஒன்று சேர்த்து விட்டேன்" என்று முடித்தார்.

"கதையின் முடிவில் என்ன மாறுதல் செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அந்தச் சிறிய மாறுதலைத்தான் அப்பொழுதே சொல்லி விட்டேனே!" என்று கூறிச் சிரித்துக் கொண்டே என் நண்பனுடன் புறப்பட்டு விட்டார்.

தனித்து விடப்பட்ட நானும் சாவித்திரியும் எங்கள் பிற்காலத்தைப் பற்றி என்ன முடிவு செய்திருப்போம் என விரிவாகச் சொல்லி, கதையை வளர்த்த வேண்டுமா, என்ன? 'லீவ்' முடிந்து நான் கல்கத்தா திரும்பிய போது என் திருலக்ஷ்மியாகச் சாவித்திரியும் என்னுடன் வந்தாள் என்று கூறினால் மட்டும் போதுமல்லவா?

# பனி போன்ற இந்த க்ரீம் மூலம்
# வசீகரிக்கும் காந்தியுடன் தோன்றுங்கள்

**இது உங்கள் சருமத்தை மிருதுவாயும், நேர்த்தியாயும் வைக்கிறது . . . மரு, தழும்பு இவைகளை வெளியே தெரியாமல் மறைக்கிறது**




எப்பொழுதும் அழகுடன் விளங்க, குளிர்ந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகியுங்கள்.
பிரதி காலையிலும், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை இலேசாக முகத்தில் தடவுங்கள். சில விநாடிகளில் அது மறைந்து விடுகிறது. ஆனால் உங்கள் மரு, தழும்பு இவைகளை வெளியே தெரியாமல் செய்கிறது. பிறகு உங்கள் முகம் பட்டுப் போன்ற மென்மையுடனும், இயற்கையான கவர்ச்சியுடனும் எப்படி பிரகாசிக்கிறதென்று பாருங்கள்!

## பாண்ட்ஸ்
## வானிஷிங் க்ரீம்

**பவுடர் முகத்தில் நன்றாகப் படிகிறது!**

பவுடர் போட்டுக்கொள்வதற்கு முன்போ அல்லது அலங்காரம் செய்து கொள்ளுவதற்கு முன்போ, எண்ணெய்ப் பசையற்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை முகத்தில் தடவிக்கொள்ளுங்கள். இது உங்கள் சருமத்தை மிருதுப்படுத்தி, முக அலங்காரத்தை நேர்த்தியுடன் அமையச் செய்கிறது. நாள் முழுவதும் அழகுடன் விளங்க, பனிபோன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகியுங்கள்!

P. 3900




## 9. டி.பி.யைத் தடுக்க மறுப்புச் சக்தி

நம்மை நோய் தாக்காமல் தடுத்துக் கொள்ளுவது முதல் கடமையாகும். முதலில் ஆராய்ச்சி செய்ய வேண்டியது இதுவே. மனித யுக்திக்கும் மீறிப் பரவி கோரத் தாண்டவமாடும் இத்தகைய நோயைப் பற்றி ஆராயும் பொழுது சில கருத்துக்களை மீண்டும் ஞாபக மூட்ட விரும்புகிறேன்.

டி. பி. கிருமிகளை ஆகாயத்திலிருந்து அகற்ற இயலாமல் போகலாம். இது மானிட சரீரத்தில் புகுந்து விடுவதைத் தடுக்க முடியாமல் போவதும் உண்டு. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். டி. பி. கிருமி என்ற 'வித்து' மனித சரீரம் என்ற நிலத்தில் ஊன்றிக் கொண்டாலும், இது வளர்ந்து பயிராகாமல் தடுத்துக் கொள்வது இயலும். டி. பி. நுழைந்தாலும் நுழையா விட்டாலும் பொதுவாகச் சில வாழ்க்கைத் திட்டங்களை வகுத்து அவற்றை நித்யகர்மாவாகச் செய்து வந்தால், நுழைந்த டி. பி. வித்து வளராது. வித்தையும் நிர்மூலமாக்கலாம். தற்கால நாகரிக இயந்திர வாழ்க்கையில் இட வசதி மிகவும் முக்கியம்.

அரசாங்கமே இதை முற்றிலும் தீர்ப்பது சிரமமான காரியம். ஒதுக்கப்பட்டுப் பாழாகும் நமது கிராமங்களுக்குத் திரும்புவதே சிறந்தமார்க்கம்.

கிராமங்களில் இடக் கஷ்டம் கிடையாது. காற்றோட்டமுள்ள வாசத்துக்கு ஆயிரக் கணக்காகவோ, லட்சக்கணக்காகவோ பணம் செலவழிக்க அவசியம் இல்லை. 'கம்யூனிடி ப்ராஜக்ட்ஸ்'—சமூக முன்னேற்றத் திட்டங்கள் என்று டமாரம் அடிக்கப்படுகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரோக்கியம், மருத்துவப் பகுதிகள் பிரமாதமாக விளம்பரம் பெறுகின்றன. இந்த அம்சங்களுள், டி. பி. தடுப்பும், டி.பி.யை ஒழிக்கும் இடவசதியும் இடம் பெறலாமே!

பனங்கீற்று, தென்னங்கீற்று கூரையுடன் களிமண் சுவர் எழுப்பி, காரை பூசி ஜன்னல்கள் அமைத்து, மழையும் உஷ்ணமும் உட்புகாமல் பன்னிரண்டு அடிக்கு எட்டு அடி கொண்ட வாசஸ்தலங்கள் தயார் செய்ய எவ்வளவு ரூபாய் ஆகும்? ரூபாய் 150-க்கு ஒரு குடிசை தயார் செய்ய முடியும். அதிலும் கிராமவாசிகளின் சிரமதானம் இருந்தால் இந்தக் குடிசையின் செலவு இன்னும் குறையலாம். இப்படி நூறு குடிசைகள் அமைத்தால் இருநூறு நோயாளிகள் தனியாக ஒதுங்கி, காற்று வசதியுடன் பிறருக்கு அபாயமின்றிச் சிகிச்சை பெற ஒரு சானிடோரியம் ஏற்படுத்தலாமே! ஒரு ஜில்லாவில் இம்மாதிரி பத்து ஸானிடோரியங்கள் ஒரு வருஷத்துக்குள் உருவாகலாம்.

நோயாளிகள் இவற்றுக்குள் ஒதுக்கப்பட்டால், புது நோயாளிகள் தோன்ற மாட்டார்கள். பெரிய பெரிய நகரங்களுக்கு அருகில் இருபதடிக்குப் பத்தடி வாசஸ்தலங்கள் ரூபாய் 300-க்கு அமைத்துத் தந்தால் ஜன நெருக்கடியால் நோய் வித்தை ஏற்கும் லட்சக் கணக்கான மக்கள் சுகமாக வாழலாம்! நோய் கொண்டவர் கிராம வாசத்துக்கு ஒதுக்கப்படுவது என்பது சமூகக்கடமை. அரசாங்கத்துக்குப் பண வசதி அதிகமாக ஆக, தனவந்தர்கள் தானதர்மம் இதற்காகச் செய்யச் செய்ய, கீற்று மண் சுவர் வாசஸ்தலங்களைப் பிறகு கெட்டியான காரை மாடங்களாக மாற்றிக் கொள்ளலாம்.

தேசத்துக்குத் தேசம், மாந்தருக்கு மாந்தர் டி. பி. கிருமியால் தாக்கப்படும் தன்மை மாறுபாடடைகிறது. டி. பி. தாக்குவது, ஊன்றிக் கொள்ளுவது, அதிகரிப்பது என்பவை ஒவ்வொரு உடலின் சக்தியைப் பொறுத்தது. நம் உடலில் நோய் தடுக்கும்,—நோயைக் கொல்லும் மறுப்புச் சக்தி உள்ளது என்றேன். ஆரோக்கிய நிலை உயர்ந்திருந்தால் இந்த மறுப்புச் சக்தியும் உயர்ந்து விடுகின்றது. பலஹீனம் உடலில் ஏற்பட்டால், மறுப்புச் சக்தியும் குன்றி

விடுகிறது. இம் மறுப்புச் சக்தியை இயற்கை முறையில், யோக முறையில், ஒழுக்க முறையில் வளர்ப்பதே டி. பி. யைத் தடுக்கும் ஒப்பற்ற முறை.

ஆரோக்கியமும், மறுப்புச் சக்தியும் ஒன்றை ஒன்று தழுவி நிற்கின்றன. இவை தாக்கப்படும் காரணங்களில், வாசஸ்தலத்தைக் கவனித்தோம். உணவின் தரம், பழக்க வழக்கங்கள் இதர விஷக் கிருமிகள் உடலில் நுழைவது சஞ்சரிப்பது முதலியவற்றை ஆராய வேண்டும். மறுப்புச் சக்தி பொக்கிஷம் உள்ளவன் இப் பொக்கிஷத்தைச் சீராக அமைந்த வாழ்க்கைத் திட்டத்தால் காப்பாற்ற வேண்டும்.

ஒரு குடும்பத்துக்குண்டான வருமானத்தில் பல தேவைகள் பூர்த்தியாக வேண்டியுள்ளன. இட வசதி சுகாதார ரீதியாக அமைய வேண்டுமென்று குறிப்பிட்டேன். இந்த வசதிக்காகக் குடும்ப வருமானம் செலவிடப்படுகிறது. பெரிய நகரவாசமானால் சிறிய வசதிக்கு வருமானத்தின் பெரிய பங்கு செலவழிக்க வேண்டி இருக்கிறது. குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் குறிப்பிட்ட சிறிய அளவேனும் உணவுப் பொருள் கிடைத்தாக வேண்டும். இதற்கும் குறைவாக உணவுத் திட்டம் அமைந்தால், உடலுறுதி குன்றி அதன் காரணமாக நோய்க்கு மறுப்புச் சக்தி குறைந்து விடும். அதனால் டி. பி. தொத்திக் கொள்வதற்கும், தொத்திய டி. பி. வளர்வதற்கும் சமயம் ஏற்பட்டு விடும். 'வருமானத்தின் முதல் நோக்கம் உணவுக்கா, இடத்துக்கா?' என்ற கேள்வி உண்டாகிறது.

இடத்துக்கும், உணவுக்கும் போட்டி உண்டானால் என் திட்டப்படி உணவு தான் முதல் சலுகை பெறவேண்டும். இந்த அபிப்பிராயம் பல டி. பி. நிபுண விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக்கும் ஏற்றதாக இருக்கிறது. தரம் உயர்ந்த உணவால் உடலின் வீரியமும், மறுப்புச் சக்தியும் அதிகரிக்கிறது. இதனால் இட வசதிக் கோளாறின் தீங்கையும் ஓரளவு சரி செய்ய முடியும். இரண்டிற்கும் போதுமான செலவுச் சலுகைக்கு, வருமானத்தில் இடமிருந்தால் மெத்த நன்மை. இல்லையேல் உணவுதான் முதல் கவனிப்பை அடைய வேண்டும். தரம் உயர்ந்த உணவின்மையால் டி. பி. தாக்கும் அபாயம் அதிகரிக்கின்றது. டி. பி. நோய்க்குத் தரப்படும் யோக சிகிச்சையில் உணவின் தன்மையும் மிக முக்கிய பங்கை ஏற்கிறது.

இந்த உணவுத் திட்டத்தைத் தற்கால மருத்துவ அமைப்பில் யார் வகுத்துத் தரவேண்டியது? இந்த முக்கியமான அம்சம் சரியானபடி கவனிக்கப்படுகிறதா? என்ன அம்சங்களை மருத்துவர் அறிந்து அளிக்க வேண்டும் என்பவை எல்லாம் கவனிக்க வேண்டிய விஷயம்.

பொது மக்கள் அறிவைப் பெருக்கி விழித்துக் கொள்ளச் செய்வதைப் போன்ற முன்னேற்ற மார்க்கம் வேறொன்று மில்லை. அவரவர் ஆரோக்கியத்தை அவரவர் கையிலேயே அமைத்துக் கொடுக்கவும், அவரவர் சிகிச்சை அவரவர் கையிலேயே இருக்கவும்தான் நான் முயன்று வருகிறேன்.

இந்த உணவுச் சீர்திருத்தத்தில் நாக்குக்கும் புலனுக்கும் அடிமையாகி விடக் கூடாது. எது சத்து, எம்முறை சத்தைக் கூட்டும், எவ்வாறு முயன்றால் உள்ள வருமானத்தைத் தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் வீர்யம், மறுப்புச் சக்தியை உயர்த்த உபயோகப்படுத்தலாம் என்பவை இன்றியமையாதவை.

முயன்றால் உய்வோம்! புலனைத் திருத்தி முற்பட்டால் சுகத்தில் வாழ்வோம்! மனமும் புலனும் நம் சுகத்துக்கென ஏற்பட்டவையா? அல்லது நாம் இவற்றுக்கு அடிமையாகி இரையாக ஏற்பட்டோமா? செயல், மனத்திடம் இரண்டுமே மேலே கண்ட கேள்விகளுக்குப் பதிலாகும். (தொடரும்)

# ஒவ்வொரு மைலிலும் செலவை மிச்சமாக்குக

நகரத்திலும் சரி, கரடுமுரடான கிராம ரஸ்தாக்களிலும் சரி, எத்தகைய பளுவையும் ஏற்றிக் கொண்டு ஸென்–ராலே சைகிள்கள் உங்களுக்கு நீண்ட காலம் உழைத்து, செப்பனிடும் செலவையும் குறைத்து, ஒவ்வொரு மைல் ஓட்டத் திலும் மதிப்பு வாய்ந்த அளவிற்கு செலவை மிச்சமாக்குகின்றன.



## ராலே ராபின்ஹூட்












# தமிழ் கூறும் நல்லுலகம்

## மாதுங்கா, தமிழர் மன்றம்

பாட்டுக்கொரு புலவன் பாரதியின் நினைவு நாளை 11—9—56 அன்று நப்பூ ஹாலில் தமிழர் மன்றம் கொண்டாடியது. மன்றத் தலைவர் திரு சி. வி. சுப்பிரமணியம் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.

'பாரதி கண்ட பெண்மை'யைப் பற்றித் திருமதி லட்சுமி மணியும், 'பாரதியின் கண்ண'னைப் பற்றித் திருமதி கௌசல்யா நாராயணனும் பேசினார்கள்.

விழாவில் திரளாகப் பெண்மணிகளும் ஆண்களும் வந்து கலந்து கொண்டு மகிழ்ந்தனர்.

## தாராவி தாழ்த்தப்பட்டோர் லீக்

பம்பாய் தாழ்த்தப்பட்டோர் லீக் தாராவிக் கிளையின் சார்பாக, கவிதைக்கடல் சி. சுப்பிரமண்ய பாரதியாரின் விழா செப்டம்பர் 13-ந் தேதி சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ காசிநாதன் குழுவினரின் பாரதிப் பண்களுடன் விழாத் தொடங்கியது.

விழாவுக்குத் தாராவி தாலூகா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எம். வி. துரைசாமி தலைமை வகித்தார்.

பாரதி படத்தை ஸ்ரீ மு. ரா. ஆறுமுகம் திறந்து வைத்தார்.

பாரதியார் கண்ட லட்சிய நாட்டைப் பற்றி ஸ்ரீமான்கள் வி. எஸ். ராஜ், மே. அ. நடராஜன், என். எஸ். கணபதி, ந. கார்த்திகை ரத்னம், எஸ். ராஜ், நெல்லை செல்லையா, ந. சிவபாண்டியன் ஆகியவர்கள் பேசினார்கள். துணைச் செயலாளர் ஸ்ரீ என். எம். ஆறுமுகம் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.

## குந்தக்கல் தமிழ்ச் சங்கம்

ஆந்திர நாட்டில் இருந்து ஆறு ஆண்டுகளாக அருந் தமிழ்ப் பணியாற்றி வரும் குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவும் மகாகவி பாரதி விழாவும் செப்டம்பர் 15—ந் தேதியன்று ஸ்ரீ எஸ். கணேசன் பி. இ. தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டன. சென்னை திரு இரா. சுராஜ், திரு பி. எஸ். நாராயணன், இப்ராஹிம், சுப்பிரமணியன் ஆகியோர் பாரதியின் பெருமையைப் பற்றிப் பேசினர். குமாரி கிரிஜா, விஜயா, சந்திரப் பிரபா, வசுமதி, ரத்னு ஆகியோரின் நடனங்களும், அங்கத்தினர்கள் நடித்த "அவர்கள் அன்பு" என்ற நாடகமும் விழாவைச் சிறப்பித்தன.

## ராஜகோட் பாரதி சங்கம்

செப்டம்பர் 11-ம் தேதி யன்று மகாகவி பாரதியின் திருவிழா பாரதி சங்கத்தின் சார்பில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அதையொட்டிக் கல்யாண மந்திரில் நடைபெற்ற பாரதி பாட்டுப் போட்டியில் பதினொரு நண்பர்கள் கலந்துகொண்டனர்.

பாரதி சங்கத்தின் தோற்றத்துக்கும், வளர்ச்சிக்கும் பெரிதும் காரணமாயிருந்தவரும், அதன் தற்போதைய தலைவருமான திரு ராமச்சந்திரன், வேலை உயர்வு காரணமாகக் கல்கத்தாவுக்குச் செல்வதால், சங்கத்தின் சார்பில் செப்டம்பர் 14-ந் தேதி அவருக்குப் பிரிவுபசார விருந்தொன்று அளிக்கப்பட்டது.

பாரதி விழாவை யொட்டி, 16—9—56 ஞாயிறன்று, திரு பத்மநாபன் அவர்கள் தலைமையில் சங்கீதம், நாடகம் முதலியவை விமரிசையாக நடைபெற்றன. அன்று தீர்க்க தரிசி பாரதியின் திருவுருவப் படமும் திறந்து வைக்கப்பட்டது.

## ஆலந்தலை பாரதி சமாஜம்

இலங்கை ஜனநாயகக் காங்கிரஸ் மண்டபத்தில், செப்டம்பர் 23-ந் தேதி புனித பெனடிக்ட் கல்லூரி ஆசிரியர் திரு எஸ். செபஸ்டியன் சில்வேயிர பி. ஏ. அவர்களது தலைமையில் ஆலந்தலை பாரதி சமாஜத்தினர் பாரதி விழாவை வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

அவ்வமயம், சுதந்திரன் உதவி ஆசிரியர் திரு பிரேம்ஜி, தேசாபிமானி ஆசிரியர் திரு எச். எம். பி. மொஹிதின், தினகரன் உதவி ஆசிரியர் இளங்கீரன், அன்புமார்க்கச் சங்கத் தலைவர் அன்பர் பூபதிதாஸர், திரு ஏ. எம். ஜே. தாஸ், திரு அசரியாஸ் பர்னாந்து ஆகியோர் பாரதியின் வாழ்க்கை, கவிதை, தொண்டு, சிறப்பு இவைகளைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

கூட்ட ஆரம்பத்திலும் முடிவிலும் ஆலந்தலை நகர் பி. ஒ. லடிஸ், தாசன் கோஷ்டியினர் பாரதியின் பாடல்களைப் பாடினார்கள். காரிய தரிசியின் நன்றியுரையுடன் விழா இனிது முடிவு பெற்றது.

## டெல்கோ தமிழ்ச் சங்கம்

செப்டம்பர் 14ந் தேதி முதல் 17ந் தேதி வரையில் ஜாம்ஷெட்பூரில் பாரதி விழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. சங்க உபதலைவர் ஸ்ரீ டி. எஸ். வி. கிருஷ்ணன் தலைமையில் நடந்த இவ் விழாவில் பாரதியாரின் பேத்தி திருமதி பானுமதி கிருஷ்ணஸ்வாமி, அன்பர்கள் கோபாலகிருஷ்ணன், வெங்கடசுப்பிரமணியன் ஆகியோர் பாரதியைப் பற்றிப் பேசினர். ஸ்ரீமதிகள் நீலா கோபாலகிருஷ்ணன், சங்கரி கிருஷ்ணமூர்த்தி, ஜானகிஜயராம், விசாலம் வெங்கடராமன் ஆகியோர் இன்னிசை விருந்தளித்தனர். கடைசி தினத்தில், திருவிசை நல்லூர் ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்கள் பாரதி பாடல்கள் பலவற்றுடன் அருமையான கச்சேரி செய்து விழாவைச் சிறப்பித்தார்.

தட்சிணாமூர்த்தி சன்னிதியில் உட்கார்ந்து காமாட்சியம்மாள் ஜபம் செய்துகொண்டிருந்தாள்.

'' என்ன காமாட்சியம்மா! ஆயுசில் ஒரு தடவையாவது காசிக்குப் போகணும்; கங்கையில் ஸ்நானம் செய்யணும் என்று சொல்லுவீர்களே! இப்பொழுது வருகிறீர்களா? ஒரு பெரிய கூட்டம் போகிறது. வீட்டு வாசலிலிருந்து நல்ல துணை. எல்லா இடமும் நன்றாகச் சுட்டிக் காட்டுவார்கள். ஆடி அமாவாசை யன்று காசியில் கங்கா ஸ்நானம் ஆகிற மாதிரி ஏற்பாடு. செலவும் நாம் தனியாகப் போனால் ஆவதைவிடக் குறைவுதானாம்'' என்று மீனாட்சிப் பாட்டி கூறியதும் தெய்வமே எதிரில் வந்து தன்னைக் காசிக்கு அழைப்பதாகப் பூரித்துப் போனாள் காமாட்சியம்மாள்.

'' நீங்கள் போகிறீர்களா? என்ன செலவாகும்? காசிக்கு மட்டுமா? இன்னும் எங்கேயாவது போகிற உத்தேசமா?'' என்று காமாட்சி ஆவலுடன் விசாரித்தாள், மகிழ்ச்சியால் நாத்தழுதழுக்க.

'' நீங்கள் கேட்பது அழகுதான். ஜன்மத்தில் ஒரு தடவை அவ்வளவு தூரம் போகிறோம். ' காசிக்குப் போனேன்; காவடி கொணர்ந்தேன்' என்று திரும்பி வந்தால் என்ன மகிமை உண்டு? ஹரித்வாரம், ரிஷிகேசம், பிரயாகை இன்னும் இருபது முப்பது ஊர்களில் சுவாமி தரிசனத்துக்கும், ஸ்நானத்துக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நமக்கு ஒரு தொல்லை இருக்காதாம். இடம் கூட அதிகமாக இல்லை என்றார்கள். உங்கள் பிள்ளையிடம் சொல்லிச் சீக்கிரமே உங்கள் பெயரையும் கொடுக்கச் சொல்லுங்கள். முந்நூறு ரூபாய் இருந்தால் போதும். நீங்கள் வந்தால் எனக்கும் துணையாக இருக்கும்!'' என்றாள் மீனாட்சிப் பாட்டி.

காமாட்சி ஜபத்தை முடித்துக் கொண்டு எழுந்து விட்டாள். அவள் மனம் சந்தோஷத்தால் நிலை கொள்ளாமல் தவித்தது. முந்நூறு ரூபாய்க்குள் காசி யாத்திரை! பல புண்ணிய ஸ்தலங்களைத் தரிசிக்கும் பாக்கியமும் கூட. 'பகவானே! விசுவேசுவரா! என் பிரார்த்தனையை அங்கீகரித்து விட்டாயா!' என்று மனமுருக ஈசனை வணங்கினாள்.



# கொடுத்து வைத்தவள்

ஆர். எஸ். ஞானம்பாள்

மீனாட்சிப் பாட்டியிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வீட்டை நோக்கி நடந்தாள்.

என் மருமகள் கமலா, சர்வாலங்காரத் துடன் வெளியே கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தாள். ''கமலா! சந்துரு ஆபீஸி லிருந்து வந்து விட்டானா? விசேஷ ரயில் ஒன்று இந்த ஊரிலிருந்து காசிக்குப் போகிற தாம். செலவுகூட ரொம்ப இல்லையாம். மூந் நூறு ரூபாய் போதும் என்கிறார்கள். நானும் போகலாம் என்று பார்க்கிறேன்'' என்றாள் காமாட்சியம்மாள்.

'' ஆகா! தாராளமாகப் போங்கள். நான் குறுக்கே நிற்க வில்லை. உங்கள் பேத்தி வைத்தியக் கல்லூரியில் சேர ஒற்றைக் காலில் நிற்கிறாள். உங்கள் பேரனுக்கு இன்ஜினியரிங் கல்லூரியில் இடம் கிடைத்து விட்டது. என் அண்ணா பெண்ணின் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. அத்தைச் சீருக்கு ஒரு ஆயிரம் ரூபாயாவது இருந்தால் தான் மரியாதை யாகக் கல்யாணத்துக்குப் போய் விட்டுத் திரும்பலாம். உங்கள் பங்குக்கு நீங்களும் காசி யாத்திரை போகணும் என்று குதியுங்கள். இவ்வளவுக்கும் உங்கள் பிள்ளை பணத்தை எங்கே மூட்டை கட்டி வைத்துக் கொண்டிருக் கிறாரோ?'' என்று கமலா நொடித்தாள்.

காமாட்சியின் முகம் கன்றி விட்டது. எதிர்பார்த்த பதில்தான் என்றாலும் 'ஆசை வெட்கமறியாது' என்றபடி கேட்டுவிட்டாள். '' சரி! நான் ஆர். எஸ். புரம் வரைக்கும் போய் விட்டு வருகிறேன். பத்மாவைப் பார்த்து நாளாயிற்று'' என்றாள் காமாட்சி.

இச்சமயத்தில் டெலிபோன் மணி அடிக் கவே கமலா அதன் அருகே போய்ப் பேசி விட்டுத் திரும்பினாள்.

''உங்கள் பிள்ளை எட்டு மணிக்கு நாலு சிநேகிதர்களைச் சாப்பிட அழைத்திருக்கிறா ராம். நல்ல சமைய லுக்கு ஏற்பாடு செய் யச் சொல்லுகிறார். சமையல்கார னிடம் சொல்லி விட்டுப் போகிறேன். பக்கத் திலிருந்து நீங்கள் கவனித்துக் கொள் ளுங்கள். நான்மாதர் சங்கத்துக்குப் போய் விட்டு அநேகமாக ஒரு மணி நேரத்தில் வந்து விடுவேன். நான் வந்த பிறகு நீங்கள் பத்மாவைப் பார்க்கப் போனால் போதும்'' என்று கைக் கடிகாரத் தைப் பார்த்துக் கொண்டே பேசிவிட் டுப் போய்க் காரில் ஏறிக் கொண்டாள். கார் பறந்தது.

காமாட்சி நின்ற இடத்தை விட்டு அசையவே இல்லை. சமையல்காரன் குரல் தான் அவளை நினைவு உலகத்துக்கு இழுத்துக் கொண்டு வந்து நிறுத்தியது: '' பத்மாவைப் பார்க்கப் போகவில்லையா, அம்மா?''

இதைக் கேட்டதும் காமாட்சிக்குத் தன் பெண் பத்மாவின் ஞாபகம் வந்து விட்டது. உடனே அவளைப் பார்க்கக் கிளம்பிவிட்டாள். பஸ்ஸ்டாப்பிலிருந்து வியர்வை ஆறாய்ப்பெருக மகள் வீட்டையடைந்த காமாட்சி பெரு மூச்சு விட்டுக்கொண்டே உட்கார்ந்தாள்.

'' அம்மா! இப்படி பஸ்ஸில் வந்து, நடந்து வந்து என் மானத்தை வாங்காதே என்று எத்தனை தடவைகள் படித்துப் படித்துச் சொன்னாலும் உனக்குத் தெரிவதே இல்லை. நீ இப்படி வந்து விட்டுப் போனதும் 'இந்தக் கிழவி யார்?' என்று கேட்கிறவர்களுக்குப் பதில் சொல்லவே முடிய வில்லை, போ!'' என்று அலுத்துக் கொண்டாள் பெண்ணரசி.

'' அது கிடக்கட்டும். நான் காசிக்குப் போகலாம் என்று பார்க்கிறேன். ஒரு மூந் நூறு ரூபாயாவது வேணும். கையில் பணமே இல்லாமல் சந்துரு திண்டாடுகிறான் என் கிறாள் கமலா. நீ எப்படியாவது மாப்பிள்ளை யிடம் சொல்லி வாங்கிக் கொடு. நானே வேண்டுமானாலும் கேட்கிறேன்....'' என்று கெஞ்சும் குரலில் கேட்டாள் காமாட்சி.

'' அம்மா! அம்மா! ஏன் அம்மா! பிள்ளை கள் இரண்டு பேர் பிடிப்பிடியாகச் சம் பாதிக்கிறார்கள். பங்களாவும் காரும் வைத் துக் கொண்டு அமோகமாக வாழ்கிறார்கள். இந்த நிலையில் நீ மாப்பிள்ளையிடம் பணம் கேட்பதென்றால் எத்தனை குறைவு? என் புக்ககத்து மனிதர்கள் காதில் கேட்டால் அவர்கள் என்ன நினைப்பார்கள்?''

காமாட்சியம்மாளுக்கு உடல் முழுதும் நடுங்கிற்று. தலைப்பை இழுத்து நன்றாகப் போர்த்திக் கொண்டாள்.



"அம்மா, கமலா மன்னி சொல்வதைப் போல, உனக்கோ வயதாச்சு. தள்ளாத காலத்தில் காசி என்றும், ராமேசுவரம் என்றும் போய்க் கீழே மேலே விழுந்து வைத்தால் உனக்கும் கஷ்டம், இருக்கிறவர்களுக்கும் தொல்லை. போட்டதைச் சாப்பிட்டுக் கொண்டு கிருஷ்ணா ராமா என்று 'ஹாய்'யாக இருக்கக் கூடாதா, அம்மா?" என்று மிக உருக்கமாகப் பேசினாள் பத்மா.

"ஹலோ! பத்மி! நேரமாகவில்லையா விருந்துக்கு? யார் இது. உங்கம்மாவா? சரி, நளினிக்குப் 'பிறந்த நாள் பரிசு' என்ன தரப் போகிறாய்? நான் இந்த மோதிரத்தைப் பொறுக்கினேன். பார், அழகாக இல்லை?" என்று கலகலவென்று பேசியபடி வந்து நின்ற சிநேகிதியை வரவேற்க எழுந்தாள் பத்மா.

"இதோ, நான் தயார் ஸரோ! நளினிக்கு என் பரிசு பார். தந்த 'டாய்லெட் பெட்டி'. தங்கப் பூ வேலை பிரமாதமாயிருக்கும். இருநூறு ரூபாயும் சில்லறையும்தான் ஆகிறது. நளினி உயிர்த் தோழி. அவளுக்காக நான் இதுகூடச் செய்ய வேண்டாமா? சரி, புறப்படு ஸரோ!" என்றாள் பத்மா.

பத்மா அம்மாவையும் மறக்கவில்லை. "உள்ளே போய்ச் சாப்பிட்டு விட்டுப் போ, அம்மா. பசியோடு போய் வழியில் எங்கேயாவது மயங்கி விழப் போகிறாய்! சந்துரு என்னைத்தான் கோபித்துக் கொள்வான்" என்று சொல்லிவிட்டுச் சென்றாள்.

காமாட்சிக்கு நெஞ்சை அடைத்தது. சமையல்காரி எவ்வளவோ மன்றாடியும் ஒரு டம்ளர் தண்ணீர் கூடக் குடிக்காமலேயே அங்கிருந்து புறப்பட்டு விட்டாள்.

ஹூம்! அவள் தலையெழுத்துக்கு யாரைக் குற்றம் சொல்வது? கணவரைக் குறைகூறவே அவள் விரும்பவில்லை. பிள்ளைகள் இருவரையும் நன்றாகப் படிக்க வைத்து வேலையில் அமர்த்தினார். பெண்ணை அருமையும் பெருமையுமாக வளர்த்து அந்தஸ்துள்ள இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்தார். அவளை மட்டும் நடுத் தெருவிலா விட்டு விட்டுப் போனார்? ஐயாயிரம் ரூபாய் ரொக்கத்தை அவளுடையது என்று வைத்து விட்டுத்தான் போனார். அவளுக்குப் பிழைக்கத் தெரியாவிட்டால் மற்றவர்களை நொந்து பயன்...?

பெரிய குடும்பத்தில் ஏழெட்டுப் பேருடன் பிறந்த காமாட்சிக்குச் சின்னஞ் சிறு வயதிலிருந்தே தன்னுடையது என்று எதையும் பூட்டி வைத்துக் கொள்ளத் தெரியாது; பிடிக்காது. புக்ககத்திலும் மாமியார் மாமனாரே வெகு காலம் வரை வீட்டுப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்தனர். குழந்தை போல் கவலையற்று வளைய வரும் காமாட்சிக்கு, கணவர் அவளுக்கென்று வைத்துப் போன ஐயாயிரத்தையும் ஐந்து மாதங்கள்கூடக் காப்பாற்றி வைத்துக்கொள்ளத் தெரியவில்லை.

'இந்த நிமிஷம் இரண்டாயிரம் ரூபாய்க்கு வைரத் தோடு வாங்கிப் போட்டுக் கொண்டு வந்தால் வீட்டில் இருக்கலாம்; இல்லாவிட்டால் பிறந்த வீட்டிலேயே இரு' என்று மாமியார் துரத்தி விட்டாள் என்று கண்ணைப் பிசைந்து கொண்டு வந்து நிற்கும் பெண்ணைக் காணப் பெற்ற மனம் சகிக்குமா?

காமாட்சி யாரையும் யோசனை கேட்கவில்லை. பத்மா மறுநாள் வைரத் தோடும், புதுப் புடவையுமாகப் புக்ககம் போய்ச் சேர்ந்தாள். இப்பொழுது அவளே எஜமானி; மாப்பிள்ளை கீறின கோட்டைத் தாண்டுவதில்லை.

காமாட்சி பெருமூச்சு விட்டுக் கொண்டே நடக்க ஆரம்பித்தாள்.

மாப்பிள்ளை மட்டுமா மனைவியின் பேச்சை மீறுவதில்லை? பிள்ளை சந்துருவும்தான். அவள் பெற்ற பிள்ளைதான் என்றாலும் சந்துருவைப் பற்றி நினைக்கவே அவள் மனம் கசந்தது.

"அம்மா! அம்மா! ஆபீஸ் பணத்தில் மூவாயிரம் ரூபாய் உதைக்கிறது. இன்னும் பத்து மணி நேரத்தில் கணக்கைச் சரிக்கட்டாவிட்டால் போலீஸில் பிடித்துக் கொடுத்து விடுவேன் என்கிறார் முதலாளி. என்னம்மா செய்வேன்?" என்று கதறினான்.

காமாட்சி கண்டாளா, அத்தனையும் நடிப்பென்று? பெரிய பிள்ளை ராமு வந்து சண்டை போட்ட பின்தானே தெரிந்தது! 'இப்படியும் ஏமாந்து போவார்களா? உன்னிடமிருந்து பணத்தைப் பிடுங்கி மாமனாருக் கல்லவா கொடுத்திருக்கிறான்? கேட்டு வாங்கு" என்று நிலத்தில் விழுந்த நெல்லிக்காயாகக் குதித்தான் ராமு.

"சரிதான் போடா! என்னவோ அழுதான். கொடுத்தேன்" என்று அலட்சியமாக ஒதுக்கி விட்டாள் காமாட்சி, ஏமாந்ததாகக் காட்டிக் கொள்ளாமல். ராமுவுக்குக் கோபம் பொங்கிற்று. "உனக்கு என்றைக்கும் என்னைக் கண்டால் ஆகாது. ஓர வஞ்சனைக்காரி. பெண்ணுக்கும் சின்னப் பிள்ளைக்

# இதன் இனிமையான மணம் உங்களை மகிழ்விக்கும்.

காஸ்டரோமா கூந்தல் தைலம் பிரான்ஸ் தேசத்திலுள்ள வாசனை மிக்க புஷ்பங்களிலிருந்து தயார் செய்யப்படுகிறது. இம் மாதிரி வாசனை மிக்க தைலம் இது நாள் வரை நீங்கள் உபயோகம் செய்திருக்கமாட்டீர்கள். தினமும் காஸ்டரோமா உபயோகிப்பதால் நீளமாக கேச வளர்ச்சி ஏற்படுவதுடன், கேசத்திற்கு புது வாழ்வும் கிடைக்கிறது. கண்ணுக்கும் குளிர்ச்சி தருகிறது.

கருமையானதும், அழகானதும், நீளமானதுமான கேசத்திற்கு

# காஸ்டரோமா

வாசனை தைலம்





ஸ்டாண்டர்ட் சைஸ் பாட்டில் ரூ 1/10

பெரிய சைஸ் பாட்டில் ரூ 3/12

(உள் நாட்டு வரிகள் தனி)

**போஸில்**
தபால் பெட்டி நிர். 1611,
பம்பாய்-1.




5 தோலா பிடிக்கும்படியான காஸ்டரோமா பாட்டில் இனாமாக கிடைக்க, எட்டு அரை தபால் தலைகளுடன், உங்கள் பெயர், விலாஸத்தை இந்த டோக்கனுடன் சேர்த்து போஸில் தபால் பெட்டி 1611, பம்பாய்-1க்கு அனுப்பவும்.

TALBOC

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

மெஸர்ஸ் கெனடக்ஸ், அவினாசி ரோடு, கோயமுத்தூர்
மெஸர்ஸ் டேவிட் & கம்பெனி, (பிரைவேட்) லிமிடெட்
310/311, லிங்கி செட்டித் தெரு, சென்னை

கும் பணத்தை எடுத்துக் கொடுத்தாயே. நானும் உன் வயிற்றில்தான் பிறந்தேன் என்ற எண்ணம் இருந்தால் இப்படி மோசம் செய்வாயடா?'' என்று ஆத்திரப்பட்டான். அதிலிருந்து அவளைக் காணவே அவனுக்கும் பிடிப்பதில்லை. ''உன் வயிற்றில் பிறந்த தோஷத்துக்கு மூப்பதோ நாற்பதோ வேண்டுமானாலும் அழுது விடுகிறேன். உனக்குச் சந்துருவும் சின்ன மருமகளும்தான் உயர்த்தி. நீ அங்கேயே இருந்து கொள்'' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான். அவன் என்ன சொன்னாலும் காமாட்சி பாராட்டுவதில்லை. மாதத்தில் ஒரு தடவை, இரண்டு தடவைகள் போய் மருமகளையும், பேரக் குழந்தைகளையும் பார்த்து விட்டுத்தான் வருவாள்.

எண்ணப் போக்கில் கால்வலிகூடத் தெரியாமல் ஐந்து மைல் நடந்துவிட்ட காமாட்சி பேரூர் கோபுரம் கண்ணில் பட்டதும் கன்னத்தில் போட்டுக் கொண்டு வணங்கினாள். கோவிலையடுத்த சன்னிதித் தெருவில் பெரிய மாளிகை போல் இருப்பது ராமுவின் வீடு.

ராமுவிடம் எப்படியாவது கெஞ்சிப் பணத்தை வாங்கிக் கொண்டு காசிக்குப் போய் விட்டால், திரும்பி வரும் எண்ணம் அவளுக்கு இல்லை. அதற்காக ராமு அடித்தாலும் வைதாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராகவே அவள் சென்றாள். ஆனால் வாசலில் தொங்கிய பூட்டு அவளைக் கேலி செய்து சிரிப்பதுபோல் பளபளத்தது.

''ஐயாவைத் தேடறீங்களா அம்மா? நேற்றுத்தான் குடும்பத்தோடு நீலகிரிக்குப் போனாரு'' என்று பக்கத்துக் கடைக்காரன் கூறியதைக்கூடக் காமாட்சி காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவள் விடு விடென்று வந்த வழியே திரும்பினாள்.

சாமான்களை உள்ளே எடுத்துப் போடுவதும் மூட்டைகள் கட்டுவதுமாக வீடு இமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. கமலா எல்லோரையும் அதட்டி அதிகாரம் செய்து வேலை வாங்கிக் கொண்டிருந்தாள். அவர்களது பரபரப்பிலிருந்து எங்கேயோ ஊருக்குப் புறப்படுவது போல் தெரிந்தது.

''வந்து விட்டீர்களா? ஒரு வேளை அங்கேயே இருந்து விடுகிறீர்களோ என்று நினைத்தேன். பத்மா எல்லாம் தயார் செய்து விட்டாளா? நாங்கள் எல்லோரும் காஷ்மீருக்குப் போகிறோம். வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி மாமியாரை வரவேற்றாள் கமலா.

''ஆமாம், அம்மா! சமையல்காரன் ஒரு மாசம் லீவு வாங்கிக் கொண்டு போய் விட்டான். தோட்டக்காரன் இருப்பான். ஏதாவது வேண்டுமானால் அவனிடம் சொல்; வாங்கித் தருவான். வீட்டைப் பார்த்துக் கொள். ஏதாவது முக்கியமான விஷயமாக இருந்தால் பக்கத்து வீட்டு அம்பியை விட்டுக் கடுதாசி எழுது'' என்றான் சந்துரு.

காமாட்சியம்மாள் காய்ச்சலாகப் படுத்து, விளையாட்டுப் போல் பதினைந்து நாட்களாகி விட்டன.

கஞ்சி காப்பி எதுவும் பிடிக்கவில்லை. மருந்தும் இறங்கவில்லை. எஜமானுக்குத் தகவல்



நாகபுரி, ரிடையர்டு புரொபஸர் ஸ்ரீ வி. ராகவாச்சாரி அவர்களது குமாரத்தி சௌபாக்யவதி சரோஜாவுக்கும் சிகந்திராபாத் ஸ்ரீ கே. ராகவாச்சாரி அவர்களது குமாரர், அட்வகேட் சிரஞ்சீவி கே. ஆர். நரசிம்மனுக்கும் சென்னையில் சென்ற 7-9-56 அன்று சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

---

கொடுத்து விடத்தான் துடித்தான் தோட்டக்காரன். நினைவு இருந்த வரையில் காமாட்சியம்மாள் அதை அனுமதிக்கவில்லை.

* * *

''அம்மா இத்தனை சீக்கிரம் நம்மை விட்டுப் போய் விடுவாள் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவே இல்லை. காசி யாத்திரை போக வேண்டும் என்றாளாம். காஷ்மீரிலிருந்து வந்ததும் அனுப்பலாம் என்றிருந்தேன். கொடுத்து வைக்கவில்லை...'' என்று சந்துரு கண்ணீர் உதிர்த்தான்.

''ஆமாம், அண்ணா! அம்மா பாவம், ரொம்ப ஆசைப்பட்டாள். இத்தனை சீக்கிரம் போய் விடுவாள் என்று நாம் கண்டோமா?'' மேலே பேச முடியாமல் தேம்பினான், தாயில்லாக் குழந்தையாகிவிட்ட பத்மா.

''அவருடைய ஆசையை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள் நாம். அவருடைய அஸ்தியையாவது கங்கையில் போட்டால் தான் அவர் ஆத்மா சாந்தியடையும்'' என்று கமலா கூறியதை ராமுவும் மறுக்காமல் ஒப்புக் கொண்டான்.

ஆடி அமாவாசை. காசியில், கங்கைக் கரையில், மீனாட்சிப் பாட்டி தன் சிநேகிதியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்:

''காமாட்சியம்மாளின் பாக்கியமே பாக்கியம். உத்தம புத்திரர்களைப் பெற்றாள். அம்மா காசியாத்திரை செய்ய ஆசைப்பட்டாள்; உயிருடன் போக முடியவில்லை என்று அஸ்தியை எடுத்துக் கொண்டு விமானத்தில் வந்து விட்டார்கள்! பிள்ளைகளும், மருமக்களும், பெண்ணும், மாப்பிள்ளையும், பேரக் குழந்தைகளும் புடைசூழ, ஆடி அமாவாசை தினத்தில் கங்கையில் ஐக்கியமாகக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா? காமாட்சிக்குப் பூர்வ ஜன்ம புண்ணியம் இருந்தது; இதெல்லாம் கிடைத்தது'' என்று மீனாட்சிப் பாட்டி வியப்புடன் கூறினாள்.

இன்றோடு எனக்கு அறுபது வயது பூர்த்தியாகி விட்டது. ஐம்பத்தைந்து வயதானவுடனேயே உத்தியோகத்திலிருந்து 'ரிடையர்' ஆகியிருக்க வேண்டும். கம்பெனி துரை மிக மிக நல்லவர். ஒவ்வொரு வருடமாக ஐந்து வருடங்கள் என் சேவையை நீடிக்க வைத்து விட்டார். அது நான் செய்த பாக்கியம் என்று சொல்ல வேண்டும். ஏனெனில் இது வரை யாரும் இம்மாதிரி அறுபது வயது வரை தொடர்ந்து உத்தியோகம் செய்ததில்லை.

அறுபது வயதுக்கு மேலும் உத்தியோகம் செய்ய ஆசைதான். ஆனால் தேகம்தான் ஒத்துழைக்க மறுக்கிறது. காலையில் கலகலவென்று இருக்கும் உடலும் உள்ளமும் நேரம் ஆக ஆகச் சோர்ந்து விடுகின்றன.

கம்பெனியில் வேலை பார்க்கும் சகாக்கள் எல்லோரும் வந்து என்




கையைக் குலுக்கினார்கள். மானேஜர் என் சேவையைப் பாராட்டி ஒரு பிரசங்கம் புரிந்தார். நாற்பது வருடங்கள் கம்பெனியோடு கம்பெனியாக ஒன்றிப் போயிருக்கிறேன். பெரிய பதவி வகிக்கும் மானேஜிங் டைரக்டரிலிருந்து ஆபீஸில் வேலை செய்யும் தோட்டி வரையில் எனக்கு எல்லோரையும் தெரியும். அவர்களிடமிருந்து விடைபெற்றுப் போவது என்பது எளிதான காரியமில்லைதான். சிலபேரிடம் கைகுலுக்கும் போது என் கண்களிலிருந்து கண்ணீர் வந்து விட்டது.

மாதா மாதம் 'பென்ஷன்' நாற்பத்தைந்து ரூபாய் என்று கணக்குப் போட்டுச் சொன்னார்கள். முந்நூறு ரூபாய் எங்கே? நாற்பத்தைந்து ரூபாய் எங்கே? வாழ்க்கை நடத்துவது கடினம்தான். பிராவிடண்ட் பணத்தில் கடனும், பென்ஷனைத் தள்ளிக் கொடுத்து அதன் மீது கடனும் வாங்காமல் இருந்திருந்தால் பென்ஷன் குறைந்தது நூறு ரூபாயாவது வந்திருக்கும். அதனால் பாதகமில்லை. நான் கடன் வாங்கியதெல்லாம் எதற்காக? என் கடமையைச் செய்வதற்குத்தானே? இந்த நாற்பத்தைந்து ரூபாய் பென்ஷன் என் ஒருவனுக்குப் போதாதா?

ஆபீஸ் கட்டடத்தை விட்டு வெளியே வந்தேன். கட்டடக் கடிகாரத்தில் 'டிங் டாங்' என்று மணி பத்து அடித்தது.

ஆகா! மணி பத்து அடிக்கும் போது என் உள்ளத்தில் அந்தக் காலத்தில் எவ்வளவு பரபரப்பு இருக்கும்? கடற்கரை மின்சார நிலையத்திலிருந்து பரக்கப் பரக்க ஓடி வந்து கொண்டிருப்பேன். வியர்வை வெள்ளமாகப் பெருகிச் சட்டை, கோட்டு எல்லாவற்றையும் நனைத்திருக்கும். உணவை உண்டிருந்த வயிறு கலங்கி வேதனை செய்யும். எதையாவது பொருட்படுத்துவேனா? கர்மவீரனைப்போல ஆபீஸை நோக்கி ஓடி வருவேன்... இனிமேல் அப்படி ஓடவேண்டாம்! நிதானமாகச் சாப்பிட்டு விட்டு ஓய்வெடுத்துக் கொள்ளலாம் அல்லவா? தேகத்துக்கு ஓய்விருந்தால் மட்டும் போதுமா? மனத்துக்கு ஓய்வு வேண்டாமா?

இந்த உலகத்தில் நான் இப்போது ஒருதனிக் கட்டை. என் உடலில் உயிர் இன்னும் எவ்வளவு காலம் ஒட்டிக் கொண்டிருக்கும் என்று யாரும் சொல்ல முடியாது.

மூன்று மாதங்களுக்கு முன்பே இருப்பதி சொல்லி விட்டான். "சுந்தரம்! நீங்கள் ஆபீஸில் ஓய்வு பெறும் வரை இங்கு இருப்பதைப் பற்றி எனக்கு ஆட்சேபனை இல்லை. இந்த வீட்டை உங்கள் வீடு என்றே நினைத்துக் கொள்ளலாம்."

இருப்பதி சொன்னதில் எவ்வளவோ உண்மை இருந்தது. அவன் யார்? நான் யார்? என்னிடம் அவனுக்கொரு நன்றியிருந்தது. கடந்த ஐந்து வருடங்களாக அவன் வீட்டில் நான் காலம் கழித்து வருகிறேன். இனி மேலும் தொடர்ந்து அங்கேயிருக்க முடியுமா?

மாதாமாதம் ஐம்பது ரூபாய் இருப்பதியிடம் கொடுத்து விடுவேன். காலையில் காப்பி, இரண்டு வேளை சாப்பாடு வேளா வேளைக்குக் கிடைத்துவிடும். எனக்கு ஒரு குறைவுமில்லாமல்தான் வாழ்க்கை இருந்தது. ஆனால் இன்று? நான் ஓய்வு பெற்று விட்டேன். எனக்கு என்று ஓர் இடம் எங்கு இருக்கிறது?

ஐந்து வருடங்களுக்கு முன் என் மனைவி இறந்து போனாள். எட்டுக் குழந்தைகளைச் சலிப்பில்லாமல் பெற்றவள் அவள். அவள் இறக்கும் போது நான்கு குழந்தைகள்தான் உயிருடன் இருந்தன. எல்லோரையும் கதறக் கதற விட்டு விட்டு அவள் இறந்து போனாள். அவள் உயிருடன் இருக்கும் போது மனைவியின் அருமையை நான் உணரவே இல்லை. இன்று இப்போது அவள் அருமை எனக்குத் தெரிகிறது. அவள் மட்டும் இருந்திருந்தால், 'எங்கே போய்க் காலங் கழிப்பது?' என்ற பிரச்னை என் உள்ளத்தில் தலையெடுக்குமா?

மனைவி என்ற ஸ்தானத்துக்கு மதிப்புக் கொடுக்காத துராத்மாவாக ஆகிவிட்டேன் நான். மக்களைப் பெறும் இயந்திரம் என்று அவளை நான் நினைத்தேனே தவிர, வாழ்க்கையில் சம பங்கு அவளுக்கும் உண்டு என்பதை மறந்தே போனேன்.

பூமா தேவிக்கு இருக்கும் பொறுமை அவளுக்கு இருந்தது. இல்லா விட்டால் அந்தப் புனிதவதி என்னுடன் வாழ்க்கை நடத்தியே இருக்க முடியாது. அவள் இறந்த பிறகு எனக்கு அவள் அருமை தெரிகிறது.

திருப்பதியிடமும் அவன் மனைவியிடமும் விடைபெற்றுக் கொண்டு வெளியேற வேண்டியதுதான் என்று தீர்மானம் செய்து விட்டேன். என் மூத்த பிள்ளை ரகுநாதன் திருச்சிராப்பள்ளியில் இருக்கிறான். நல்ல பிள்ளை. எஞ்சியிருக்கும் காலத்தை அவனுடன் கழிக்கலாம் என்ற நம்பிக்கை என்னுள்ளே வலுப் பெற்று விட்டது.

திருப்பதிக்கு ஒரு ஜரிகை வேஷ்டி, அவன் மனைவிக்குக் காஞ்சிபுரம் பட்டுப் புடவை, ரவிக்கைத் துண்டு ஆகியவற்றைக் கடையில் வாங்கிக் கொண்டேன். வெற்றிலை பாக்கோடு அவற்றைத் திருப்பதியிடம் நீட்டி, ''திருப்பதி! ஐந்து வருடங்கள் என்னை நீ காப்பாற்றியதற்கு உனக்கு எப்படி நன்றி சொல்வதென்றே தெரியவில்லை. . . .'' என்று சொல்லிக் கையிலிருந்த தட்டைத் திருப்பதியிடம் நீட்டினேன். அதற்கு மேல் என்னால் பேச முடிய வில்லை. கண்களில் கண்ணீர் விளிம்பு கட்டிற்று. தொண்டை எனக்கு அடைத்துக் கொண்டது.

திருப்பதி உணர்ச்சி வசப்பட்டுப் போனான். அவன் உதடுகள் துடிதுடித்தன. அவனாலும் பேச முடிய வில்லை. நடுங்கிய கைகளோடு தட்டைப் பெற்றுக் கொண்டான். திருப்பதியின் மனைவி என்னை வணங்கி எழுந்தாள். அவள் கண்கள்கூட அப்போது கலங்கியிருப்பதைக் கண்டேன். ஆகா! அன்புக்குத்தான் எவ்வளவு சக்தி! எனக்கும் திருப்பதிக்கும் என்ன சம்பந்தம்? உறவா? முறையா? அவனும் அவன் மனைவியும் என் பிரிவுக்காக ஏன் வருந்த வேண்டும்?

திருப்பதியின் மனைவிக்கு நீண்ட நாட்களாகக் குழந்தை இல்லை. அந்த வருத்தம் அவளுக்கு இருப்பது எனக்குத் தெரியும். அவள் வணங்கியபோது, ''அம்மா! உன் குறை நீங்க வேண்டும். நீயும் உன் வீடும் விளங்க உன் மடியில் ஒரு குழந்தை தவழவேண்டும்'' என்று உள்ள நிறைவோடு அவளை வாழ்த்தினேன்.

அன்றிரவு ரயில் ஏறியவுடன் ரகுநாதனின் ஞாபகம் என்னை வந்து பற்றிக் கொண்டது. ஆகா! அவனுக்காகத்தான் நான் எவ்வளவு கஷ்டங்கள் அனுபவித்திருக்கிறேன். குழந்தை முதலே அவன் வெகு பிடிவாதக்காரனாக இருந்தான். வயது ஆக ஆக அவன் பிடிவாதம் அதிகமாகிக் கொண்டு வந்தது. கல்லூரிப் படிப்பு முடிந்தவுடன் இன்ஜினியரிங் கல்லூரியில் சேரவேண்டும் என்று ஒரே காலில் தவமிருந்தான். இன்ஜினியரிங் படிப்பு என்றால் இலேசா? எவ்வளவு தியாகம் செய்து பணம் திரட்டியிருப்பேன். கேட்கக் கூடாதவர்களிடமெல்லாம் பணம் கேட்டு, காலில் விழாதவர்களிடமெல்லாம்




விழுந்து இன்ஜினியரிங் கல்லூரியில் சேர்த்து விட்டேன். படித்து விட்டால் மட்டும் போதுமா? உத்தியோகம் கிடைக்க வேண்டாமா? இன்ஜினியரிங் பட்டம் வாங்கி விட்டு ஒரு வருடம் தண்டச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்தான் ரகு.

ஒரு நாள் தினப் பத்திரிகையில் விளம்பரம் வந்திருந்தது. ''ரகு! பத்திரிகையைப் பார்த்தாயா? ஓர் மனு எழுதிப் போடுவது தானே!'' என்று சாதாரணமாகத்தான் கேட்டேன். அவனுக்கு எங்கிருந்துதான் அவ்வளவு கோபம் வந்ததோ? மொலு மொலு வென்று வாதம் செய்து என்னிடம் குஸ்தி




பிடிக்க வந்து விட்டான். பொறுமைக்கும் எல்லை இல்லையா? எனக்கும் கோபம் வந்து விட்டது. ''இம்மாதிரி தண்டமாக உட்கார்ந்திருப்பதை விடப் பிராணனை விட்டுவிடலாம்'' என்று ஆத்திரமாகக் கூறிவிட்டேன்.

ரகு அவமானத்தினால் குன்றிப்போய், ''உயிரைத்தானே விடச் சொல்கிறீர்கள். இப்போதே உங்கள் கண்முன் விட்டு விடுகிறேன்'' என்று கூறிக் கிணற்றடியை நோக்கி ஓடினான். அவனைக் கெஞ்சி உள்ளே அழைத்து வருவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது. அன்றிலிருந்து அவன் வம்புக்கு நான் போவதில்லை.

அந்தப் பிடிவாதக்கார ரகுநாதன் இன்று ஜூனியர் இன்ஜினியராக இருக்கிறான். திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டைக்கு அருகே வீடு. எட்டு வருஷங்களுக்கு முன்தான் அவனுக்குக் கல்யாணம் நடந்தது. பெண் அடக்கமாக இருக்கும் என்றுதான் முதலில் நான் நம்பியிருந்தேன். கல்யாணம் ஆன பிறகு என் மனைவியிடம் அவள் நான்கு நாட்கள் ஒழுங்காக இருந்ததை நான் அறியேன்.

'ஏழெட்டு வருஷங்கள் குடித்தனம் செய்த பிறகு பழைய குணங்கள் எல்லாம் மாறிப் போயிருக்கும்; என்னைப் பார்த்தவுடன் மரியாதையும் அன்பும் கலந்து வரும்' என்று எதிர்பார்த்தேன்.

ரயில் திருச்சிராப்பள்ளி ஜங்ஷனையடைந்தவுடன், திருச்சி எனக்கொரு சுவர்க்கமாகவே காட்சியளித்தது. என்னைப் பார்த்தவுடன் ரகுநாதனுக்கு அளப்பரிய சந்தோஷம். ''அப்பா, எப்போது அப்பா வந்தீர்கள்? ஒரு கடிதம் கூடப் போடவில்லையே!'' என்று உற்சாகத்தோடு என் கைகளைப் பிடித்துக் கொண்டான். 'ரகு, சௌக்கியமா?' என்று அவன் முதுகை வருடினேன். என் கண்களில் கண்ணீர் துளித்தது.

குழந்தை ராஜு என்னிடம் வந்து ஒட்டிக் கொண்டான். அவனைத் தோள்களில் சுமந்து கொண்டு பொழுதைப் போக்கலானேன்.

ரகுவின் மனைவி லக்ஷ்மி முதல் இரண்டு நாட்கள் என்னிடம் மரியாதையாகத்தான் இருந்தாள். காலா காலத்தில் எனக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து முடித்தாள். என்னால் அவளுக்கு அதிக சிரமம் இருக்கக் கூடாது என்று கூடிய வரை என் வேலைகளை நானே செய்து கொண்டேன். என் மருமகளின் குணம் மாறி விட்டது என்று உவகை யடையலானேன்.

மூன்றாம் நாள்தான் வந்தது மோசம். நான் அவன் வீட்டில் தொடர்ந்து இருக்கப் போகிறேன் என்பது அவளுக்குத் தெரிந்து விட்டது போலும்! என்றாவது தெரியத்தானே வேண்டும்? காலையில் காப்பி கொடுக்கும்போது காப்பி டம்ளரை 'நக்'கென்று என் எதிரில் வைத்தாள் லக்ஷ்மி. டம்ளரில் இருந்த காப்பி, வைத்த வேகத்தில் தளும்பித் தரையில் சிந்தியது. லக்ஷ்மிக்கு மனம் கசந்து விட்டது என்று எப்படியோ எனக்குத் தெரிந்து விட்டது. காப்பியைக் குடித்து விட்டு மெதுவாக நான் காவேரிக்குச் சென்று விட்டேன்.

காவேரிக்குச் செல்லும் வழி நீண்டுகொண்டிருந்தது. ஒரு நாள் இப்படித்தான் என் மனைவி காப்பி டம்ளரை நக்கென்று என் எதிரே வைத்தாள். அப்போது எனக்கு எவ்வளவு ஆத்திரம் வந்தது? சுடச்சுட இருந்த காப்பியை டம்ளரோடு எடுத்து அவள் முகத்தில் வீசி எறிந்தேன். டம்ளரின் விளிம்பு அவள் நெற்றியில் பட்டு அரை அங்குல ஆழத்துக்குக் காயம் உண்டு பண்ணி விட்டது. குபுகுபு வென்று அவள் நெற்றியிலிருந்து பாய்ந்து வந்த ரத்தத்தை நான் கொஞ்சம்கூடப் பொருட்படுத்தவில்லை. ஆத்திரத்துடன் வெளியில் சென்று விட்டேன். நான் அன்று அவள் நெற்றியில் ஏற்படுத்திய வடு கடைசி வரையில் மறையாதிருந்தது. இன்றுகாலை என் மருமகள் என் முன் காப்பி டம்ளரைக் கோபமாக வைத்தாள்....என்னால் என்ன செய்ய முடிந்தது? அருவியிலிருந்து நீர் வருவதைப் போல் என் கண்களில் கண்ணீர் பெருகியது.

'ஹோ' என்ற இரைச்சலுடன் பாலத்தின் கணவாய்கள் வழியாகக் காவேரி ஓடுகிறது. தொங்கும் நுரையும், சுழிப்புகளும், கொந்தளிப்புகளும் அதில் இருந்தன. என் மனத்தில் உள்ள உணர்ச்சிகளையும், வேதனைகளையும் பிரதிபலிப்பதைப் போலக் காவேரி அன்னை எனக்குத் தோற்றமளித்தாள். பெயருக்கு நீரில் முழுகி எழுந்தேனே யொழிய, என்றும் நிறைந்து நிற்கும் ஒரு வேகம் உடலிலும் இல்லை; உள்ளத்திலும் இல்லை.

சிந்தனைச் சுருள்களினால் தலை கனக்க வீடு வந்து சேர்ந்தேன். வீட்டுப்படி ஏறுவதற்கு முன்பே உள்ளிருந்து இரைச்சல் கேட்டது.







# 57 வருஷங்களாக பிரக்யாதி பெற்றது.

லோத்ராவில் எந்தவிதமான தீமை விளைவிக்கும் பொருள்களும் கிடையாது. ஆரோக்ய வாழ்வையும், ஆனந்தத்தையும் திரும்பப் பெற இதைவிட சிறந்த டானிக் ஒன்றுமில்லை. எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

கேசரி குடீராம் பிரைவேட் லிமிடெட்.
சாமப்பேட்டை, மதராஸ் - 14.






லோத்ரா
பெண்களுக்கே

தமிழ்நாட்டிற்கு ஏஜண்டுகள்: மெஸர்ஸ் சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், மேலக் கோபுர வீதி, மதுரை

என் அருமை மைந்தன் ரகுநாதனும் அவன் மனைவியும்தான் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். ரேழியில் நின்று கொண்டே அவர்களுடைய வாக்குவாதத்தைச் செவிமடுத்துக் கொண்டிருந்தேன்.

"இதோ பாருங்கள், என்னால் உங்கப்பாவுக்குச் செய்து கொண்டு இருக்க முடியாது. போன வாரம் என் பலஹீனத்தைப் பற்றிச் சொல்லவில்லையா? ஒன்று அவர் போக வேண்டும்; இல்லா விட்டால் நான் போக வேண்டும்..." என்று ஆத்திரமாகக் கூறிக் கொண்டிருந்தாள் லக்ஷ்மி.

ரகு பதில் சொன்னான்: "லக்ஷ்மி! உனக்குக் கொஞ்சம்கூடத் தந்திரம் தெரியவில்லையே. அப்பா வந்து மூன்று நாட்கள்தான் ஆகின்றன. அதற்குள் அவரை எப்படிப் போ என்று சொல்ல முடியும்? எனக்கு மட்டும் அவர் இங்கு இருப்பதில் சந்தோஷமா? கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அவரை இங்கிருந்து கிளப்ப வழி செய்ய வேண்டும்..."

என் பிள்ளையா இப்படிப் பேசுகிறான்? என் காதுகளை என்னால் நம்ப முடியவில்லையே! என் தலை சுற்றிற்று. கையில் கொண்டு வந்திருந்த செம்பு காவேரி ஜலம் கீழே விழுந்து உருண்டு ஓடிற்று. தடாலென்று நான் கீழே சாய்ந்து விட்டேன்.

கண்விழித்துப் பார்த்த போது விசுப்பலகையில் படுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. கால் அருகே ரகுநாதன் நின்று விசிறிக் கொண்டிருந்தான். நெஞ்சிலே கபடம். வெளியில் நன்றாக வேஷம் போடுகிறான்.

மயக்கம் தெளிந்த பிறகு ஒரு கவளம் கூடச் சாப்பிடவில்லை. பெட்டி படுக்கையுடன் கிளம்பி விட்டேன். ரகுநாதனும் அவன் மனைவியும் என்னை எவ்வளவோ தடுத்தார்கள்.

"அப்பா! இப்போது எங்கே போனீர்கள்? இங்கேயே இருக்கப் போவதாக அல்லவோ நினைத்துக் கொண்டிருந்தேன்? அதற்குள் கிளம்பி விட்டீர்களே..." என்று ரகு என் கைப்பெட்டியைப் பிடுங்கிக் கொண்டான்.

லக்ஷ்மியின் கண்களில் நீர் துளித்ததை என் கண்களால் நன்றாகப் பார்த்தேன். "நாங்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்..." என்று அங்கலாய்த்துக் கொண்டாள் அவள்.

நாடகமே உலகம் என்றுசொல்கிறார்கள். எவ்வளவு உண்மை நிறைந்த பழமொழி! இந்தச் சின்னஞ் சிறுசுகள் என் கண் முன்னே அரங்கம் கட்டி எவ்வளவு தத்ரூபமாக நாடகம் ஆடுகிறார்கள்?

பாரமான இதயத்துடன் வீட்டை விட்டு வெளியே வந்தேன். தைரியமாகக் கிளம்பி விட்டேனே தவிர, எங்கே போவது என்று தான் தெரியவில்லை.

என் மூத்த பெண் சரளாவுக்கு என்மீது கொள்ளைப் பிரியம். ரகுநாதனுக்கு அடுத்தாற் போல் பிறந்தவள் அவள். சின்ன வயதிலேயே நிறைகுடமாக இருந்தாள். எப்போதாவது என் சௌக்கியத்தைப் பற்றி விசாரித்து யாராவது கடிதம் எழுதினால் அது அவளாகத்தான் இருக்கும். சரளாவின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்: அவள் படிக்கும்போதும், கல்யாணமாகிப் புருஷன் வீடு போகும்போதும் என் கை பலமாகவே இருந்தது.

மாயவரத்திலிருந்து மூன்சீப் பிள்ளை ஒருவன் பெண் பார்த்து விட்டுப் போனான். பையன் வக்கீலுக்குப் படித்துக் கொண்டிருந்தான். கண்ணுக்கு லக்ஷணமாக இருந்த சரளாவை அவனுக்குப் பிடித்து விட்டது. சரளாவும் அவனைத்தான் கல்யாணம் செய்துகொள்வேன் என்று ஒரே துடியாக இருந்தாள். ஆனால் பையனைப் பெற்றவர் இந்தச் சம்பந்தம் வேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். அவர் அந்தஸ்துக்குச் சமமாக என் அந்தஸ்து இல்லைஎன்பது அவர் வாதம். பிள்ளை எனக்குத் தனியாகக் கடிதம் எழுதினான். நேரில் வந்து பேசிவிட்டுப் போனான். "என் அப்பாவை எப்படியாவது சரிக்கட்டித் திருமணத்தை முடித்து விடுங்கள்" என்று வற்புறுத்தினான். அதன் பலன், திருக்காட்டுப் பள்ளியில் கப்பல் போல் இருந்த ஒரு வீடும், பூர்விகமாக இருந்த நில புலன்களும் என் கையை விட்டுப் போயின. பிராவிடண்ட் பணத்தில் கடன் வேறு வந்து விழுந்தது.

சொத்துக்கள் போய்விட்டன என்றோ கடன் சுமை ஏறிவிட்டது என்றோ நான் கொஞ்சங் கூடக் கவலைப்படவில்லை. இரண்டு அன்பு இதயங்கள் ஒன்றுசேர என் சொத்து பயன் பட்டதே என்று உவகை அடைந்தேன்.

சரளாவும் கோஸ்வாமியும் ராமனும் சீதையும் போலக் குடித்தனம் நடத்துகிறார்கள் என்று சொல்லிக் கேட்டபோது அந்தச் செய்தி எனக்குத் தேனைப்போலத் தித்தித்தது.கடைசிக் காலத்தில் சரளாவுடன் இருக்கலாம் என்ற ஆசை என்னைவிட்டு அகலவில்லை. பெற்ற பிள்ளைதான் தன் மனைவியின் சொல்படி காவடி எடுக்கிறான் என்றால் பெண் கூடவா அப்படி இருந்து விடுவாள்? சரளாவிடமும் கோஸ்வாமியிடமும் எனக்கு ஒரு நம்பிக்கை யிருந்தது. அது வீண் போகக் கூடாது என்று மாத்ருபூதேசுவரரை வேண்டிக் கொண்டு ரயிலில் ஏறினேன்.

ரயில் வண்டி மாயவரம் ஜங்ஷனில் வந்து நின்றது. அகஸ்மாத்தாகக் கோஸ்வாமியை அங்கே சந்தித்து விட்டேன். ஏதோ காரியமாக அங்கு வந்த கோஸ்வாமி என்னைப் பார்த்தவுடன் பிரமித்து விட்டான்.

வாடகை வண்டி வைத்துக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தோம். கோஸ்வாமிக்குத் தொழில் நன்றாக நடக்கிறது போலும்! வீடும் வாசலும் பெரியதாக இருந்தது. வீடு முழுதும் நாகரிகமான தோற்றம் என் கண்களைப் பறித்தது.

என் வரவு தெரிந்தவுடன் சரளா இரண்டாங் கட்டிலிருந்து கைவளையல்கள் குலுங்க ஓடோடி வந்தாள். "வாங்கோ, அப்பா" என்று வாய் நிறையக் கூப்பிட்டாள். சரளாவின் மலர்ந்த முகத்தைக் கண்டு என்னுடைய உள்ளம் எக்காளம் போட்டது. உடல் முழுவதும் வைரம் கண்களைப் பறித்து விடுவதைப் போல்'டால'டித்து மின்னிக்கொண்டிருந்தது.

கோஸ்வாமியும் சரளாவும் எனக்கு விழுந்து விழுந்து உபசாரம் செய்தார்கள். எனக்குப் பிடித்தமான பொருள்களாகப் பார்த்து விதம்

விதமாகச் சமையல் செய்து போட்டாள் சரளா. கோஸ்வாமி 'மாமா! இங்கே கச்சேரி, இங்கே ஹரிகதை, இங்கே உபந்நியாசம்' என்று தினமும் ஒரு அலுவல் எனக்கு ஏற்படுத்திக் கொண்டிருந்தான்.

இப்படி ஒரு வாரம் கழிந்தது. மறுவாரம் முதல் நாள் காவேரி ஸ்நானம் செய்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். நான் வீட்டின் படியேறும் சமயத்தில் கோஸ்வாமி வெளியே வந்து கொண்டிருந்தான். என்னைப்



பார்த்தவுடன் பேசவுமில்லை, சிரிக்கவுமில்லை. எனக்கு மனம் வேதனைப்பட்டது.

உள்ளே சென்று மாற்றுடை யணிந்து ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்து ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தேன். சரளா சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். அவள் முகம் வாட்டம் அடைந்திருந்தது. துக்கத்தின் சாயல் அவள் கண்களில் தெரிந்தது.

''அப்பா....!'' என்றாள் சரளா.

''என்னம்மா?..'' என்று அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன்.

சரளா ஒரு பதிலும் கூறவில்லை. ஊஞ்சல் பலகையின் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள்.

''என்னம்மா சமாசாரம்?''

சரளாவின் முகம் ஜிவு ஜிவு என்று சிவந்து விட்டது. உடல் முழுவதும் உஷ்ணம் கொதித்தது. அவள் குலுங்கக் குலுங்க அழுதாள்.

எனக்கு உலகம் தெரியாதா? சரளா விக்கி விக்கி அழும் காரணம் எனக்குப் புரிந்து விட்டது. பாவம்! அவள் எனக்குப் பிறந்த பெண், என்னிடம் விஷயத்தை எப்படி விண்டு சொல்லுவாள்?

''கண்ணே சரளா! அழாதே அம்மா! என்னால் உனக்குச் சிரமம் ஏற்பட்டுவிட்டது. உன்னுடைய மன நிம்மதியைக் குலைத்துக் கொண்டு மேலும் இங்கு நான் இருக்க மாட்டேன்'' என்று அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டேன்.

என் உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டேன். சரளாவிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்துவிட்டேன். சரளா கண்ணீரும் கம்பலையுமாக எனக்கு விடை கொடுத்து அனுப்பினாள். ''அப்பா! உங்களை வைத்துக் காப்பாற்ற முடியாத பாவியாக நான் ஆகிவிட்டேனே!'' என்று கதறிக் கதறி அழுதாள்.

''சரளா! நீ இல்லையம்மா பாவி; நான் தான் பாவி. இல்லாவிட்டால் உன் அம்மா என்னை இப்படி நிராதரவாக விட்டு விட்டுச் செல்வாளா?'' என்று சொன்னேன் நான். என்னையே பாவி என்று அழைத்துக் கொள்ளும்போது எனக்கு ஒரு திருப்தி இருந்தது.

காவேரிக் கரையோரமாக நடந்து சென்று கொண்டிருந்தேன். வாகடத்துக்கு அருகில் இருக்கும் ஸ்நானக் கட்டத்தில் இருந்த சிறு கூட்டம் என்னைக் கவர்ந்தது. கூட்டத்துக்கு அருகே சென்று விசாரித்தேன்.

ஸ்நான கட்டத்துக்கு அருகே யிருந்த ஆலமரம் ஒன்று உளுத்துப் போய் விட்டது என்று ஏலத்துக்கு விட்டார்களாம். ஏலம் எடுக்கச் சேர்ந்த கூட்டம் அது என்று ஒருவர் விஷயத்தை விளக்கிச் சொன்னார். அவர்களுக்கு அருகேயிருந்த ஆலமரத்தைப் பார்த்தேன். இலையுதிர்ந்து கொம்பும் கிளையுமாக இருந்தது. ஒரு காலத்தில் அந்த மரம் எப்படி இருந்திருக்கும்? பசுமையான அதன் கிளைகளும், கம்பீரமான அதன் தோற்றமும் எல்லோர் மனத்தையும் கொள்ளை கொள்ளும் படி யல்லவோ இருந்திருக்கும்! இன்று அது உளுத்துப் போய் விட்டது. கொம்பும் கிளையுமாக மொட்டை மரம் என்று பெயர் எடுத்து விட்டது. அதோ அதை வெட்டித் தள்ளக் கோடரியும் ரம்பமுமாக ஆட்கள் வந்து கொண்டிருக்கின்றனர்....

மரத்தைப் பார்த்து நான் பெருமூச்சு விட்டேன்; அந்த மரத்துக்கும் எனக்கும் இப்போது என்ன வித்தியாசம்? அந்த மரத்தை இப்போது யார் சட்டை செய்கிறார்கள்....? அதே போல்தான் என்னையும் ஒருவரும் சட்டை செய்யவில்லை. கொம்போ கிளையோ வெட்டி வீழ்த்தப்படும் வரை அது மரமாகத் தானே நிற்க வேண்டும்? அதேபோல் என் காலம் முடியும் வரை நானும் இந்த உலகத்தில் இருந்து தானே ஆகவேண்டும்?

விவேகம் வந்தபோது ஆத்ம விசாரம் கூடவே வந்தது. சரீர சுகத்துக்கு எவ்வளவோ வழிகள் தேட முனைந்தேன்.. முடியவில்லை. ஆத்மாவுக்குச் சாந்தி ஏற்பட இப்போதாவது வழியுண்டா?

மாயூரநாதரின் தேவாலயத்தில் மாலை வேளை மணி ஒலித்தது. என்னுடைய ஆத்மா சாந்தி யடைய வழியொன்று பிறப்பதைப் போல் இருந்தது.

ஸ்தல யாத்திரை செய்பவர்களுக்கு ஸ்பெஷல் ரயில் வண்டி விடப் போவதாக அறிக்கையொன்று ஸ்டேஷன் பலகையில் தொங்கிற்று. ஆத்ம அநுபூதியடைய ஸ்தல யாத்திரை தவிரக் குடும்பிகளுக்கு வேறு என்ன மார்க்கம் இருக்கிறது?

ஸ்தல யாத்திரை செய்ய டிக்கட்டு ஒன்று உடனே வாங்கி விட்டேன்!

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

பாருங்கள்!

ஒரு அரை வில்லை
ஸன்லைட்தான்
இவ்வளவு சலவையும்
செய்து முடித்தது!

அதன் அதிகப்படியான நுரையே இதைச் சாதித்தது!



ஸன்லைட்
சோப்

பளிச்சென்று வெண்மையாக வெளுக்கிறது

S. 242-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon